# தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்

அழகப்பா பல்கலைக்கழகத்தில் தமிழ் முனைவர் (Ph.D.,)
பட்டத்திற்குப் பகுதி நிறைவாக அளிக்கப்பெறும் ஆய்வேடு (Thesis)

ஆய்வாளர்

**ஷா. பீமா பரிதா**
பதிவு எண்: 0298

நெறியாளர்

**பேரா. முனைவர். மு. பாண்டி**




தமிழ்த்துறை
அழகப்பா பல்கலைக்கழகம்
(தேசியத்தர நிர்ணயக்குழுவின் மறுதர மதிப்பீட்டில் 'A' மதிப்புப் பெற்றது)
காரைக்குடி - 630 003
இந்தியா.

செப்டம்பர் 2013

**பேரா. முனைவர். மு. பாண்டி,**
தமிழ்த்துறைத் தலைவர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003

நாள்:



**தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு, அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக என் மேற்பார்வையில் திருமதி. **ஷா. பீமாபரிதா** என்பவரால் மேற்கொள்ளப்பட்டது என்றும், இந்த ஆய்வு குறித்து ஆய்வாளருக்கு வேறு எந்த பட்டமும் அளிக்கப்படவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

நெறியாளர் கையொப்பம்

**ஷா. பீமா பரிதா,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003

நாள்:



**தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்** என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு, அழகப்பா பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இதற்கு முன்னர் எந்த பட்டமும் பெறுவதற்கு இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

ஆய்வாளர் கையொப்பம்
(ஷா. பீமா பரிதா)

நெறியாளர் கையொப்பம்

**பேரா. முனைவர். மு. பாண்டி**
தமிழ்த்துறைத் தலைவர்,
அழகப்பா பல்கலைக்கழகம்,
காரைக்குடி – 630 003

# நன்றியுரை

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு"

என் வெற்றிகளெல்லாம் ஊற்றுக்கண்ணாக இருந்து என்னை இந்நிலைக்கு தகுதிபெறச் செய்த என் பெற்றோருக்கு நெஞ்சார்ந்த நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்

**"தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்"** என்னும் தலைப்பில் ஆய்வு செய்ய அனுமதி வழங்கிய அழகப்பா பல்கலைக்கழகத்திற்கு என் முதற்கண் நன்றி.

பல்வேறு காரணமாத் தயங்கி இருந்தபோது எனக்கு மிகவும் ஊக்கமளித்து இவ்வாய்விற்கு மேற்பார்வையாளராக இருந்து தெளிந்த கருத்துக்கள் தகுந்த இடத்தில் அமைய வழிவகுத்து, கருத்து வேறுபாட்டில் சிறந்த விளக்கமளித்து, மாதவாக, பிதாவாக, குருவாக நின்று உதவிய தமிழ்த்துறைத் தலைவர் **முனைவர். மு. பாண்டி,** அவர்களுக்கு உளமார்ந்த நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

நான் தொடர்பு கொண்ட போதெல்லாம், தனது முதிர்ந்த வயதையும், பொருட்படுத்தாமல் நேரிலும், தொலைபேசியிலும் என்னோடு உரையாடி ஆய்விற்குப் பயன்பட்ட அரிய கருத்துக்களையும், எனது ஐயங்களை நீக்கி தெளிவுப் பெறச் செய்த படைப்பாளர் தோப்பில் முகமது மீரானுக்கும், அவரது துணைவியருக்கும் என் உள்ளம் நிறைந்த நன்றி.

நான் முனைவர் பட்டம் வாங்குவதற்கும் கல்விப் பாதையில் பயணம் செய்வதற்குப் பெரிதும் உறுதுணையாக இருந்து, என் ஆய்வுத் தொடர்பான நூல்களையும், தரவுகளையும் பெற்றுத் தந்து **'முனைவர்'** என்ற பட்டத்தை என்

பெயருக்கு முன் சூட்டி அழகு பார்க்க எண்ணிய மாமனார் **ப. காதர் மைதீன்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு சிறக்க அவ்வப்போது ஆலோசனைகள் வழங்கியதுடன் பல்வேறு ஆங்கில நூல்களிலிருந்து, இணையதளத்திலிருந்தும் ஆய்வுக்குத் தேவையான நூல்களைத் திரட்டித் தந்து என்னுடைய ஒவ்வொரு செயல்பாட்டிலும் உறுதுணையாகவும், வளர்ச்சிக்குத் துணையாகவும் இருக்கும் என் கணவருக்கு உள்ளம் கனிந்த நன்றியைக் காணிக்கையாக்குகிறேன்.

இல்லத்திலிருந்து எனது ஆய்வுப் பணி சிறக்கத் துணைபுரிந்த என் குடும்பத்தார் அனைவருக்கும் என் நன்றி கூறக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆய்வு நெறியாளரை அறிமுகப்படுத்தி என் ஆய்வக்கு முதன்மைக் காரணமாக இருந்து, ஆய்வுப் பணியை விரைவில் முடிக்க ஊக்கப்படுத்திய என் மாமாவின் நண்பருமான திரு. **தாமஸ்,** திரு. **மலைச்சாமி** மற்றும் திரு. **இராஜேந்திரன்** அவர்களுக்கு நன்றியை உரித்தாக்கிக் கொள்கிறேன்.

ஆய்வப் பொருள் பற்றி அடிக்கடி உரையாடி, நூல்கள் வழங்கி உதவியதுடன் ஆய்வுப் படிகளை வாசித்துச் செப்பம் செய்து உதவிய என் தோழி **பூ. தங்கம்** அவர்களுக்கு மிகுந்த நன்றியுடையேன்.

என் ஆய்வுக்குத் தேவையான நிதி உதவி வழங்கிய **மௌலானா ஆசாத் மத்திய நிறுவனத்திற்கு** என் நன்றி.

இவ்வாய்வேடு செம்மையாக அமைவதற்கு தட்டச்சு செய்து தந்த கணிப்பொறியாளர் **பா. செண்பகபெருமாள்** மற்றும் **ஸ்ரீபாலாஜி லேசர் பிரிண்டிங் பைண்டிங்** ஆகியோருக்கு நன்றி உரித்தாக்கிக் கொள்கிறேன்.

**ஷா. பீமா பரிதா.**

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| தொல்.பொருள் | - | தொல்காப்பியம் - பொருளதிகாரம் |
| நூற் | - | நுற்பா |
| தொல். | - | தொல்காப்பியம் |
| ப. | - | பக்கம் |
| பக். | - | பக்கங்கள் |
| பா. | - | பாடல் |
| புறம் | - | புறநானூறு |
| ஐங். | - | ஐங்குறுநூறு |
| மணி. | - | மணிமேகலை |
| கலி. | - | கலித்தொகை |
| குறள் | - | திருக்குறள் |
| குர்ஆன் | - | திருக்குர்ஆன் |
| அலை | - | அலைஹிவஸ்ஸல்லம் |
| மேலது | - | மேலே குறிப்பிட்டது |
| Vol. | - | Volume |
| Tr. | - | Translator |
| p. | - | Page |
| pp. | - | Pages |
| Ed. | - | Editor |

# பொருளடக்கம்

# முன்னுரை

இசுலாம் சமயக் கொள்கைகளைக் கருப்பொருளாகக் கொண்டு படைக்கப் பெற்ற தமிழ் நூல்கள் இசுலாமியத் தமிழ் இலக்கியங்கள் ஆகும். அவை தமிழ் இலக்கிய மரபில் முக்கியமான கூறாக அமைந்திருக்கின்றன. இவ்விலக்கியம் தனிமனிதனால் படைக்கப்பட்டது என்றாலும், தனிமனிதனாகிய படைப்பாளி சமூகத்தின் அனைத்து வாழ்வியல் தளங்களையும் உற்றுக் கவனிக்கின்றன. உற்றுக் கவனித்தலின் ஒட்டுமொத்தப் பயன்பாடே இலக்கியமாகும். இந்த இலக்கியத்திற்குள் சமூகத்தின் வாழ்வியல். வாழ்வியல் நெறி, பண்பாட்டு மரபுகள், சமயம், சமூக முரண்பாடுகள் போன்ற அனைத்துக் கூறுகளும் அடங்கியிருக்கின்றன. ஆகவேதான், ஒவ்வொரு காலகட்டத்திலும் தோற்றம் பெற்ற இலக்கியங்கள் அவ்வக்காலச் சமூகத்தின் காலக் கண்ணாடியாகத் திகழ்கின்றன என்று கூறுவர். சமூகத்தின் வாழ்வியல் தளம் இலக்கியத்தில் எவ்வாறு பதிவு செய்யப்பட்டிருக்கிறது. இலக்கியத்தில் பதிவு செய்யப்பட்ட வாழ்வியல் தளம் சமூகத்தில் எவ்வாறு நிகழ்த்தப்பட்டுக் கொண்டிருக்கிறது என்ற இரு கோணங்களில் கருத்தைச் செலுத்தியதன் விளைவாகத்தான் இலக்கியம் என்பது காலக்கண்ணாடி என்ற கருத்திற்கு வருகின்றனர்.

சமூகத்தின் மறுபிரதியாக விளங்குகிற இலக்கியத்தில் சமூகத்தைப் பற்றிய ஆய்வு முற்றிலும் பொருத்தமுடியாததாக அமைகிறது. இந்தச் சமூக ஆய்வை இலக்கியவாதிகள் இரண்டு நிலைகளில் நிகழ்த்துகின்றனர். ஒரு காலக்கட்டம், ஒரு பொருள், வடிவம் என ஏதாவது ஒன்றை வரையறை செய்து கொண்டு அவ்வரையறைக்குள் அடங்கிய இலக்கியங்கள் அனைத்தையும் ஆய்விற்கு உட்படுத்திச் சமூகத்தின் வாழ்வியல் தளத்தை வெளிக்கொணர்வது இரண்டாவது நிலையாகும். இந்த இரண்டாவது ஆய்வுத்தளத்தில் அமைந்தது இவ்வாய்வாகும். இதில் "தோப்பில் முகமது மீரான் படைத்த சிறுகதைகள்" அனைத்தும் ஆய்விற்கு உட்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வுத் தலைப்பு

இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகள் அனைத்தையும் எடுத்துக் கொண்டால் இவ்வாய்வின் எல்லையும் பரப்பும் விரிவடையும் ஆதலால் ஏதேனும் ஓர் இசுலாமியப்

படைப்பாளியின் சிறுகதைகளை எடுத்துக் கொண்டு அவற்றில் காணலாகும் இசுலாமிய சமயத்தின் பண்பாட்டுக் கூறுகளைக் கண்டறியும் முயற்சி வழிமேற்கொள்ளப்பட்டுள்ளது. இலக்கியங்கள் காலத்தின் கண்ணாடி, சமூகத் தேவையின் அடிப்படையில் உருவாவது என்றெல்லாம் இலக்கியத்திற்குப் பல விளக்கங்களைக் கூறினாலும் இலக்கியத்தின் அடிப்படையான நோக்கம் என்பது சமூகத் தகவல் ஒன்றை இலக்கிய அனுபவத்தோடு மக்களுக்கு வழங்குதலே ஆகும். படைப்பாளனுக்கும் வாசகனுக்கும் இடையிலான கருத்துப் பரிமாற்றம் இலக்கியத்தின் வழியாக நிகழ்வதை இது குறிக்கிறது. ஆக இலக்கியம் என்பது சமூகத்தைச் சுற்றிக் கட்டப்பட்டிருப்பதால் அதில் சமூகத்தைப் பற்றி ஆய்வு அடித்தளமாக அமைகிறது. இவ்வடித்தளத்தைக் கவனத்தில் கொண்டு தோப்பில் முகமது மீரான் படைப்பகளில் கட்டமைக்கப்பட்டிருக்கும் சமயக் கட்டமைப்பை வெளியே கொண்டு வரவேண்டும் என்பதற்காகத் "தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்" எனத் தலைப்புத் தேர்வு செய்து ஆய்வு நிகழ்த்தப்பட்டிருக்கிறது.

### ஆய்வின் நோக்கம்

சமூகத்தின் வாழிடம் காலம், மொழி, சமயம், இனம், சாதி போன்ற கூறுகளால் வாழ்க்கை நெறி பண்பாட்டு மரபுகள் போன்ற மாற்றம் பெறும். இந்த மாற்றம் சமூகத்தில் இன்றுவரை நிகழ்ந்து கொண்டுதான் இருக்கின்றன. அதேபோல் ஒரு பொதுக்கூறின் உள்ளேயும் இந்த வாழ்வியல் பண்பாட்டு மரபுகள் மாற்றம் பெற்றுக் கொண்டிருப்பதையும் மறுக்கமுடியாது. அதாவது வாழிடம் என்ற பொதுக்கூறில் தமிழ்நாட்டில் வாழ்கின்ற அனைவரும் ஒரே பண்பாட்டுத் தளத்தில் அடங்கிவிடுவதில்லை. மாவட்டம், வட்டம், ஊர் என ஒவ்வொரு இடத்திற்கு ஏற்ப அவர்களின் வாழ்நிலைப் பண்பாட்டு மரபுகள் மாற்றம் பெற்றுத் திகழ்கின்றன. அவ்வகையில் கன்னியாகுமரி மாவட்டத்தை வாழிடமாகக் கொண்டு வாழ்கிற மக்களின் வாழ்வியல், பண்பாட்டுப் பழக்கவழக்கங்கள் மரபுகள் போன்றன அவர்களின் வாழ்வியல் தளத்தை எவ்வாறு கட்டமைத்திருக்கின்றன. அக்கட்டமைப்புகளைத் தோப்பில் முகமது மீரான் தம் படைப்புகளில் எவ்வாறு பதிவு செய்திருக்கிறார் என்பதனை அவரது படைப்புகளிலிருந்து வெளிக்கொணர்வதே இவ்வாய்வின் நோக்கமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வின் பயன்பாடு

தோப்பில் முகமது மீரான் என்னும் சிறுகதை படைப்பாளியின் இசுலாமியத் தமிழ்ச் சிறுகதைகளில் வாழ்வியல் மெய்ம்மைகளும், சமய நம்பிக்கைகளும் பெண்களின் நிலைகளும், இசுலாமிய அறம் பற்றிய கூறுகளும் உள்ளன என்பதை நிறுவி அவற்றை வெளியுலகிற்குத் தெரியப்படுத்துவதற்குரிய ஊடகமாக இவ்வாய்வு அமையும். அதனால் தமிழ்ச் சிறுகதை இலக்கிய ஆய்விற்கும் குறிப்பாக இசுலாமியத் தமிழ் இலக்கிய ஆய்வின் வளர்ச்சிக்கும் இவ்வாய்வு பயன்பாடு உடையதாக அமையும். மேலும் வாழிடம், காலம், மொழி, சமயம், இனம், சாதி போன்ற கூறுகளைக் கொண்டதாகப் பகுத்து அக்கூறுகளுக்குள் அடங்கியிருக்கிற மக்களின் வாழ்வியல் பண்பாட்டுத் தளத்தை வெளிக்கொணர்வதன் மூலம் காலப்போக்கில் ஒரு பொதுத் தன்மையைக் கட்டமைப்பதற்கு இவ்வாய்வு துணை நிற்கும்.

## ஆய்வு முன்னோடிகள்

“தோப்பில் முகமது மீரான் கதைகளில் சமூக மதிப்பீடு” என்ற தலைப்பில் செ. சையது அலி, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இளநிறைஞர் பட்டத்திற்காகச் செய்த ஆய்வேடும், “தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் இசுலாமிய மகளிர்” என்ற தலைப்பில் நபிசாள் அவர்கள் செய்த இளநிறைஞர் பட்டத்திற்காக செய்த ஆய்வேடும், இதுகாறும் இவ்வாய்வு தொடர்பாக வெளிவந்துள்ள ஆய்வுகள், கட்டுரைகளாக வெளிவந்த ஆய்வுகள், நூல்களாக வந்த ஆய்வுகள் பல்கலைக்கழக ஆய்வுகளாக வெளிவந்தவை இவ்வாய்வின் முன்னோடி ஆய்வுகளாகும். மேற்கண்ட ஆய்வுகள் பல கோணங்களில் நிகழ்த்தப்பட்டிருந்தாலும் இசுலாமிய மக்களின் வாழ்வியல் நெறிகளையும், பண்பாட்டுப் பழக்கவழக்க மரபுகளையும் வெளிக்கொண்டு வரும் நோக்கில் ஆய்வுகள் செய்யப்படவில்லை. இவ்வடிப்படையில் “தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்” என்னும் தலைப்பில் ஆய்வு நிகழ்த்தப்பட்டிருக்கிறது. மேற்கண்ட ஆய்வுகள் அனைத்தையும் துணையாகக் கொண்டு பண்பாட்டுத் தளத்தோடு கூடியதாக இவ்வாய்வு அமைந்துள்ளது.

### ஆய்வு எல்லை

தோப்பில் முகமது மீரான் சிறுகதைத் தொகுப்பில் இடம் பெற்ற எழுபத்தி ஐந்து சிறுகதைகளும் இவ்வாய்விற்கு எல்லைகளாகக் கொள்ளப்பட்டுள்ளது.

### கருதுகோள்

இலக்கியம் என்பது வெற்று வெளியிலிருந்து தோன்றுவதில்லை. அது ஒரு குறிப்பிட்ட காலத்தின், சமூகத்தின் பின்னணியில் வாழும் மக்களின் வாழ்வியல் பதிவாகும். இலக்கியத்தைச் சமுதாயத்தின் பிரதி என்பர். இவ்வாய்வுக்குரிய சிறுகதைகளில் மக்களின் வாழ்க்கையோடு பின்னிப்பிணைந்த மனித உணர்ச்சிகள், போராட்டங்கள், சிக்கல்கள், பிரச்சினைகள், வட்டாரத் தன்மைகள், சமூக, சமய நிலைகள், மகளிர் நிலை போன்றவை பதிவு செய்யப் பெற்றிருக்க வேண்டும் என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### ஆய்வுச் சான்றுகள்

### முதன்மைச் சான்றுகள்

தோப்பில் முகமது மீரானின் 'வேர்களின் பேச்சு' என்னும் சிறுகதைத் தொகுப்பில் அடங்கியுள்ள எழுபத்தைந்து சிறுகதைகள் இவ்வாய்விற்கு முதன்மைச் சான்றுகளாகக் கொள்ளப்படுகின்றது.

### துணைமைச் சான்றுகள்

இவ்வாய்வுப் பொருள் தொடர்பாக இதுகாறும் வெளிவந்துள்ள சிறுகதைத் திறனாய்வு நூல்கள். இசுலாமிய இலக்கிய வரலாற்று நூல்கள், இலக்கிய ஆராய்ச்சி நூல்கள், தோப்பில் முகமது மீரான் படைப்பாற்றல் திறன் குறித்து வெளிவந்துள்ள திறனாய்வுக் கட்டுரைகள், நூல்கள், படைப்பாசிரியரின் பேட்டி, தோப்பில் முகமது மீரான் குறித்து மற்றவர்கள் அளித்த கருத்துக்கள், இதழ்கள் போன்ற பலவும் இவ்வாய்விற்குத் துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

### ஆய்வு அணுகுமுறை

ஆய்வு நோக்கில் தோப்பில் முகமது மீரான் சிறுகதைகளைப் பகுப்பதற்குப் பகுப்புமுறை (Classification Approach) அணுகுமுறையும், உள்ளடக்கக் கூறுகளை

விளக்கும் வகையில் விளக்கவியல் (Descriptive Approach) அணுகுமுறையும் சிறுகதையில் காணலாகும் சமுதாயக் கூறுகளைக் கண்டறிந்து சமுதாயச் சிக்கல்களை வெளிப்படுத்தும் விதமாகச் சமூகவியல் (Sociological Approach) அணுகுமுறையும் தோப்பில் முகமது மீரான் சிறுகதைகளில் பதிவு செய்யப்பட்டுள்ள இசுலாமிய சமய, சமூக வரலாற்றை வெளிக்கொணரும் வகையில் வரலாற்றியல் (Historical Approach) அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன. கன்னியாகுமரி மாவட்ட இசுலாமிய மக்களின் மனவெளிப்பாட்டைப் புலப்படுத்துவதற்கு உளவியல் அணுகுமுறையும் (Psychological Approach) இவ்வாய்வில் உட்படுத்தப்பட்டுள்ளது.

தோப்பில் முகமது மீரானின் சமூகச் சித்திரிப்புக் கருத்துக்களை மட்டுமின்றி வேறு சில கோணங்களில் பார்ப்பதற்குப் பல்துறைத் (Interdisciplinary Approach) அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலும் படைப்பாளியின் கருத்துக்கள் தொடர்பான தரவுகளைத் திரட்டுவதற்குப் பேட்டி, வினாநிரல் முறையும் பின்பற்றப்பட்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

### இயல் பகுப்பு

இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை

1. படைப்பாளரும் படைப்பாக்கப் பார்வையும்
2. சமய நம்பிக்கைகள்
3. சிறுகதைகளில் பெண்கள் நிலை
4. சிறுகதைகள் உணர்த்தும் இசுலாமிய அறம்

ஆய்வு அறிமுகம் என்னும் இப்பகுதியில் ஆய்வுத்தலைப்பு, விளக்கம், நோக்கம், பயன்பாடு, ஆய்வின் எல்லை, கருதுகோள், ஆய்வு முன்னோடிகள், முதன்மை, துணைமைச் சான்றுகள், ஆய்வு அணுகுமுறைகள், இயல்பகுப்புகள், இயல் விளக்கங்கள், முடிவுரை, துணைநூற்பட்டியல், பின்னிணைப்பு என வரிசைப்படுத்தப்பட்டுள்ளன.

**இயல் விளக்கங்கள்**

**"படைப்பாளரும் படைப்பாக்கப் பார்வையும்"** என்னும் முதல் இயலில் தோப்பில் முகமது மீரான் என்ற தனிமனிதனை மையப்படுத்தி ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. படைப்பாளனுக்கும் படைப்புகளுக்கும் உள்ள உறவு நிலையை விளக்கித் தோப்பில் முகமது மீரானின் இளமைக்கால வாழ்க்கை, கல்வி, பதவிகளும், பட்டங்களும் என்ற நிலையில் ஒரு கோணத்திலும், எழுதுகின்ற ஆர்வம், படைப்பாளராக உருவாக்கப் பெறுதல், சமயம், வட்டாரத்தின் மீது கொண்ட பற்று, அப்பற்றுதலால் வெளிபட்ட கதைக்கரு என்ற மற்றொரு கோணத்திலும் ஆய்வு செய்யப்பட்டு முக்கியக் கருத்துக்கள் வெளிக்கொணரப்பட்டுள்ளது.

**"சமய நம்பிக்கைகள்"** என்பது இரண்டாம் இயலாகும். மனிதன் உருவாக்கிக் கொண்ட நெறிகளாக, வாழ்க்கைக் கட்டமைப்புக்குப் பாதுகாப்புக் கவசமாகப் பழக்கவழக்கம், நம்பிக்கை, மரபு போன்றவை திகழ்கின்றன. இத்தகைய வாழ்க்கை நெறிப் பாதுகாப்பினைக் கன்னியாகுமரி மாவட்ட இசுலாமிய மக்கள் எவ்வாறு பின்பற்றி வாழ்க்கையைக் கட்டமைத்துக் கொண்டனர் என்ற நிலையில் ஆய்வு செய்யப்பட்டிருக்கிறது. இவ்வட்டார இசுலாமிய மக்களின் சமய, இறை, வானவர்கள், தர்ஹா, இறைவேதங்கள், பிறை, வழிபாடும் அதற்கு முந்தைய அழைப்பும், மறுமைநாள், இறுதி சடங்குகள் தொடர்பான நம்பிக்கைகளும் ஆய்வு செய்யப்பட்டு முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

**"சிறுகதைகளில் பெண்கள் நிலை"** என்னும் மூன்றாமியலில் பெண்கள் நிலையின் சொற்பொருள் விளக்கம், அகராதி தரும் விளக்கங்கள், பெண்கள் நிலைகளின் வரையறை, இலக்கியங்கள் கூறும் பெண்கள் நிலை, இசுலாமும் பெண்கள் நிலையும், இசுலாமிய வேதங்களுக்கு முற்பட்ட காலத்துப் பெண்கள் நிலை, திருமண வாழ்வில் பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள், வரதட்சணை, புராண காலம் முதல் இக்காலம் வரை வரதட்சணை (வேத காலத்தில் வரதட்சணை, சங்க காலத்தில் வரதட்சணை, மொகலாயர் காலத்தில் வரதட்சணை, இக்காலத்தில் வரதட்சணை) வரதட்ணையால் ஏற்படும் சமுதாயச் சீர்கேடுகள், விதவைநிலை, முதுமைநிலை, ஆணாதிக்கப் போக்கு முதலியவைப் பற்றி ஆய்வு செய்து முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன. ஆண் இனம் விதித்த கட்டுப்பாடுகளிலிருந்தும்

அடிமைத்தளத்தில் இருந்தும் பெண்கள் சமூகத்தை விடுவிப்பதற்காகச் சமூகச் சீர்திருத்தவாதிகள் களத்தில் குதித்தனர். அவர்களின் போராட்டத்தின் விளைவால் இன்றைய பெண் இனம் முழுச் சுதந்திரம் பெறவில்லை என்றாலும் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது என்பதனைப் பெண் இனம் ஒத்துக் கொண்டிருக்கிறது. பெண்களின் அடிமைத்தனத்தை விரட்டுவதற்கு முயன்ற சீர்திருத்தவாதிகள், போராடியதற்குத் துணை நின்றவர்கள், இலக்கியப் படைப்பாளர்கள், பெண்களுக்குச் சமூகம் கொடுத்த தாக்கத்தினையும், பெண்கள் அனுபவித்த கொடுமைகளையும் இலக்கியத்தின் வழி வெளிப்படுத்தியுள்ளார்கள் என்பதும் இவ்வியலில் தெளிவுபடுத்தப்பட்டுள்ளது.

**“சிறுகதைகள் உணர்த்தும் இசுலாமிய அறம்”** என்பது நான்காம் இயலாகும். உலகில் மனித இனம் வளர்ச்சிப் பெறத் தொட்ங்கிய காலத்திலிருந்து சமயமும், இலக்கியங்களும் வளர்ந்து வந்தன. சமயம் என்பது மனிதனைப் பண்படுத்தும் நோக்கில் உள்ளதாகும். அதைப்போல இலக்கியங்களும் ஒவ்வொரு காலகட்டத்தில் வாழ்ந்த மனிதர்களின் வாழ்க்கை நெறியை எடுத்துரைக்கின்றன. இதன்மூலம் அன்றைய காலகட்டத்தில் வாழ்ந்த மனிதர்களிடம் சமயமும் இலக்கியங்களும் ஒன்றுடன் ஒன்று இரண்டறக் கலந்து காணப்பட்டுள்ளன. மனிதனது வாழ்க்கை நெறியினை மேம்படுத்தக் கூடியதாய் அமைந்திருப்பது அறம். இவ்வறம் இன்றையக் காலக்கட்டத்தில் தனிமனிதன், சமூகம், சமயம் என எல்லா நிலைகளிலும் எவ்வாறு முதன்மை பெறுகிறது என்பதைப் பற்றி ஆய்வு செய்யப்பட்டிருக்கிறது. இவ்வியலில் அறம், பொருள் விளக்கம், இலக்கிய நோக்கில் அறம், வரையறை, இசுலாம் சமயம் கூறும் அறம், சிறுகதையில் இசுலாமிய ஒழுக்கவியல், வாழ்வியல் ஒழுக்கம், கூடா ஒழுக்கம் போன்றவை ஆய்வு செய்யப்பட்டு முடிவுகள் கண்டறியப்பட்டுள்ளன.

**ஆய்வு முடிவுரை**

ஆய்வு முடிவுரை என்னும் பகுதியில் இவ்வாய்வில் ஒவ்வொரு இயலிலும் கண்டறிந்த முடிவுகள் நிரல்படத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இவ்வாய்வு நிகழ்த்தப்பட்டதன் விளைவாக, மேலும் இந்தத் தளத்தில் என்னென்ன கூறுகளை

மையப்படுத்தி ஆய்வை மேற்கொள்ளலாம் என்ற கருத்தும் முடிவுரையில் தரப்பட்டுள்ளது.

ஆய்வு முடிவுரைப் பகுதியை அடுத்து இந்த ஆய்விற்குப் பயன்படுத்தப் பெற்ற முதன்மைச் சான்றுகள், துணைமைச் சான்றுகள், திறனாய்வு நூல்கள், ஆய்வு நூல்கள், ஆய்வு நெறிமுறை நூல்கள், திறனாய்வுக் கட்டுரைகள், தமிழ்ப் பேரகராதிகள், கலைக்களஞ்சியங்கள், ஆய்வு இதழ்கள், முனைவர், இளநிலைப்பட்ட ஆய்வேடுகள் துணைநூற்பட்டியலாகத் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்புகள்**

"தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள்" என்னும் இவ்வாய்வில் நான்கு பின்னிணைப்புகள் இடம் பெற்றுள்ளன.

**பின்னிணைப்பு ஒன்று**

துணைநூற்பட்டியலைத் தொடர்ந்து பின்னிணைப்புகளாகக் கன்னியாகுமரி மாவட்ட தேங்காய்ப்பட்டிணத்தின் வரைபடம் தரப்பட்டுள்ளது.

**பின்னிணைப்பு இரண்டு**

தோப்பில் முகமது மீரான் சிறுகதைகளில் இடம் பெற்றுள்ள இசுலாமிய சமயம் தொடர்பான அரபுச் சொற்களும், வட்டார வழக்குச் சொற்களும் அவற்றிற்குரிய பொருள்களுடன் தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு மூன்று**

தோப்பில் முகமது மீரான் சிறுகதைகள் வெளியான இதழ்களின் பெயர்கள், காலவரிசைப்பட்டியலுடன் வரிசைப்படி தரப்பட்டுள்ளன.

**பின்னிணைப்பு நான்கு**

தோப்பில் முகமது மீரான் பெற்ற சாகித்ய அகாடெமி விருது மற்றும் ஆய்வாளருக்குத் தோப்பில் முகமது மீரான் நேர்காணலின் போது அளித்த பதில்கள், படைப்பாசிரியர் தொடர்பான புகைபடங்கள் ஆகியன தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

# இயல் - 1

## படைப்பாளரும் படைப்பாக்கப் பார்வையும்

பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தமிழ் இலக்கியத்தின் பரப்பிலும், வடிவத்திலும் பல மாற்றங்கள் ஏற்பட்டன. குறிப்பாகப் பத்திரிக்கைத் தமிழ் உரைநடையில் மிகப் பெரிய மாறுதல்களைக் கொண்டு வந்தது. தமிழில் உரைநடை வடிவங்கள் செழித்து வளர்ந்ததால் கதைகளும், கட்டுரைகளும் பெருகின. இலக்கிய உலகில் பல்வேறு இலக்கிய வடிவங்கள் உருப்பெறலாயின. இவ்விலக்கியங்கள் வழிச் சமூக ஆய்வை மேற்கொள்ளும்பொழுது அவ்விலக்கியங்கள் தோன்றிய காலகட்டங்களையும், அதைப் படைத்தவர்களின் வாழ்க்கைச் சூழலையும் ஆய்ந்தறிதல் மிகவும் இன்றியமையாததாகக் கருதப்படுகிறது. ஏனெனில் படைப்பாளி சமூகத்தில் ஓர் உறுப்பாக வாழ்கிறார். தனிமனிதச் செயல்பாடுகள் அனைத்தையும் அப்படைப்பாளி பார்க்கிறார். அவர் சமூகச் செயல்பாடுகள், தனிமனிதச் செயல்பாடுகள் ஆகியவற்றொடு இணைந்தும் சில நேரங்களில் முரண்பட்டும் வாழ்கிறார். இப்படிச் சாதாரண மனிதனாக வாழும் அவர் காலப்போக்கில் படைப்பாளராக மாறுகிறார். இவ்வாறு படைப்பாளராக மாறும்போது அவரது தனிப்பட்ட வாழ்க்கையில் நடந்த, சந்தித்த, அவரோடு முரண்பட்டுப்போன அனைத்தையும் தன் படைப்பில் பதிவு செய்கிறார். ஆகவே சமூகத்தைப் பற்றி அவர் பதிவு செய்தவற்றையும் சமூகத்தை அவர் பார்த்த கோணத்தையும் வெளிக்கொண்டு வருவதற்குப் படைப்பாளரைப் பற்றிய ஆய்வும் இன்றியமையாத ஒன்றாகிறது. அவ்வகையில் படைப்பாளரின் வாழ்க்கை நிலை. அவர் சார்ந்திருக்கின்ற சமூகம் ஆகியவற்றின் அடித்தளங்களைக் காண்பது இன்றியமையததாகிறது. இவ்வடித்தளங்களைக் காண்பதன் மூலம் படைப்புக்களின் உருவாக்கத்திற்கு இவையெல்லாம் எவ்வகையில் அடித்தளமாக இருந்தன என்பதை வெளிக்கொணர முடியும். இவ்வடித்தளக் கருத்ததாக்கத்தை அடிப்படையாகக் கொண்டு தோப்பில் முகமது மீரான் பற்றியும் அவரது படைப்பாக்கம் பற்றியும் இவ்வியலின் கண் ஆராயப்படுகிறது. அவை

1.1 படைப்பாளர் அறிமுகம்

1.2 படைப்பாளரின் நிலை

1.3 இளமைப் பருவமும் எழுத்துத்திறனும்

1.4 படைப்புகள்

1.5 பரிசுகளும் விருதுகளும்

1.6 படைப்பிலக்கியவாதியும் படைப்புச் சூழலும்

1.7 மொழி வழக்கு

1.8 புதின ஆசிரியர்

1.9 சிறுகதையாசிரியர்

1.10 கதைக்கரு

1.11 கதைச்சுருக்கம்

1.12 படைப்பாளரின் சமயம்

தொகுப்புரை - என்பனவாகும்.

## 1.1 படைப்பாளர் அறிமுகம்

ஒரு படைப்பாளரைப் பற்றி முழுமையாக அறிந்து கொண்டால்தான் அவரது படைப்புகளைப் பற்றி அறிந்து கொள்ள முடியும். அவர் எந்தச் சூழ்நிலைகளில் தன்னுடைய படைப்புக்களை எவ்வாறு படைத்திருக்கிறார் என்பதை முழுமையாக அறிய படைப்பாளரைப் பற்றிய ஆய்வு மேற்கொள்ள வேண்டியுள்ளது. “சமூகவியலின் தந்தை என்று போற்றப்படும் தெயின், “ஒரு படைப்பை வாசிக்கின்ற பொழுதோ அல்லது அவற்றை ஆய்வு மேற்கொள்கின்ற நிலையிலோ படைப்பாளரைப் பற்றிக் கட்டாயம் அறிந்து கொள்வது அவசியமாகும். அப்போது தான் அவன் சமூகத்தை நோக்கிய அடித்தளத்தின் உண்மையை அறிந்து கொள்ள முடியும்”[1] என்கிறார். “வங்காளப் புதினங்களின் சமூகவியல்” என்னும் தலைப்பில் ஆய்வை மேற்கொண்ட சமூகவியலார் தீட்சித் குமார். எழுத்தாளர்களை அல்லது இலக்கியப் படைப்பாளர்களை மையமாகக் கொண்ட சமூகவில் ஆய்வை மேற்கொள்ளும்போது பரிந்துரை செய்வதுடன் படைப்பாளனுக்கு அவன் படைத்த படைப்புக்களும் இன்றியமையாதது”[2] எனப் பரிந்துரை செய்கிறார். இக்கருத்தை அடியொட்டி மீனாட்சி முருகரத்தினமும் “ஒவ்வொரு படைப்பாளனும் இரண்டு கூறுகளைத் தன்னுட் கொண்டவன். ஒருபுறம் தனிப்பட்ட வாழ்க்கை கொண்ட ஒரு மனிதன். மறுபுறம் பொதுமை நிலை கொண்ட ஒரு படைப்பாளன் அந்த மனிதனைப் புரிந்து கொள்ள அவன் தனிவாழ்வு தேவை. அந்தக் கலைஞனைப் புரிந்து கொள்ள

அவன் தனிவாழ்வு தேவை. அந்தக் கலைஞனைப் புரிந்துக் கொள்ள அவன் கலையே தேவை"[3] என்கிறார். எனவே படைப்பாளரைப் பற்றி ஆய்வு செய்வதன் மூலம் அவரது குடும்பச் சூழ்நிலை, கல்வி, தொழில், திருமணம், வாழ்வு. அவரின் சமயம், இனம் ஆகியவற்றின் அடிப்படையில் அவர் சார்ந்துள்ள சமூகப் பிரிவை வரையறை செய்து கொள்ள முடியும்.

படைப்பாளரைப் பற்றி ஆய்வு செய்வதன் மூலம்தான் படைப்பிலக்கிய ஆய்வை முழுமை பெறச் செய்ய முடியும் என்ற முடிவுக்கு வரமுடியும். மேலும் இதன் மூலம் படைப்பாளரின் ஆளுமையும் வெளிப்படக் காணலாம். சான்றாகப் பட்டுக்கோட்டைக் கல்யாணசுந்தரம் தம் பாடல்களில் பொதுவுடைமைக் கருத்துக்களை வெளிப்படுத்த தவறியதில்லை. ருஷ்யப் புதின ஆசிரியரான டால்ஸ்டாய் செல்வம் நிறைந்த உயர்குடியில் பிறந்தும் சாதாரண ஏழை மக்களின் நிலையை நடப்பியலாகப் படைத்துக் காட்டினார். இவர்கள் உருவாவதற்கு இவர்களின் இயக்கத் தாக்கமும் அடிப்படைக் காரணம் எனக் கூற வாய்ப்பிருக்கிறது. எனவே படைப்பாளர்களைப் பற்றிய ஆய்வு மேற்கொள்வது என்பது இங்கே தேவையான ஒன்றாக இருக்கிறது.

## 1.2 படைப்பாளரின் நிலை

இலக்கியப் படைப்பாளன் என்பவன் சமூகத்திலிருந்து ஒதுங்கியவன் அல்லது உயர்ந்தவன் என்பதன்று. அவன் சமூகப் பிறப்பு வளர்ச்சியிலிருந்து தனிமைப்பட்டவனும் அல்லன். இந்தச் சமூகத்தில் அவனும் ஓர் உறுப்பினன். சமூகத்திற்கு இருக்கும் அனைத்துப் பண்புகளும், முரண்பாடுகளும், வெற்றி தோல்விகளும் அவனுக்கும் உண்டு. எந்தளவிற்கு ஆழமாகச் சமூகத்தை நோக்குகிறானோ அந்த அளவிற்குச் சமாதானச் சமுதாயத்தைப் பற்றிய சிந்தனையிலும் ஆழ்ந்து ஈடுபட்டு அனைத்துப் படைப்புகளிலும் தன் மனச்சிந்தனையின் நோக்கினை வெளிப்படுத்துகிறான். படைப்பாளனின் படைப்புகளில் சமுதாயத்தைப் பற்றிய தெளிவு சரியாக அமைய வேண்டும்.

"உண்மையிலேயே பெருமைக்குரிய தலைசிறந்த படைப்பாளனே தனது காலத்தைப் பற்றி முழுமையாக வெளிப்படுத்தும் தகுதியுடையவனாக விளங்குகிறான். முக்கியமாக ஒரு நாட்டையும் காலத்தையும் சார்ந்தவனாக

அந்நாட்டிற்குக் காலத்திற்கும் சார்பாளனாக விளங்குகிறான்"[4] எனப் படைப்பாளன் சிறப்புக் குறித்து மறைமலை தம் நூலில் சுட்டிச் சொல்கிறார்.

சமூக வாழ்க்கையும் மனோபாவமும் ஒவ்வொரு மனிதனின் மீதும் கட்டுப்பாட்டுடன் கூடிய சுதந்திரத்துடன் வீசுகின்றன. இந்த வீச்சுக்களை அனைவரும் எதிர்கொள்ளத்தான் செய்கின்றனர். ஆனால் கலையுணர்வு படைத்த மனிதன் மட்டும் இவ்வீச்சுக்களை ஆழமாகப் பதிவு செய்து கொள்கிறான். அவன் பதிவு செய்து கொண்ட நிகழ்வுகளை மற்ற மனிதர்களோடு பகிர்ந்து கொள்ள விரும்புகிறான். அவ்விருப்பத்தின் வெளிப்பாடே இலக்கியப் படைப்பாக உருவாக்கம் பெறுகிறது. மேலும் ஒரு படைப்பாளன் தான் ஆழமாகப் பதிவு செய்த நிகழ்வோடு அவன் இலக்கியத்தின் மீது கொண்டிருக்கும் ஆர்வம், அவனுக்கு இருக்கும் கற்பனைத்திறன், அவன் தேர்ந்தெடுக்கின்ற இலக்கிய வடிவம் ஆகியவற்றைப் பொறுத்துக் கதையாக, நாடகமாக வெளிப்படுகின்றது. ஆகவேதான், "கலையை அவன் உருவாக்குகிறான் என்பதைவிடக் கலை அவனை உருவாக்குகிறது"[5] என்று கூறுகிறார். மீனாட்சி முருகரத்தினம், படைப்பாளன் பாத்திரத்தை உருவாக்குகிறான் என்பதைவிட அந்த மண்ணில் சமகாலச் சமூகத்தின் நிகழ்வுகளைப் பிரதிபலிக்கிறான் என்று கூறுவது பொருத்தமுடையது ஆகும்.

படைப்பாளனையும் அவனது படைப்புக்களையும் குறித்து லியோ டால்ஸ்டாய் கூறும் கருத்து இங்கு நோக்கத்தக்கது. "கலைஞன் என்ன சொல்கிறான், எப்படிச் சொல்கிறான். எவ்வளவு உணர்வுப்பூர்வமாகச் சொல்கிறான் என்பதைப் பொறுத்து ஒரு கலைப்படைப்பு நல்லதாகவோ கெட்டதாகவோ இருக்கிறது"[6]. எனவே ஒரு படைப்பாளனின் மனத்தைப் பாதித்த நிகழ்வுகள் எத்தகையானது. அவை சமூக வளர்ச்சிக்கு அல்லது சமூக மாற்றத்திற்கு எவ்வகையில் துணை நிற்கும் என்பதைப் பொறுத்துத்தான் படைப்பு சிறப்புப் பெறுகிறது. படைப்பாளனின் வாழ்க்கைத்தளம், அவன் பிறப்பு, குடும்ப வாழ்க்கை போன்ற அனைத்துத் தாக்குதல்களும் ஒரு படைப்பிற்கு உந்துதல்களாக அமைகின்றன. ஒரு படைப்பாளன் தான் வளர்ந்த சூழலை மையமாக வைத்தே படைப்பைப் படைக்கப்படுகின்றான். அத்தகைய படைப்புகளைப் படைக்கும் படைப்பாளர்களின் வரிசையில் படைப்பாளர் தோப்பில் முகமது மீரான் தனக்கென ஒரு தனிப்பாணியை வகுத்துக் கொண்டு இசுலாமிய மக்களின் நடைமுறை வாழ்க்கையைப் படைப்பாகப் படைத்துள்ளார்.

## 1.3 இளமைப்பருவமும் எழுத்துத்திறனும்

தோப்பில் முகமது மீரான் அவர்கள் செப்டம்பர் 26 நாள் 1944 ஆம் ஆண்டு கன்னியாகுமரி மாவட்டத்தில் தேங்காய்ப்பட்டினம் என்ற ஊரில் ஜனாப் (திரு). முகமது அப்துல் காதர், முகமது பாத்திமா தம்பதியருக்கு மகனாய்ப் பிறந்தார். இவரது மனைவியின் பெயர் ஜலிலா மீரான். முகமது மீரான் வீட்டின் பெயர் 'தோப்பு' என்பதாகும். இதன் அடிப்படையில்தான் முகமது மீரான் அவர்கள் "தோப்பில் முகமது மீரான்" என அனைவராலும் அன்புடன் அழைக்கப்படுகிறார்.

மீரான் அவர்கள் தேங்காய்ப்பட்டணம் அரசு தொடக்கப் பள்ளியில் தனது கல்வியைத் தொடங்கித் தனது உயர்நிலைப் படிப்பை அம்சி உயர்நிலைப் பள்ளியில் முடித்தார். அதன்பின்பு தனது கல்லூரிப் படிப்பை நாகர்கோவிலில் உள்ள தெ.தி. இந்துக் கல்லூரியில் பயின்றார்.

முகமது மீரான் அவர்களின் படைப்புக்கள் பெரும்பாலும் அடித்தள மக்களை நோக்கிய பார்வையாகவே அமைந்திருக்கின்றன. அதோடு தனது சமயம் சார்ந்த பிரதிபலிப்புக்களைக் காட்டும் விதமாகவும் அமைந்திருப்பது குறிப்பிடத்தகுந்த அம்சமாகும்.

முகமது மீரான் அவர்கள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட போதிலும் கல்வி பயின்றது மலையாள மொழியிலாகும். "அங்குமில்லை இங்குமில்லை என்கிற நிலையாகிவிட்டது. எனக்குத் தெரிஞ்ச வழி தமிழ் கொஞ்சம் அரபி, கொஞ்சம் மலையாளம் எல்லாம் கலந்து மனசில் உதயமாகிறது. எல்லாம் அப்படியே எழுதிக்கிட்டிருப்பேன்"[7] என்று நானும் என் எழுத்தும் என்ற நூலில் தனது எழுத்தார்வம் பற்றிக் கூறுகிறார். முகமது மீரானின் சொந்த ஊர் தமிழ்நாடு, கேரள எல்லையில் அமைந்துள்ள தேங்காய்ப்பட்டினம் என்பதால் அங்குக் கேரள நாட்டு மலையாள மொழியின் தாக்கம் இருக்கும். இதன் காரணமாகவே இவர் தனது படைப்புக்களை மலையாளத்தில் முதலில் எழுதினார். பின்னர் படைப்புக்களைத் தமிழில் மாற்றிக் கொண்டார்.

### 1.4 படைப்புகள்

தோப்பில் முகமது மீரானின் படைப்புக்கள் பிறை, மதி-நா, முஸ்லீம் முரசு, மலர்மதி, நண்பர் வட்டம், சுபமங்களா, இந்தியா டுடே, புதிய பார்வை, செம்மலா', இந்தியா டுடே இலக்கிய ஆண்டுமலர், அமுதசுரபி, கல்கி, இதயம் பேசுகிறது, பாவு இஸ்லாமியப் பண்பாட்டுத் தொகை நூல், ஓம் சக்தி தீபாவளி மலர், தமிழரசு இலக்கிய மலர், சங்கொலி, கணையாழி, சிந்தனைச் சுரம், யுகம் மாறும். ஆரண்யம், குமுதம், தினமணி ஈகைப் பெருநாள் மலர், தினத்தந்தி, ஆகிய இதழ்களில் வெளிவந்தன. இவ்விதழ்களின் மூலம் தனது இலக்கிய வளர்ச்சியைப் பெற்றுள்ளார். தோப்பில் முகமது மீரானின் நாற்பதாண்டு கால இலக்கிய வாழ்க்கையை மூன்று காலக்கட்டமாகப் பிரித்துக் கொள்ளலாம். அவை.

- 1968 முதல் 1981 வரை முதல் காலக்கட்டம்
- 1982 முதல் 1995 வரை இரண்டாம் காலக்கட்டம்
- 1996க்கு பின்னர் இன்று வரை மூன்றாவது காலக்கட்டம்

1968 முதல் 1981 வரைக்கும் உட்பட்ட காலக்கட்டத்தில் நரகம் பூமியில்! விளக்கு, தலைப்பெருநாள், தஜ்ஜால் மேல் விழுந்த மலை, கத்தச் சோறு, 'பவர்'க்காரி, கடல், அன்புக்கு முதுமை இல்லை, பொன்னரை ஞாண், துறைமுகம், நேற்று வந்த வழி, கறவை தீர்ந்த மாடு, இறக்கை இழந்த பறவைகள், ஒரு செருப்பின் கதை, மொட்டைக் கடிதம் முதலிய சிறுகதைகள் வெளிவந்தன.

1982 முதல் 1995 வரைக்கும் உட்பட்ட காலக்கட்டத்தில் ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை, ஒரு சூரியன் எரிகிறது. ஒரு மவ்லவியின் மரணம், ஒரு தெருவின் சுயசரித்திரத்திலிருந்து, ஓர் இரங்கல்பா, இதை எப்படி நிறுத்துவது? சூரியனைப் பிரசவிக்கும் பாறை, கருந்தேளின் கொடுக்குகள், இன்று நான், நாளை நீ!, கொலுசு அணிந்த பாதங்கள், ஓர் உஸ்தாதின் அகமியம், நெட்டோகாலி என்ற நூறுல் ஹஸன், சுருட்டுப்பா, குரு, வாரிசு, யாத்திரை, தங்கராசு, அனந்தசயனம் காலனி, வட்டக்கண்ணாடி, உம்மாவின் ருஹ், காலத்தின் ஆவர்த்தனம், சன்னதியில், வேட்டமங்கல யானை, சாயமுகங்கள், ஒமவல்லி, தவம் முதலிய சிறுகதைகளும் ஒரு கடலோரக் கிராமத்தின் கதை, துறைமுகம் கூனன் தோப்பு ஆகிய புதினங்களும் வெளிவந்தன.

1996க்குப் பின்னுள்ள காலம் மூன்றாவது காலக்கட்டமாகும். இக்காலக்கட்டத்தில் குட்டி ஆடு, உள்வனம், கடிகாரம் பேரன், மயானங்கள் சுட்சும இடைவெளி, 45-வது வார்டு வேட்பாளர், ஒரு பஸ் பயணத்தின்போது வானவர்கள் செல்லுமிடங்கள், குட்டன் பிள்ளை சார், பிறப்பின் விசித்திரம் ஏணி, பச்சை நிறக் கார், மாளிகை வீடு, களியோடக்கா, புதையல், ஒரு குட்டித்தீவின் வரைபடம், காலண்டர் பாாவா, நிற்காத கால், அஸ்தமனம், முன்னோர்களின் இரண்டாவது நல்லடக்கம், தலைக்குளம், பண்டமாற்று, அடையாளங்கள், மிஸ்டர் மார்ட்டீன், இரைகள், ஒரு மாமரமும் கொஞ்சம் பறவைகளும், நாராயண முதலித்தெரு 52-ஆம் நம்பர் வீடு, அப்துல்லா இப்னு அபூபக்கர், தங்கவயல், ஒரு சவஊர்தியின் நகர்வலம், 1100ஆம் ஆண்டு மகர மாசம் 18ஆம் தேதி வில்பத்திரம், தலையில் துண்டு கட்டிய பெண் ஆகிய சிறுகதைகளும் சாய்வு நாற்காலி, அஞ்சுவண்ணம் தெரு போன்ற புதினங்களும் தெய்வத்தின் கண்ணே என்ற மொழி பெயர்ப்பு நூலும், வைக்கம் முகமது பஷீரின் வாழ்க்கை வரலாறு என்ற ஆய்வுக் கட்டுரைகளும் வெளிவந்தன.

## 1.5 பரிசுகளும் விருதுகளும்

- சாகித்திய அகாதமி விருது – சாய்வு நாற்காலி (1997)
- தமிழ்நாடு கலை இலக்கியப் பெருமன்ற விருது
- இலக்கியச் சிந்தனை விருது
- லில்லி தேவசிகாமணி விருது
- தமிழக அரசு விருது
- அமுதன் அடிகள் இலக்கிய விருது
- தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்க விருது – போன்ற விருதுகளையும், பரிசுகளையும் தோப்பில் முகமது மீரான் பெற்றுள்ளார். இவரது கதைகள் - கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங்களிலும் பாடநூல்களாக இருந்தன.

தோப்பில் முகமது மீரான் கதைகள் ஆங்கிலம், மலையாளம், ஜெர்மன், இந்தி மொழிகளில் பெயர்க்கப்பட்டுள்ளன. பரிசுகளும், விருதுகளும் இவரது நோக்கமல்ல. “இந்த சமுதாயத்தைச் சுரண்டி வாழக்கூடியவர்கள் வாழ்க்கைத்

தரத்தை வெளிக்காட்டனும். இதைக் களை எடுக்கணும் என்கிற ஒரே குறிக்கோள். அதில் புகழ் கிடைக்கனும். பாராட்டுக் கிடைக்கனும் என்கிற மற்ற நாவலாசிரியர்க்குரிய எண்ணம் கிடைக்கவில்லை. ஒரே எண்ணம். ஒரே எதிர்ப்புள்ளம். அந்த எண்ணத்தோடு தான் நான் எழுதிவிட்டிருந்தேன்"[8] – என்று கூறியதன் வாயிலாக இவரது நோக்கத்தை அறிய முடிகிறது.

## 1.6 படைப்பிலக்கியவாதியும் படைப்புச் சூழலும்

இலக்கியம் ஒரு படைப்புக் கலை. அதனைப் படைப்பவன் படைப்பிலக்கியவாதி ஆவான். அவன் தனது அனுபவங்களைச் சிறந்த படைப்பாக உருவாக்குகின்றான். "தானறிந்த செய்தியைப் பிறர்க்குச் சொல்லுதல் என்பது மனிதனுக்கு இய்லபாய் அமைந்த ஒரு பண்பு, இலக்கியப் படைப்போனுக்கு இந்த உணர்வே அடிப்படையாக அமைந்து இலக்கியம் படைக்கத் தூண்டுகிறது. எனவே படிப்போர்க்கு செய்தியினைத் தர வேண்டும் என்பது படைப்பாளர்க்குப் புறக்கணிக்க முடியாத கடன். படைப்பாளர் சமுதாயத்தை விட்டுத் தனித்து நிற்பவர் அல்லர். சமுதாயத்தில் வாழும் மற்ற மனிதரைப் போலவே பசி, தூக்கம், சினம், மகிழ்ச்சி, வெறுப்பு, காமம் போன்ற உணர்ச்சிகளுக்கு ஆட்படுகின்றவர்களே தமக்கிருப்பது போன்ற தம்மையொத்த மனிதரின் உணர்ச்சியைப் புரிந்து கொள்ளக் கூடியவர். எனவே அவர் தம் படைப்பு பெரிதும் மாந்தரின் இத்தகைய உணர்ச்சிகளை வெளிப்படுத்துவதாய் அமையும்"[9] என்பர்.

க. கைலாசபதி படைப்பாளிகளை மூவகையாகப் பகுத்துக் காணுகின்றார். "ஒரு பிரிவினர் பிரச்சினைகளையும், முரண்பாடுகளையும், துன்பதுயரங்களையும் எதிர் நோக்காதவராய் அவற்றுடன் சம்பந்தப்படாமல் இன்பமூட்டுவதையே எழுத்தின் தலையாய நோக்கமாகக் கொண்டு அதற்கியையக் கற்பனைச் சம்பவங்களையும், கதைகளையும், உணர்ச்சிகளையும் இலக்கியமாக்குபவர்கள்.

இன்னொரு பிரிவினர் சமுதாய முரண்பாடுகளையும், பிரச்சினைகளையும் ஓரளவு நோக்கி அவற்றைத் தனது எழுத்தின் பொருளாகக் கொள்பவர்கள். சமுதாயப் பிரச்சினைகள் இடம் பெறுவதை இவர்கள் ஏற்றுக் கொள்கின்றனர். எனினும் தமது கடமை அல்லது பொறுப்பு அவற்றைத் யதார்த்தமாகச் சித்திரித்து

விடுவது என்று கருதுகின்றனர். காலப்போக்கில் சமுதாயம் திருந்தும் என்ற நம்பிக்கை இவர்களுக்குண்டு.

மூன்றாவது பிரிவினர் சமுதாயத்தை நுணுக்கமாய்ப் பிரதிபலிப்பது மட்டுமின்றி அதனை மாற்றி அமைக்கும் பணியில் பங்கு பெறுவதுடன், அப்பணி வெற்றி பெறுவதற்குரிய மாற்றங்களை இலக்கியப் பொருளாகத் துணிந்து ஏற்றுக் கொள்வதும் இன்றையத் தேவையாகும் என வற்புறுத்துகின்றனர். இதில் மூன்றாவது பிரிவினர் தலைசிறந்த படைப்பாளிகளகக் கருதப்படும் தகைமை உடையவர்கள்"[10]. இம்மூன்று வகையான படைப்பாளிகளுள் மூன்றாவது வகையில் அடங்குவர் தோப்பில் முகமது மீரான். இவரது சிறுகதைகளும், புதினங்களும் அவர் வாழ்ந்த கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள தேங்காய்ப்பட்டின இசுலாமிய மக்களின் வாழ்வியலை மிக எதார்த்தமாக விளக்கியிருப்பதுடன் வாழ வேண்டும் என்பதற்காக வாழ்க்கையோடு அவர்கள் போராடும் போராட்ட நிகழ்வுகளையும் பதிவு செய்திருப்பதே இதற்குக் காரணமாகும் எனலாம்.

படைப்பாளிகள் வாழ்வில் எதிர்ப்படும் மக்களும், நிகழ்ச்சிகளும், கதைகளுக்குக் கருவாவது போலவே அவர்களாகவே முயன்று அறிந்து கொள்ளும் அவர்களுக்குத் தொடர்பில்லாத மக்களின் வாழ்க்கையும் கூடக் கதைக் கருவாக அமைகின்றன.

படைப்பாளிகள் தம் மனதில் தேங்கிக் கிடக்கும் உணர்வுகளை அவ்வாறே படைப்பதில்லை. அவற்றைப் பல்வேறு உத்திகளைக் கையாண்டு "சமுதாயம் ஏற்றுக் கொள்ளத்தக்க வகையில் உருமாற்றிக் கவிதையாகவோ, நாடகமாகவோ, கதையாகவோ தருகிறார்கள்"[11] என்று அ.அ. மணவாளன் கூறுவார்.

படைப்பாளிகள் குறித்துப் ஃபிராய்டு குறிப்பிடும்போது "படைப்பாளி ஓர் அக நோக்காளன் (Introvert) இவனுக்கும், நரம்பு நோயாளிக்கும் மிகுந்த வேறுபாடு இல்லை. இவனது ஆசைகள் நிறைவேற்ற முடியாத போது மனத்திற்குள்ளே அமுக்கப்படுகிறது. தன் மனத்தில் உள்ள காதலை நிறைவேற்றிக் கொள்ளும் வல்லமை உள்ளவனாக விளங்க வேண்டும் என்பதே இவனது வேட்கை. இந்த வேட்கையைத் தன் படைப்பாக்கத்தின் மூலமே படைப்பாளி நிறைவேற்றிக் கொள்ளுகின்றான் என்று உளவியல் நோக்கில் கூறுவார். உளப்பகுப்பாய்வுக்

(Psycho Analysis) கூற்றுப்படித் தன் முனைப்பு உள்ளத்தின் ஆதிக்க உந்துதலே படைப்பாளியின் படைப்புத் திறனிற்குக் காராணமாக அமைகின்றது"[12] என்று செ. சாராதாம்பாள் கூறுவார்.

எந்த ஒரு படைப்பாளனும் தான் வாழும் சமூகத்தின் பின்னணிக்கு ஏற்ப நடப்பியல் கருத்துக்களைத் தன் படைப்பில் வெளிப்படுத்துகின்றான். அப்படைப்பு ஏராளமான வாசகர்களால் ஏற்றுக் கொள்ளப்படும்போது சமூக மதிப்புப் பெறுகின்றது. படைப்பாளனால் படைக்கப்படும் படைப்பு வாசகனுக்கு நற்கருத்துக்களைப் போதிப்பதாகத் திகழவேண்டும். இதனை இராஜம் கிருஷ்ணன் "இலக்கியம் வெறும் பொழுதுபோக்குக்குக் கொறிக்கும் சிறு தீனிகளாகி விடக் கூடாது. அது மக்களின் வாழ்வில் இன்றியமையாத ஆரோக்கியமான சத்துணவைப் போல் சமுதாய உணர்வை, மனிதாபிமானத்தை மக்களிடையே ஊட்டுவதாக இருக்க வேண்டும்"[13] என்று கூறுவர்.

## 1.7 மொழி வழக்கு

ஒவ்வொரு மொழியிலும் பேச்சுமொழி, எழுத்துமொழி என இரண்டு உண்டு. இந்த இரண்டிலும் எழுத்தாளர்கள் பலர் பேச்சுமொழியை விட்டுவிட்டு எழுத்து மொழியிலேயே எழுதுகின்றனர். தோப்பில் முகமது மீரான் தம்முடைய படைப்புக்களைப் பேச்சு மொழியிலேயே எழுதுகின்றார். "ஒரு காலத்துல பாத்திரங்கள் ஏட்டு நடையில் தான் பேசின. பிறகு பேச்சு நடையில் பேச ஆரம்பித்தன. புரிந்து கொண்டோம். இப்போ ஆசிரியனே அதாவது கதை சொல்லுகிறவனே பேச்சுநடையில் எழுத ஆரம்பித்துவிட்டான்"[14] எனப் பேச்சுமொழியில் படைப்புக்கள் படைப்பதைச் சிலர் குறை கூறி ஏளனம் செய்கின்றனர். இதற்கு விடையாக "நட்டணைகள் சொல்பவர்கள் சொல்லிக் கொண்டே இருக்கட்டும். கிளிப்பிள்ளைகளும், சட்டாம்பிள்ளைகளும் பெருத்துப்போன சனநாயக காலம் இது. நல்லன நிற்கும் அல்லன மறைந்தொழி'யும்"[15] என்ற கி.ராவின் கூற்று, தோப்பில் முகமது மீரானின் கருத்தோடு ஒப்புநோக்கத் தக்கவகையில் அமைந்துள்ளதை இதன் வழி அறியலாம். மக்கள் பேசுகின்ற மொழியில் எழுதாமல் எழுத்துமொழியில் எழுதினால் இடர்ப்பாடுகள் தோன்றலாம். "கதை மாந்தரின் சமூகப் பண்பாட்டுப் பின்னணியில் கதைமாந்தர் பண்புகளைச் சித்தரிக்கவும், அதுவும் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் எதார்த்தச் சித்திரிப்புத் தருவதற்காகவும் மொழிமாற்றம்

பயன்படுத்தப்படுகிறது”[16] என்பர். இக்கூற்றுக்குத்தக தோப்பில் முகமது மீரான் பயன்படுத்தும் பேச்சுமொழிக்குத் தக்க சான்றாக சிறுகதைகள் அமைகின்றன.

### 1.8 புதின ஆசிரியர்

ஒரு கதையைப் பல்வேறு கிளைப் பரப்பி, விரித்துக் கூறுவது புதினம் ஆகும். சிறுகதை ஒரு மாளிகையின் சாளரம் என்றால் மாளிகையின் மொத்தப் பரப்பும் புதினமாகும் என்கிறார் ஜியாஜ்மூர் என்பவர். புதினத்தைச் சமகாலச் சரித்திரம் எனலாம். மனிதருடைய உண்மையான வாழ்க்கையே ஒரு புதினமாகும். உரைநடை வளராத செய்யுள் நிலைக்காலத்தில் தோன்றிய ‘காப்பியம்’ என்னும் இலக்கிய வகையே பிற்காலப் புதினம் என்பதன் தாய் என்று கூறலாம். “பழங்காலக் காப்பியங்களின் இடத்தை இன்றுப் புதினம் பிடித்துக் கொண்டிருக்கிறது”[17] என்னும் தமிழண்ணல் கருத்தும் இதற்கு அரண் செய்யும். மேலை நாட்டார் தொடர்பால் தோன்றிய அச்சு இயந்திரங்களின் அறிமுகத்தால் உடைநடை இலக்கியம் வளரத் தொடங்கியது. அதன் பயனாகத் தமிழுக்குக் கிடைத்த புதிய இலக்கிய வகையே ‘நாவல்’ என்ற புதினம் ஆகும். “விழுதுவிட்டு நிற்கும் ஆல்போல பல கிளைவிடுக் கதையை வளர்த்துக் கூறுவது புதினம். பல மணி நேரம் படிக்கக் கூடியது. வாழ்வே புதினமாகிறது. ஒரு வாழ்க்கையைச் சுவையாகச் சொன்னால் அது நாவலாகிவிடும்”[18] என்று புதினத்திற்கும் மனித வாழ்க்கைக்கும் உள்ள நெருங்கிய தொடர்பினைத் தமிழண்ணல் விளக்குகின்றார்.

தோப்பில் முகமது மீரான் படைப்புகள் புதினம், சிறுகதை, கட்டுரை, மொழிபெயர்ப்பு என்ற வகையில் இதுவரை பல புத்தக வடிவில் வந்துள்ளன. இவரது புதினங்கள் பல்வேறு பல்கலைக்கழக மாணவர்களால் எம்.ஃ.பில் பிஎச்.டி ஆய்வுகளுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இவருடைய சாய்வு நாற்காலி என்ற புதினம் சாகித்திய அகாதமி விருதைப் பெற்றுள்ளது. ஆசியரின் புதினங்கள் தமிழ் இலக்கியத்தின் களனை வெகுவாக விவரித்துள்ளன. மேலும் இசுலாமிய சமுதாயம் தான் பழமையான எண்ணங்கள் சிலவற்றைத் துறந்து மெல்ல மெல்ல பெற்றுவரும் மாற்றங்களை மையப்படுத்தியதாக அமைந்துள்ளது.

## 1.9 சிறுகதையாசிரியர்

உலகில் மனிதன் தோன்றிய நாளிலிருந்தே கதை கூறும் வழக்கமும், கேட்கும பழக்கமும் காணப்படுகின்றன என்பர்.. இலக்கியங்கள் தோன்றுவதற்கு முன்னரே குடும்ப விழாக்களில் கதை கூறும் வழக்கம் இருந்தது என்பர். இக்கதையின் வாயிலாக மக்களுக்கு நீதிக் கருத்துக்களைப் புகட்டினார். படைப்பிலக்கியத்திற்கு மூலமாக அமைவது கதை மரபு. அச்சுச் சாதன வருகையால் தமிழிலும் சிறுகதை வளர்ச்சி பெறத் தொடங்கியது. உலகம் முழுவதும் சிறுகதை இலக்கியம் வெற்றிகரமாக வளர்ந்து வந்தது. தமிழ்நாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்தான் சிறுகதையும் இலக்கியத்தின் ஒரு பகுதி என்ற எண்ணம் வலுப் பெறலாயிற்று. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் தனக்கென சில அடிப்படை வரம்புகளை வைத்துக் கொண்டு வெவ்வேறு அமைப்புகளுடன் தமிழில் சிறுகதை வளரத் தொடங்கியது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சமூக மாற்றத்தையும் அரசியல் விழிப்புணர்ச்சியையும் தாங்கி வரும் ஊடகங்களாகச் சிறுகதையை இதழ்கள் வெளியிட்டன.

சிறுகதைகள் கூறு வேண்டிய செய்திகளைச் செறிவாகவும், அழுத்தமாகவும் வெளிப்படுத்தின. கதை என்ற பெயரில் கற்பனை உலகில் நடமாடிய நிலைமாறி எதனையும் எதார்த்த நோக்கில் இயற்கையோடு இயைந்து நோக்க வேண்டும் என்ற எண்ணத்தின் தோற்றம் சிறுகதை இலக்கியத்தை வலுப்பெறச் செய்தது. “சிறுகதை என்பது வாழ்க்கையில் நிகழும் ஓர் நிகழ்ச்சியை ஓர் உணர்ச்சியைக் கருவாகக் கொண்டு பின்னப்படுவதாகும்”[19] என்பார் தமிழண்ணல். சிறுகதையானது அமைப்பில் சிறியதாயினும் கருத்தில் ஆழமானதாகவும், அறிவைத் தொடுவதாகவும், உள்ளத்தை எழுச்சியடையச் செய்வதாக இருக்க வேண்டும். மக்கள் வாழ்க்கையில் ஒரு நிகழ்வை படம் பிடித்துக் காட்டும் வகையிலும் அமைதல் வேண்டும். இருபதாம் நூற்றாண்டைச் சிறுகதையுலகம் என்றே கூறலாம். காப்பியங்களும், சிற்றிலக்கியங்களும் செல்வாக்கிழந்து புறக்கணிக்கப்பட்டுள்ள நிலையில் மக்களின் மனத்தைக் கவர்ந்து பெருமளவுக்கு எல்லோராலும் விரும்பிப் படிக்கப்பட்டு வருவன சிறுகதைகள். எனவே பல்லாயிரக்கணக்கான சிறுகதைகள் தமிழில் எழுதிக் குவிக்கப்பட்டுள்ளன. புதுமைப்பித்தன் முதல் பொன்னடியான் வரை நூற்றுக்கணக்கான சிறுகதை எழுத்தாளர்கள் தமிழ்ப் பத்திரிக்கை உலகில் குவிந்து கிடக்கின்றனர். இவ்வரிசையில் தோப்பில் முகமது மீரானும் இடம் பெற்றுள்ளார்.

இவரது சிறுகதைகள் ஒவ்வொன்றும் வெறும் பொழுதுபோக்கிற்காக எழுதப்பட்டவை அல்ல. சமுதாய அவலங்களுக்குக் குரல் கொடுக்கும் இலக்கியச் சங்குகள், தூங்கிக் கிடக்கும் மகளிர் சமுதாயத்தைத் தட்டி எழுப்பும் இடிமுழக்கங்கள், காலத்திற்கேற்ற கருத்துக்களை வழங்கும் கருவூலங்களாகும். இன்றைய படைப்பிலக்கியங்கள் பொதுவாகச் சமுதாயத்தைப் பற்றியும், சமுதாயத்தில் தோன்றியுள்ள சிக்கல்கள் பற்றியும் பேசுவதாக அமைந்துள்ளன. குறிப்பாகச் சிறுகதைகளில் சமுதாயத்தில் தோன்றுகின்ற வாழ்க்கைச் சிக்கல்களை மிகச் சுருக்கமாகவும், தெளிவாகவும் எடுத்துரைக்க முடிகின்றன. அவ்வகையில் தோப்பில் முகமது மீரான் சமுதாயம் சார்ந்த பல்வேறு கருத்துக்களைத் தமது சிறுகதைகளில் வெளிப்படுத்தி வருகின்றார்.

படைப்புகள் எதுவாயிருந்தாலும் அதில் அவர் வாழ்ந்த வாழ்க்கையையும் அவரைச் சுற்றியுள்ள வட்டார மக்களின் வாழ்க்கை முறைகளையும் வெளிப்படுத்துவதையே நோக்கமாகக் கொண்டிருக்கிறார்.

## 1.10 கதைக்கரு

ஒரு படைப்பு உருவாவதற்கு அடிப்படையாக இருப்பது கதைக்கரு ஆகும். கரு இல்லை என்றால் ஒருபடைப்பின் உருவாக்கமே இல்லை. அந்த அளவிற்குக் கதைகளில் கரு என்பது மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. கரு என்பது ஒவ்வொரு படைப்பாளிக்கும் வேறுபட்ட தளத்தில் கிடைப்பதாகும். சில படைப்பாளர்களுக்குச் சமூகத்தில் கிடைக்கும்; சில படைப்பாளர்களுக்குக் குடும்பத்தில் குடும்ப உறவில் கிடைக்கக் கூடியதாக இருக்கும்; சில படைப்பாளர்களுக்குச் சமூகத்தளத்தில் சமூகச் சிக்கலிலும் கிடைக்கக் கூடியதாகிறது. அக்கருவைக் குயவன் சக்கரத்தின் வழி மண்பாண்டம் செய்வது போல பக்குவமாகப் புனைந்து வார்த்து எடுக்கக் கூடிய பொறுப்பு படைப்பாளனையே சாரும். படைப்பிற்கும் படைப்பாளனுக்கும் ஒரு நல்ல தொடர்பினை ஏற்படுத்தக்கூடியதே கதையின் மையக்கருதான். இம்மையக்கருவே படைப்பாளனை உலகிற்குக் காட்டும் ஏணியாகும். இதைச் சரியாகப் பயன்படுத்தும்பட்சத்தில் படைப்பாளன் படைப்பாளர்களின் மத்தியிலும் வாசகர்களிடையேயும் மிளிர்கிறான்.

படைப்பாசிரியரின் மனத்தில் கரு தோன்றிய பின்னரே சிறுகதையை உருவாக்க முடிகின்றது. உலக வாழ்வில் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும்,

உற்றும், அறியும் ்எல்லா அனுபவங்களையும் மனத்தில் பதிய வைத்துக் கொள்கின்றார். கதைக்குரிய கரு அமைவது குறித்து “கதைக்கான கருவை எங்கும் தேடி அலைய வேண்டியதில்லை. காதுகளையும், கண்ணையும் திறந்து வைத்துக் கொண்டிருந்தாலே போதுமானது. வாழ்வில் நடக்கும் அத்தனையும் கதைக்கு உரியவைதாம்”[20] என்று மா. இராமலிங்கம் குறிப்பிடுகின்றார். படைப்பாளர்களின், வாசகர்களின் மத்தியில் சிறந்த படைப்பாளர் என்ற அளவிற்கு சிறப்பைப் பெற்ற தோப்பில் முகமது மீரான் அவர்கள் தமது படைப்பின் கருவைச் சமூகத் தளத்திலிருந்தே பெறுகிறார். தனிமனிதனின் தொகுப்பு குடும்பம், குடும்பத்தின் தொகுப்பு சமுதாயம் ஆகும். இவ்வகையில் மீரான் அவர்கள் குடும்ப அமைப்பையும், சமூகத்தையும் கதைக் கருவாகக் கொண்டு தனது படைப்புகளை உருவாக்கியுள்ளார்.

படைப்பாசிரியர் மீரான் தம் படைப்புக்களின் கருவுக்காக எங்கும் தேடிச் சென்று அலையவில்லை. தன் கண் முன்னால் நிகழ்கின்ற நிகழ்வுகளையும், அனுபவத்தினையும் மக்களிடையே ஏற்படும் பிரச்சனைகளையும் கருவாகக் கொண்டு படைத்துள்ளார். “எழுதுகிறவனுக்கு மாத்திரமில்லை. எல்லோருக்கும் கரு கிடைக்கும். கருவுக்குக் பஞ்சமே இல்லை. சொல்லப்போனால் எழுதப்படட கருக்களை விட எழுதப்படாமல் கிடக்கிறதுதான் லட்சேபலட்சம்”[21] என்று கோ. கேசவன் கூற்றின் மூலம் அறியலாம். மீரானின் படைப்புக்களை ஒட்டுமொத்தமாக நோக்கும்போது; கேள்விபட்டது, பார்த்தது, அனுபவித்தது என்ற மூன்றின் அடிப்படையில் தன் படைப்புக்களைப் படைத்துள்ளார் என்பதை அவரின் படைப்புக்களின் வாயிலாக அறியமுடிகிறது. ஆசிரியரின் படைப்புக்கள் அனைத்தையும் உற்று நோக்கி ஆராய்ந்து அவரது படைப்புக்களின் உள்ளடக்கத்தினைக் கீழ்க்கண்ட நிலைகளில் வகைப்படுத்தலாம். அவை.

1. கீழ்த்தள மக்களை நோக்கிய பார்வை
2. இசுலாம் சமயத்தில் மோதினார்களின் வறுமை
3. கபுறு வெட்டும் தொழிலாளர்களின் நிலை
4. தர்காவை மையமிட்ட வாழ்வியல் முறை
5. செயலூக்கமிக்க மனிதாபிமானம்
6. இசுலாமிய சமூகத்தில் பெண்கள் நிலை

7. சமூகத்தில் முதுமை நிலை
8. வறுமையால் தடைப்படும் திருணமங்கள்
9. சமூக உறவுநிலையும் பொருளாதாரமும் - என்பதாகும்

இந்த ஒன்பது நிலைகளும் தோப்பில் முகமது மீரான் படைப்புக்களில் முதன்மைப்படுத்தப்பட்டு இருப்பதைக் காணலாம்.

## 1.11 கதைச்சுருக்கம்

### 1. விளக்கு

இளமைக்குத் தேவையான திருமண பந்தமற்று வாழும் ஓர் ஆணின் மன உளைச்சலைத் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகிறார்.

### 2. தலைப்பெருநாள்

பெண்களின் மூலம் ஏற்படும் வாழ்வின் உன்னத நிலையையும், வறுமைக் கோட்டிற்குக் கீழே வாழும் மக்களின் நிலையையும், உழைப்பின் உயர்வையும் மையப்படுத்திப் படைத்துள்ளார்.

### 3. நரகம் பூமியில்!

சமூகத்தில் ஏழ்மையிலும் பராமரிப்பற்ற பெண்ணின் உணர்வை மையப்படுத்தியது. குறிப்பாகப் பொருளாதாரத்தில் சற்று தாழ்ந்தவர்களுக்கு உயர்ந்த நிலையில் உள்ளவர்களின் பெயரைக் கூட வைக்க உரிமையற்ற நிலையையும், சமூகத்தில் ஏற்படும ஏற்றத்தாழ்வுகளையும் மையப்படுத்தியதாக இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 4. தஜ்ஜால் மேல் விழுந்த மலை

மோதினார்களின் பெண்கள் வறுமை நிலையோடு பருவத்தை அடைந்தும் திருமணமாகாமல் முதிர்கன்னியாக வாழும் நிலைமை பற்றியும், பெற்றோர்களின் மனநிலையையும் மையப்படுத்தியுள்ளார்.

### 5. கத்தச்சோறு

முதுமை என்பது வாழ்வின் எல்லா நிலைகளையும் கடந்து வாழ்வின் இறுதிநிலையான அந்திமக் காலத்தை அடைவதாகும். இந்நிலையில் வாழும்

மனிதன் மிகுந்த சிரத்தைக்கு உட்படுகிறான். வயது முதிர்ந்த காலத்தில் கவனிப்பாரற்ற சூழலில் படும்பாட்டை மையப்படுத்தி அமைத்துள்ளார்.

### 6. 'பவர்'க்காரி

தந்தையின் மரணத்தால் வறுமையின் காரணமாகத் தாய்க்கு மருத்துவச் செலவுக்குக் கூட வழியில்லாத நிலையையும, இளமைப்பருவம் திருமணம் என்ற பந்தக் கட்டினுள் அடங்காமல் வீணாய்ச் செல்லும் முதிர்கன்னியின் அவலநிலையையும், மன உளைச்சலையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 7. கடல்

வாழ்வின் எல்லா நிலைகளிலும் உடன் வருவது நினைவுகள் மட்டுமே. வறுமையில் வாடுகின்ற அவனின் மனத்திற்கு மாற்றமாகவும், அன்பாகவும் திகழ்கின்ற ஆமினாவின் நினைவுகளோடு இறக்கின்ற மனிதனின் நிலையை மையமாகக் கொண்டு இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 8. அன்புக்கு முதுமையில்லை

பெற்ற குழந்தைகள் வயதுமுதிர்ந்தக் காலத்தில் துணையாக அன்புச் செலுத்திப் பராமரிப்பார்கள் என்று நினைத்துப் பெற்றோர்கள் இருக்கின்ற காலத்தில், உனக்கு நான், எனக்கு நீ என்று அன்பு செலுத்தி வாழும் இரு முதுமைத் தம்பதிகளின் அன்பின் வெளிப்பாட்டுத் தன்மையை வெளிப்படுத்துகிறார்.

### 9. பொன்னரை ஞாண்

அளவுக்கு மீறி ஏற்படும் ஆசையினால் விளையும் தீமைகள் பற்றியும், மகளிர் வறுமைநிலையிலும் பகட்டு வாழ்க்கை வாழ வேண்டும் என்ற நினைப்பால் தன் கணவனின் சொல்லையும் மீறி நடக்கும்போது உண்டாகும் விளைவுகளைப் பற்றியும் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 10. துறைமுகம்

இளமையில் தனிமையை நாடும் இளைஞன் தன் முதுமைக் காலத்தில் யாரும் இல்லாமல் அநாதையாக ஒரு வேளை உணவு உண்பதற்கு வழியில்லாமல் அவதிப்படும் அவலநிலையைச் சுட்டுவதாய் அமைந்துள்ளது. இளமை என்பது

நிலையில்லாதது. அது எப்போதும் யாருக்காகவும், எதற்காகவும் காத்திருக்காது என்பதைக் கூறுவுதாகச் இச்சிறுகதை படைக்கப்பட்டுள்ளது.

### 11. நேற்று வந்த வழி

சிறுவயதில் தன் ஊரை விட்டுச் சென்ற ஓா் இளைஞன் தன் முதுமைக் காலத்தில் அவன் விரும்பி வரும்போது எதுவும் அவனுடையதல்ல என்பதை மெய்ப்பிக்கும் வகையில் இக்கதையைத் தன் விளக்க வெளிப்பாடாக அமைத்துள்ளாா்.

### 12. கறவை தீா்ந்த மாடுகள்

ஆண்வா்க்கத்தினரிடம் அல்லல்படும் பெண்ணின் அவலநிலையையும், புகையிலை சுருட்டும் தொழிலாா்களின் வறுமை நிலையையும், ஆண் என்பவன் மலருக்கு மலா் தேன் தேடும் வண்டு என்பதையும், ஆணின் சுயநலத்தையும் வெளிப்படையாகச் சுட்டியுள்ளாா்.

### 13. இறக்கை இழந்த பறவைகள்

சமூகத்தில் மனிதா்களிடத்தில் உயா்ந்தவன், தாழ்ந்தவன், ஏழை-பணக்காரன் என்ற வேறுபாடு காலம் காலமாக இருந்து கொண்டுதான் இருக்கின்றன. பெருநாளன்றாவது தன் மகனுக்கு ஒரு வாய் நல்ல உணவு தரவேண்டும் என்று எண்ணிய தாயின் மனநிலையையும், கணவனை இழந்த பெண்களைச் சமூகம் பாா்க்கும் பாா்வையையும் படம் பிடிக்கும் வகையில் அமைந்துள்ளது.

### 14. ஒரு செருப்பின் கதை

தன் சிறுவயதிலிருந்து ஏற்பட்ட ஆசையை நிறைவேற்றப் பாடுபடும் ஒரு மனிதனின் கதையை உணா்வுகளின் வெளிப்பாடாக அமைத்துள்ளாா்.

### 15. ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை

இன்றைய உலகில் அறிவியல் முன்னேற்றத்தினால் பல்வேறு நன்மைகள் உண்டான போதிலும், தீமைகளும் நிகழ்ந்துக் கொண்டுதான் இருக்கிறது என்பதையும், இயந்திரத்தின் வருகையால் தான் செய்து கொண்டிருக்கும் மோதினாா் வேலையும் பறிபோகும் என்ற எண்ணத்தில் மனநிலை பாதித்த மைதீன் பிள்ளையின்

நிலையையும், சமூக அவலத்தையும் வெளிக்காட்டும் வகையில் இக்கதை அமைந்துள்ளது.

### 16. ஒரு சூரியன் எரிகிறது

மனிதர்களின் எதிர்பார்ப்பு என்பது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருக்கிறது. தன் மகளின் திருமணத்திற்கு நிதி திரட்டச் சென்ற போது ஏற்பட்ட ஏமாற்றத்தையும், பெற்றோரின் மனஉணர்வுகளையும் இச்சிறுகதைச் சுட்டுகிறது.

### 17. ஒரு தெருவின் சுய சரித்திரத்திலிருந்து......

வயது முதிர்ந்த மூதாட்டியின் வாழ்க்கையையும் மனநிலையையும் படம் பிடித்துக் காட்டுகிறது. இக்கதை ஆசிரியரின் தன் விளக்க வெளிப்பாடாக அமைந்துள்ளது.

### 18. ஒரு மவ்லவியின் மரணம்

உலகில் பிறந்த ஒவ்வொரு மனிதனும் இறக்க நேரிடும். அவ்வாறு மனிதன் இறக்கும் போது அவன் செய்த நற்காரியங்கள் உலகில் அழியாமல் நிலைத்து நிற்கும். அதற்கு மரணம் என்பது கிடையாது என்று மரணத்தின் தத்துவத்தை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளது.

### 19. மொட்டைக் கடிதம்

பெற்றோரை இழந்து அநாதையாக வாழும் ஒரு பெண் தன் வாழ்க்கையை நிலைநிறுத்திக் கொள்ள போராடும் போது சமூக அவலத்திற்கு ஆட்பட்டு இறுதியில் தற்கொலை செய்து கொள்வதைப் பற்றியும், திருமணமாகாத முதிர்கன்னியின் ஒவ்வொரு விடியாத இரவால் ஏற்படும் மனநிலைப் பற்றியும் வெளிக்காட்டும் வகையில் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 20. ஓர் இரங்கல் பா

வயதாகிவிட்டால் கவனிப்பாரற்ற நிலை என்பது மனிதனுக்கு மட்டுமல்ல அனைத்துவிதமான உயிரினங்களுக்கும்தான் என்பதையும், மனிதனின் தேவை நாளுக்கு நாள் மாற்றமடைந்துக் கொண்டே செல்கிறது என்பதையும், தர்காவை நம்பி வாழும் அத்றாமானின் வறுமை நிலையையும் மையப்படுத்தப்பட்டுள்ளது.

**21. இதை எப்படி நிறுத்துவது?**

ஒரு மனிதன் இறப்புத் தருவாயில் இறை நம்பிக்கையோடு தனது உயிரை விட்டால் அதுவே மறுமைக்கான வெற்றியாக அமையும் என்பதையும், இறக்கும் மனிதனைச் சுற்றியுள்ள பிள்ளைகள் மற்றும் உறவினர்களின் மனநிலையையும் வெளிப்படுத்தியுள்ளார்.

**22. சூரியனைப் பிரசவிக்கும் பாறை**

மனிதன் பொதுநலத்தை மறந்து சுயநலத்தோடு வாழும் வாழ்க்கையையும் ஒருவன் மற்றவனை அடித்துப் பிழைக்கும் அவலநிலையையும், மக்களின் அறியாமையால் உண்டாகும் மூட நம்பிக்கைகளையும், ஐந்தறிவு உயிரினங்களிடையே இருக்கும் ஒற்றுமை மனிதர்களிடையே மறைந்துவிட்டதையும் மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளது.

**23. கருந்தேளின் கொடுக்குகள்**

பொருளாதாரம் ஒரு மனிதனை இச்சமூகம் மதிக்கச் செய்யும் அடையாளம். இவ்வடையாளம் இல்லை என்றால் இச்சமூகம் அம்மனிதனை மதிப்பது இல்லை. அவனை தன்னுடைய இனத்தில் ஒருவனாக ஏற்பது கூட இல்லை. இவ்வடையாளத்தை இழந்தவன் தனது சகோதரனாக இருந்தாலும் அவனுக்கு அங்கு முக்கியத்துவம் இல்லை என்பதை மிக எதார்த்தத்துடன் படைப்பாளர் உணர்த்தியுள்ளார்.

**24. இன்று நான், நாளை நீ!**

இளமை என்பது நிலையான ஒன்றல்ல. உடல்திறன் என்பதும் நிலையானது அல்ல. அதனுடைய திறனும் செயல்பாடும் ஒருகாலக்கட்டத்தில் அடங்கித்தான் தீரும். ஒரு காலக்கட்டத்தில் மிகுந்திருந்த உடல்திறனும், செயல்பாடுகளும் எனக்கு அடங்கியது போல நாளைக்கு இதே நிலைமைதான் உனக்கும் என்று கனகவல்லி கழுதையின் மூலம் நிலையாமைக் கருத்தை நிலைநாட்டுகின்றார்.

**25. கொலுசு அணிந்த பாதங்கள்**

கணவனை இழந்த பெண் தன்னுடைய வாழ்வாதாரத்தைப் பெறுவதற்குப் போராடும் நிலையையும், தர்ஹா மற்றும் ஆவி மீது நம்பிக்கைக் கொண்டு வாழும்

மக்களின் வாழ்க்கை முறையையும் சமூகத்தில் நிகழும் நிகழ்வுகளாக எடுத்துக்காட்டுகிறார்.

### 26. ஓர் உஸ்தாதின் அகமியம்

ஆசிரியர் மாணவர்களின் உறவு நிலையையும், மாணாக்கரின் அறிவுத் திறன்களைப் பற்றியும், இசுலாமிய மக்களின் சமய நம்பிக்கைகளும், பழக்கவழக்கங்கள் பற்றியும் கூறுவதாக இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 27. “நெட்டோகாலி” என்ற நூறுல்ஹஸன்

தாயின் பேராசையால் இளமைப் பருவத்தை இழந்தும் திருமணமாகாமலும் இருக்கும் ஆணின் மன உளைச்சலையும், வரதட்சணையால் திருமணமாகாமல் முதிர்கன்னிகளாக வாழும் பெண்களின் அவலத்தையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 28. சுருட்டுப்பா

கபுறு என்பது இறந்தவரை அடக்கம் செய்யும் மயானம். இம்மயானத்தில் சடலத்தை அடக்கம் செய்யும் தொழிலைச் செய்து வாழும் இசுலாமியச் சமயத்தைச் சார்ந்த தொழிலாளியின் வறுமை நிலையையும், மக்களின் மனிதாபிமானமற்ற செயல்களையும் படம் பிடித்துக் காட்டும் வகையில் அமைந்துள்ளது.

### 29. குரு

தன்னைச் சுற்றி என்ன நடக்கிறது என்பதை அறியாத மனநிலையை உடைய மனிதனின் நிலையையும், மனநிலைப் பாதித்த ஒருவனின் அறியாமையை ஏளனம் செய்வதால் ஏற்படும் விளைவுகளையும் கூறுவதாக இக்கதை அமைந்துள்ளது.

### 30. வாரிசு

தன் இறுதிக் காலத்தில் வயோதிகத்தால் மகள் மற்றும் பேரன் அன்பில் அண்டியிருப்பதைப் பற்றியும் தனக்கு வாரிசு இல்லாததுபோல மகளுக்கும் தன்நிலை ஏற்படும் அவலத்தையும், மூவரின் வறுமை நிலையையும் இச்சிறுகதையின் மூலம் வெளிப்படுத்துகிறார்.

### 31. யாத்திரை

ஒருவன் வாழ்ந்த வாழ்க்கை அவன் இறந்த பின்பும் நிலைத்து நிற்கும் வகையில் இருக்க வேண்டும் என்பதையும், மனிதனின் இறுதிக் காலத்தில் அவனிடம் எஞ்சியிருப்பது அவனது நற்காரியங்கள் அன்றி வேறு இல்லை என்பதையும் தன் விளக்க வெளிப்பாடாகக் கூறியுள்ளார்.

### 32. தங்கராசு

ஏழைகளுக்குக் கல்வி எட்டாக் கனியாக இருப்பதையும், அதிக மதிப்பெண் பெற்றும் படிப்பதற்கு வழியில்லாமல் தன் தகப்பன் நினைவுகளுடன் அடுத்த கட்ட வாழ்க்கைக்குத் தன்னைத் தயார்படுத்திக் கொள்ளும் அவல நிலையையும், ஒரு தாயின் ஆசையை நிறைவேற்ற முடியாமல் தவிக்கும் மகனின் மன உணர்வையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 33. அனந்தசயனம் காலனி

ஒரு மனிதன் தான் எந்த நிலையில் இருந்தாலும் மீண்டும் வந்த நிலையை அடைவது சிலரின் வினைப்பயன் என்பதையும், கால மாற்றத்தாலும், நாகரிக வளர்ச்சியாலும் மக்களிடையே மனித நேயம் மரத்துப் போகும் அவலநிலையையும், சிற்றூர் மக்களிடையே உள்ள மனிதப் பண்புகள் நகரத்தில் மறைந்துவிட்டதைப் பற்றியும் கூறுவதாக இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 34. உம்மாவின் ரூஹ்

தாயின் இறப்பை நடைமுறை செயல்பாடுகளோடு ஒப்பிடுவதைப் பற்றியும், நம்பிக்கை என்பது முழுமையான நிலையை அடையும்போது அதன் மீது ஒரு முழுமைத்தன்மை மிகுந்த பற்று ஏற்படும்; அந்த அடிப்படையில் அமைவதுதான் சமய நம்பிக்கை என்பதையும் மையாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 35. வட்டக் கண்ணாடி

வறுமைக் கோட்டிற்குக் கீழ் உள்ள சராசரி மனித வாழ்க்கையையும், அன்றாட தேவையைக் கூட நிறைவேற்ற முடியாத தந்தையின் மனநிலையையும், முன்னோர்களின் வாழ்க்கைக்கு மதிப்பளிக்கும் மன உணர்வையும் மிக இயல்பாக சித்திரித்துக் காட்டுகின்றார்.

### 36. காலத்தின் ஆவர்த்தனம்

செல்வம் நிறைந்தக் காலத்தில் இருந்த உறவுகள் ஏழ்மை நிலையில் தூரமாகிப் போனதையும், தன் படிப்புக்கு யாரும் உதவ முன்வராததைப் போன்று தன் மகனின் படிப்பு நின்றதை எண்ணி வருந்தும் ஒரு தந்தையின் மனநிலையைச் சமூகநிலைக்கு ஏற்ப பிரதிபலித்துக் காட்டுகின்றார்.

### 37. சன்னதியில்

வயோதிக நிலையில் தன் பிள்ளைகளால் கைவிடப்பட்டுத் தெருவில் வாழும் (முதியவரின்) கரீமின் அவல நிலையையும், மனித நேய மாறுபாடுகளைப் பற்றியும், முரண்டபாடான மக்களின் சமூக அமைப்புகளையும், முதலாளி மீது வள்ளி கொண்டுள்ள விசுவாசத்தையும் இச்சிறுகதையின் வழி வெளிப்படுத்துகின்றார்.

### 38. வேட்டமங்கலம் யானை

சாதி, மதப் பிரச்சனைகள் என்பது காலத்திற்கு ஏற்ப மாற்றம் பெறாத நிலை. இதனால் மக்களிடையே உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற பிளவு காலம் காலமாக ஏற்பட்டுள்ளதையும், சாதியும் மதமும் இன்றைய மக்களுக்கு இரண்டு கண்கள் போன்றது என்பதையும், மதக் கலவரத்தால் பாதிக்கப்படும் ஒரு தந்தையின் மனநிலையையும் சமூகநிலைக்கு ஏற்ப பிரதிபலித்துக் காட்டுகின்றார்.

### 39. கேள்வியின் விளிம்பில்

இசுலாமிய மக்களிடையே காணப்படும் நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும், தாய் தன் மகனிடம் இறைபக்தி என்ற பெயரில் சிறுவயது முதல் மூடநம்பிக்கைகளைத் திணிப்பதுப் பற்றியும், தந்தையின் மரணத்தால் மகன் சிந்திக்கும் திறன் பற்றியும் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகின்றார்.

### 40. சாய முகங்கள்

நகர வாழ்க்கை அலுத்துப் போன நிலையில் சிற்றூர் வாழ்க்கையை நாடி வரும் மனிதனின் மனநிலையையும், இடம் மட்டுமில்லாமல் காலத்திற்கு ஏற்ப மனித மனங்களும் மாறிவிட்டதையும் மிக இயல்பாகக் காட்டுகின்றார் படைப்பாளர்.

### 41. ஓமவல்லி

நண்பர் ஒருவர் நட்பின் பேரில் வீடு தேடி வந்த ஓமவல்லி செடியின் மூலம் தனது இளமைக் காலத்தில் ஏற்பட்ட நினைவுகளை மீட்டெடுப்பதையும், மக்களிடையே அறியாமையின் காரணமாக ஏற்படும் மூடநம்பிக்கைகளைப் பற்றியும் இச்சிறுகதையின் வாயிலாக உணர்த்துகின்றார்.

### 42. தவம்

திருமணம் முடிந்த மகளின் வாழ்க்கையையும், அவளது தேவையை நிறைவேற்ற இயலாத ஒரு தந்தையின் மனவேதனையையும், மகளின் எதிர்பார்ப்பையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 43. குட்டி ஆடு

பெண்கள் போகப் பொருளாக மட்டுமே கருதப்படுவதையும், பெண்களுக்குத் தனி உணர்ச்சி, சிந்திக்கும் திறன் போன்றவை இருப்பதை ஆண்கள் உணராமல் அடக்குவதையும், ஆண்களின் போலித்தனமான வாழ்க்கையையும், கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன் என்ற பழமை வாதம், அடிமைக் கோட்பாடு தகர்த்தெறியப்படுவதையும் இச்சிறுகதையின் வழி உணர்த்துகின்றார்.

### 44. உள்வனம்

பழைய நினைவுகளோடு நிகழ்காலத்தில் வாழும் ஒரு மனிதனைப் பற்றியும், ஞாபகத்தில் தான் கண்ட பெண்ணை வெளிக்கொணர முயற்சி செய்யும் மனிதனின் மனநிலையையும் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகின்றார்.

### 45. கடிகாரம்

காலத்தின் நேரத்தை அளக்கும் அளவுகோலான கடிகாரம் மக்கள் வாழ்வில் ஓர் அங்கமாகும் என்பதையும், கடிகாரத்தின் அவசியத்தைப் பற்றியும், இக்கடிகாரத்தின் தோற்றத்திற்கு முன் நம் முன்னோர்கள் கால மாற்றத்தை வைத்து நேரத்தைக் கணக்கிட்டதையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

## 46. பேரன்

உதவாக்கரையான பிள்ளைகளின் செயல்பாடுகளையும் தனது இறுதி ஆசையைக் கூட நிறைவேற்ற முடியாமல் தவிக்கும் முதியவர்களின் மனஉணர்வையும், இன்றைய அறிவியல் முன்னேற்றத்தால் தொலைக்காட்சிக்குள் தங்களைத் தொலைத்துவிடட பெண்களைப் பற்றியும், கிரிக்கெட் மோகத்தால் இன்றைய இளைஞர்களின் நிலையையும் மையப்படுத்தியுள்ளார்.

## 47. சூட்சும இடைவெளி

மரணம் பற்றி ஏற்படும் பல்வேறு சந்தேகங்களைப் பற்றியும், மனிதன் இறந்தபின்பு அவனது உயிரானது சொர்க்கம் செல்வதும், நரகத்திற்குச் செல்வதும், அம்மனிதன் வாழ்ந்த வாழ்வைப் பொறுத்தே அமையும் என்பதையும், இறைநம்பிக்கையோடு வாழ்ந்து இறைநம்பிக்கையுடன் இறப்பவரே வெற்றி பெற்றவர் ஆவார் எனும் இசுலாமியக் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு இச்சிறுகதையைப் படைத்துள்ளார்.

## 48. 45-வது வார்டு வேட்பாளர்

பதவி, பணத்தின் ஆசையால் ஒருவன் தான் செய்த தவறுகளை எண்ணி அச்சப்படுவதையும், பணம் என்று வந்துவிட்டால் நண்பன் கூட எதிரியாகத் தெரிவது பற்றியும், ஒருவன் செய்த நன்மை தீமைகளுக்கு ஏற்ப மறுமையில் கூலி கிடைக்கும் என்பதையும், ஆணின் ஆசை வார்த்தைக்கு மயங்கி தன்னையே பலிகொடுக்கும் பெண்ணின் அவலநிலையையும் வெளிப்படுத்துகின்றார்.

## 49. மயானங்கள்

நாகரிகம் என்ற போர்வையில் உறவுகளை இழந்து அண்டை அயலாரின் பழக்கங்களையும் இழந்து விட்டில் பூச்சிகளாக வாழும் நகர மக்களைப் பற்றியும், இயந்திர உலகில் இன்றைய மனித நேயம் என்பது மரத்துப் போகின்ற சூழலையும், குணம் என்பது உடுத்தும் ஆடையிலோ; வசிக்கும் இடத்திலோ இல்லை. மக்களின் மனத்தில்தான் உள்ளது என்பதையும் உணர்த்துவதாகச் இச்சிறுகதை அமைந்துள்ளது.

### 50. ஒரு பஸ் பயணத்தின்போது

அரசாங்கத்தின் அலட்சியப் போக்கையும், பேருந்து நடத்துனரின் மனிதாபிமானமற்ற செயலையும், மனித மனங்கள் மறித்துப் போகவில்லை. ஒரு சில மனங்கள் துளிர்விட்டு வளர்வதையும், இன்றைய சமூகத்தளத்தோடு ஒப்பிட்டுப் படைத்துள்ளார்.

### 51. வானவர்கள் செல்லுமிடங்கள்

மனிதன் ஏற்றத்தாழ்வு அற்ற நிலையில் வாழ இசுலாம் வழி வகுத்துள்ளது. ஆனால் இதையும் மறந்து இறந்தவரை (மய்யத்தை) அடக்கம் செய்வதில் கூட உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்ற நிலை உள்ளதைப் பற்றியும், இறந்த தன் தந்தையின் உடலை அடக்கம் செய்ய அனுமதி கேட்டபோது பல்வேறு காரணங்கள் கூறி புறக்கணிக்கப்பட்ட நிலையையும், பள்ளிவாசலின் நிர்வாகத் தலைவரின் (ஜமாஅத்) அரசியல் போக்கையும் மையப்படுத்தி இக்கதை படைக்கப்பட்டுள்ளது.

### 52. குட்டன் பிள்ளை சார்

கல்வி என்பது காலத்தால் அழியாதது. கல்வின் மூலம் கிடைக்கும் ஒழுகலாறு என்பது வாழ்க்கையின் நதிப் பயணத்தைப் போன்றது என்பதையும், ஆசிரியர் என்பவர் மாணாக்கரின் குறைகளைக் களைந்து, அவர்களுக்குள் இருக்கும் படைப்புத் திறமையை வெளிக்கொணரும் வகையில் செயல் புரிபவர்கள் என்பதையும் ஆசிரியர் மாணாக்கரின் உறவு நிலையையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 53. பிறப்பின் விசித்திரம்

பெற்றோர் அறியாமையின் காரணமாகத் தன் குழந்தையின் பிறந்த ஆண்டு, மாதம், தேதியை மறந்த நிலையையும், ஆசிரியர் பிறந்த தேதியைக் கேட்டபோது தெரியாமல் விளித்துக் கொண்டிருந்த குழந்தையின் மனநிலையையும், தாயிடம் குழந்தை தன் தேவையை நிறைவேற்ற தன் உணர்வினைப் பிரதிபலிக்கும் போது அவனது மன உணர்வில் தன் தாய் இல்லை என்பதை உணரும் போது ஏற்படும் பிஞ்சு உள்ளத்தின் மனக்குமுறல்களையும் உணர்வுகளின் வெளிப்பாடாகக் காட்டுகின்றார்.

## 54. ஏணி

இசுலாம் சமயம் நன்கு வரையறுக்கப்பட்ட் கோட்பாட்டினை உடையது. எனினும் ஆவிகள், பேய்கள் குறித்த நம்பிக்கை மக்களிடையே ஆழமாகக் பதிந்துள்ளதையும், மனம் பகுத்தறிவிற்குட்படடு நம்பிக்கைகளில் உண்மைகளை இனங்காண்பதில்லை. மாறாக, நம்பிக்கைகளை உணர்வு அடிப்படையில் உண்மையாக ஏற்றுக் கொள்வதையும், தனது படைப்பின் வழியாக வெளிக்காட்டுகிறார்.

## 55. பச்சை நிறக் கார்

மரணம் பற்றிய நினைவுகளையும், மக்களின் உயிரைப் பறிக்க வரும் எமனைப் பிடித்துக் கட்டிய பச்சை நிறக்காரில் வரும் மோசஸ் மருத்துவரும் ஒருநாள் இறந்ததைப் பற்றியும், உறவுகள் நாளடைவில் தளர்த்துப் போவதையும், இறப்புப் பற்றிய நம்பிக்கைகளையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

## 56. மாளிகை வீடு

ஏழை பணக்காரன் என்ற பாகுப்பாட்டையும், தகுதிக்கு மீறிய இடத்தில் பெண்ணைத் திருமணம் செய்துக் கொடுப்பதால் பெற்றோருக்கு ஏற்படும் அவமானத்தையும், புகுந்த வீட்டின் சூழலையும், பெண்ணின் அகமனதில் புதைந்தும், முடங்கியும், மறைந்தும் இருக்கும் உள்ளுணர்வுகளையும் நுட்பமாக வெளிப்படுத்துகின்றார்.

## 57. களியோடக்கா

காலம் உறவுகள் மத்தியில் உண்டு பண்ணும் விரிசலையும், தனக்கென ஒரு குழந்தை இல்லாமல் தவிக்கும் தாயின் மன உணர்வையும், முதுமையில் தன்னை ஆதரிக்கும் என்ற எண்ணத்தில் வளர்த்த பிள்ளையும் தவிக்க விட்ட நிலையையும், முன்னோர்கள் இருந்த காலத்தில் செய்த நற்காரியங்களும், செயல்களும் அவர்களோடு மறைந்துப் போனதையும் மிக இயல்பாக இச்சிறுகதையின் வழியாக வெளிப்படுத்துகின்றார்.

### 58. ஒரு குட்டித் தீவின் வரைபடம்

இசுலாம் மக்களின் வாழ்க்கையை நெறிப்படுத்துவதற்குச் சில சட்டத்திட்டங்களை ஏற்படுத்தி இருப்பதையும், அடிப்படைக் கடமைகளான தொழுகை, நோன்பு, ஜகாத் (தர்மம்) இவற்றின் உயர்வைப் பற்றியும், தனது சிறு ஆசையை நிறைவேற்றத் துடிக்கும் சிறுவனின் மன உணர்வையும் மையப்படுத்தியுள்ளார்.

### 59. காலண்டர் பாாவா

நோன்புப் பெருநாள் (ரம்ஜான்) கொண்டாடும் தினம் தொடர்பாகச் சில ஊர் மக்களிடையே ஏற்படும் குழப்ப நிலைகளைப் பற்றியும், வயதானவர்களைப் பழைய காலண்டராக சுருட்டிப் போடுவதனால் ஏற்படும் மனநிலையையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

### 60. புதையல்

பிறரைப் போல் நாமும் வாழ வேண்டும் என்ற எண்ணத்துடன் இருக்கின்ற ஒரு சிறுவனின் செயல்பாடுகளையும், மரணம் நிகழ்ந்தவுடன் மனிதன் ஆவியாக உருமாறுகிறான் என்பது மக்களின் நம்பிக்கையாக ஆழ்மனத்தில் படிந்துள்ளதையும் காட்டுகிறார். ஆவிகள் தங்களைச் சுற்றி இயங்குகின்றன என்ற நம்பிக்கை தொல்பழங்குடிப் பண்பாட்டைச் சார்ந்தது. எனினும் எச்சமாகச் சமகால மனிதனின் நம்பிக்கையிலும் உள்ளது என்பதையும், சமூக நிலைக்கு ஏற்ப பிரதிபலித்துக் காட்டுகின்றார்.

### 61. நிற்காத கால்

கல்வி என்பது பணக்காரர்களின் பிள்ளைகளுக்கு மட்டும் உரியது என்பதையும், படிக்கும் ஆசை இருந்தாலும் ஏழையாகப் பிறந்தக் காரணத்தால் கல்வி மறுக்கப்பட்ட அவல நிலையையும், வரிகட்டாத, கணக்குக் காட்டாத, அரசு அதிகாரியாக இல்லாத ஏழைகளின் பிள்ளைகளுக்கு உயர்கல்வி எட்டாக் கனியாக மாறியதையும், இச்சிறுகதையின் வாயிலாகச் சுட்டிக் காட்டுகின்றார்.

## 62. அஸ்தமனம்

தனிமை வாழ்க்கையில் சில சுகங்கள் இருந்தாலும் பிற்பகுதி வாழ்க்கையில் வெளியே சொல்ல முடியாத பன்மடங்குத் துயரங்கள் உள்ளதைப் பற்றியும், தான் விருப்பம் எதுவும் நிறைவேறவில்லை என்ற ஏக்கத்தோடு தனித்து அநாதையாக வாழும் மனிதனின் மனக்குமுறல்களையும் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகின்றார்.

## 63. முன்னோர்களின் இரண்டாவது நல்லடக்கம்

முன்னோர்கள் வாழ்ந்த அடிச்சுவடுகளைப் பின்பற்றியே நம் வாழ்க்கை அமைந்துள்ளது என்பதையும், பழையன கழிதலும் புதியன புகுதலுமாய் பழமையின் சின்னமாகக் கருதப்படும் அலமாரிகால மாற்றத்தால் உருமாறி இருக்கின்ற நிலையையும் ஆவிகள், கனவுகள் மூலம் மனிதருக்குத் தங்கள் இருப்பை உணர்த்தும் என்னும் நம்பிக்கை இசுலாமிய மக்களிடையே இருப்பதையும் வெளிக்காட்டும் வகையில் இக்கதையை அமைத்துள்ளார்.

## 64. தலைக்குளம்

இன்றைய அறிவியல் முன்னேற்றத்தினாலும், நாகரிக வளர்ச்சியினாலும், மொழி மக்களுக்குப் பெரும் எதிரியாகிவிட்டதையும், மொழி இன்றைய தலைமுறைகளை வெட்டி விலக்குகின்ற வாளாக மாறிப்போன விந்தையையும், கால மாற்றத்திற்கு ஏற்ப சிற்றூர்களும் மாறிப் போனதைப் பற்றியும் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகின்றார்.

## 65. பண்டமாற்று

உயிரற்ற பழைய பொருட்களை எல்லாம் கலைப் பொக்கிசமாகப் பாதுகாக்கும் மனிதர்கள், உயிருள்ள முதியவர்களை ஏன்? கலைப் பொக்கிசமாகப் பார்ப்பதில்லை என கேள்வியைத் தொடுக்கும் வகையிலும், ஒரு காலத்தில் உயிருள்ளதாகத் தான் இருந்தது. இப்போ என்னைப் போன்று உயிரற்றுப் போன ஒரு பழைய மரக்கூடு என்று தனது நிலைப்பற்றி முதியவர் கூறுவதையும் மையமாகக் கொண்டு படைத்துள்ளார்.

## 66. அடையாளங்கள்

ஊரகங்களில் இருந்த பசுமை நிறைந்த வயல்களும், விண்ணைத் தொடும் வகையில் உயர்ந்து வளர்ந்த மரங்களும், வற்றாத குளங்களும், இன்றைய காலமாற்றத்தினால் அழித்து விட்டதையும், தான் அனுபவித்த பழைய இன்பத்தைத் திரும்பி பெற இயலாத ஒரு மனிதனின் மன உணர்வையும் எடுத்துக்காட்டுகின்றார்.

## 67. மிஸ்டர் மார்ட்டின்

வளர்ச்சிப் பணிகள் என்ற சாக்கில் நாட்டு வளங்களைச் சுரண்டி அழிக்கும் அரசியல்வாதிகளின் போக்கையும், அன்னிய முதலீடு நம் நாட்டிற்குள் நுழைவதனால் நீராதாரங்களும், விளைநிலங்களும் அழிந்து வியாபார தளமாகிவிட்டடதையும், விவசாயிகள் வறுமையின் காரணமாகத் தற்கொலை செய்துக் கொள்ளும் அவலத்தையும் சமூக நிகழ்வாக வெளிப்படுத்துகிறார்.

## 68. ஒரு மாமரமும் கொஞ்சம் பறவைகளும்

இயற்கையோடு இயைந்த இன்ப வாழ்வு நடத்திய காலத்தில் பிற உயிர்களை நேசித்த மனிதன் இன்று அறிவியல் துறையில் முன்னேறியுள்ள நிலையில் சக மனிதர்களைப் புரிந்து கொள்ளவும் விரும்பாத நிலையையும், அன்பு, கனிவு, இரக்கம், அரவணைப்பு, நட்பு போன்ற மனித உறவுகளுக்கு அடிப்படையான இயல்புகளைச் சிந்திக்கவும் நேரமில்லாமல் தன் வாழ்நாளை வீணாக்கிக் கொண்டிருக்கின்ற மனிதர்களின் நிலையையும் வெளிப்படுத்தும் விதமாக இச்சிறுகதையை அமைத்துள்ளார்.

## 69. இரைகள்

பணம் ஒருவரின் வாழ்க்கையை நிர்ணயிக்கும் கருவியாகச் செயல்படுவதையும், மருத்துவர்களின் மனிதாபிமானமற்ற அலட்சியப் போக்கால் ஏற்படும் விளைவுகளையும், பணம் இருந்தால் மட்டும் மருத்துவம் என்ற நிலையில் செயல்படும் மருத்துவமனைகளைப் பற்றியும் எடுத்துக் கூறியுள்ளார் படைப்பாசிரியர்.

## 70. நாராயண முதலித்தெரு 52-ஆம் நம்பர் வீடு

பொருளாதாரம் ஒரு மனிதனை இச்சமூகம் மதிக்கச் செய்யும் அடையாளம் என்பதையும், பிறருக்கு உதவி செய்யும் மனப்பான்மை இல்லாமல் மனைவி

மக்களுக்குள்ளே சுருங்கிப் போன சிறு வட்டத்திற்குள் உறவுகளைக் கொண்டு சுழல்கின்ற காலத்தையும், பொருளாதாரத்தில் நலிந்த நிலையில் உள்ள மனிதனின் நிலையையும், அவனை இச்சமூகம் பார்க்கும் பார்வையும், மையமாகக் கொண்டு இக்கதையைப் படைத்துள்ளார்.

### 71. அப்துல்லா இப்னு அபூபக்கர்

குறிப்பிட்ட வயதை அடைந்தும் திருமணமாகாத நிலையில் உள்ள பெண்ணின் உணர்வு கிளர்ந்தெழும் என்பதையும், வணிக நிமித்தமாக அரபியர்கள் இந்தியாவிற்குள் நுழைந்ததுப் பற்றியும், அவர்களின் எச்சங்களாக இங்குள்ள இசுலாமிய மக்கள் இருப்பதையும் தனது படைப்பின் வாயிலாக வெளிப்படுத்துகின்றார்.

### 72. தங்க வயல்

சமூகத்தில் இளமையைக் கடந்து முதுமை எனும் இறுதிக்கு வந்த முதியவர்களின் மனநிலையையும், வயதாகிய தந்தையைத் தனக்குச் சுமையாகக் கருதி அநாதையாக விட்டுச் சென்ற மகனின் மனிதாபிமானமற்ற செயலையும் சமூகத்தில் நிகழும் நிகழ்வாக வெளிப்படுத்துகிறார்.

### 73. ஒரு சவ ஊர்தியின் நகர் வலம்

பொருளாதாரத்தை மையமிட்டே உறவுகள் சுழலுகின்றன என்பதையும், சமூகத்தில் பொருளாதாரம் அற்ற நிலையில் வாழும் மனிதன் இவ்வுலகை விட்டுப் பிரிந்தாலும் அவனுக்குரிய இறுதிச் சடங்கும் கூட தடைப்படும் என்பதையும் மையப்படுத்தியுள்ளார்.

### 74. 1100-ஆம் ஆண்டு மகர மாசம் 18-ஆம் தேதி வில் பத்திரம்

காலத்தின் மாற்றத்தால் சமூகத்தில் பல்வேறு பரிணாம வளர்ச்சி அடைந்த நிலையிலும், குளத்தில் உள்ள நீர்ப்பாசிகள் போல நினைவுகள் என்றும் மக்களிடையே மாற்றம் பெறாமல் இருப்பதையும், தனது அறியாமையில் செய்த தவறை எண்ணி வருந்தும் மனிதர்களைப் பற்றியும் தன் விளக்க வெளிப்பாடாகப் படைத்துள்ளார்.

### 75. தலையில் துண்டு கட்டிய பெண்

இல்லறத்தில் சந்தேகம் என்ற பேய் மனத்தில் குடி கொண்டு, அதன் காரணமாகத் தன் மனைவியைத் துன்புறுத்தும் நிலையையும், பெண்கள் போகப் பொருளாக மட்டும் கருதப்படுவதையும், ஆண்களின் ஆணவத்தால் பெண்களின் சிந்தனைகள் நசுக்கப்படுவதையும் பெண்களுக்குத் தனி உணர்ச்சி சிந்திக்கும் திறன் இருப்பதை ஆண்கள் உணராமல் அடக்குவதையும் மையமாகக் கொண்டு இச்சிறுகதையைப் படைத்துள்ளார்.

## 1.12 படைப்பாளரின் சமயம்

தோப்பில் முகமது மீரான் இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவர். சமயத்தினை உயர்த்திப் பிடிப்பதில் இவருக்கு நிகராக வேறு எவருமில்லை என்று சொல்லும் அளவுக்கு அதன் மீது பற்றுக் கொண்டவர். தனது சமயத்தை எந்த நேரமும் நினைவு கூர்பவர் என்பதைத் தம் படைப்புகள் முழுக்கப் பதிவு செய்திருக்கிறார். இவரது படைப்புகளில் இடம் பெறும் கதைமாந்தர்களுக்குச் சேமது, மம்மாலிசம் பிள்ளை, கதிஜா, வியாத்துமா, ஜைனுலாபின், ஆபிதா, ஸைனயா, தாசீமின் பாத்திமா, ருக்கைய்யா, அப்துல் காதர் லெப்பை, லைலா, சலீமா, மைதின்பிள்ளை, வஹிதா, ஹமீதா, மைதீன், கரீம் என இசுலாமிய சமயப் பெயர்களை வைத்துள்ளதின் மூலம் இவரது சமயப்பற்று எவ்வாறு உள்ளது என்பதை அறிய முடிகிறது.

## தொகுப்புரை

உலகம் முழுவதும் சிறுகதை இலக்கியம் வெற்றிகரமாக வளர்ந்து வந்தது என்றாலும், தமிழ்நாட்டில் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில்தான் சிறுகதையும் இலக்கியத்தின் ஒரு பகுதி என்ற எண்ணம் வலுப்பெறலாயிற்று. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கம் முதல் தனக்கென சில அடிப்படை வரம்புகளை வைத்துக் கொண்டு வெவ்வேறு அமைப்புகளுடன் சிறுகதை வளரத் தொடங்கியது.

ஒருவருடைய படைப்புக்களை ஆய்வு செய்யும்போது அப்படைப்பாளியைப் பற்றி அறிந்து கொள்ளுதலும் அறிமுகப்படுத்தலும் இன்றியமையாததாகின்றன. இதன் மூலம் படைப்பாளரின் படைப்புச் சூழல் மற்றும் படைப்பாகத் திறனை அறியமுடிகிறது.

படைப்பிலக்கியவாதிகள் சமூகத்தில் தான் கண்ட நிகழ்வுகளையும், தனது அனுபவங்களையும், கற்பனையும் கலந்து சிறந்த படைப்பை உருவாக்குகின்றனர்.

படைப்பிலக்கியவாதிகள் சமுதாயத்தை நுணுக்கமாகப் பிரதிபலிப்பதோடு, சமுதாய மாற்றங்களுக்கான வழிமுறைகளையும் சிந்தித்து அதனைத் தங்கள் படைப்பில் வெளிப்படுத்துகின்றனர்.

மீரான் தனது படைப்புகளுக்குப் பின்புலமாகக் கன்னியாகுமரி மாவட்ட இசுலாமிய மக்களின் வாழ்க்கை முறைகளையும், பழக்கவழக்கங்களையும், நம்பிக்கைகளையும், அடிப்படையாக வைத்துக் கொண்டும், தான் பார்த்து வளர்ந்த சுற்றுப்புறச் சூழல்களைப் படைப்பின் களமாகக் கொண்டும், தன் விளக்க வெளிப்பாடாகப் படைப்புகளைப் படைத்துள்ளார்.

தோப்பில் முகமது மீரான் சிறுகதையில் வரும் மாந்தர்களின் பேச்சுக்களிலும், உரையாடல்களிலும் கன்னியாகுமரி மாவட்ட இசுலாமிய மக்களின் வட்டார வழக்குச் சொற்களையும், மலையாளம் தமிழ் கலந்த பேச்சுநடையையும் மையப்படுத்தித் தனது படைப்புக்களைப் படைத்திருப்பதைக் காணலாம்.

சிறுகதைக்கு உயிர்நாடியாக விளங்குவது கதைக்கருவாகும். தோப்பில் முகமது மீரான் தன் வாழ்க்கையில் காண நேர்ந்த சிறுசிறு நிகழ்ச்சிகளையே தம் சிறுகதைகளுக்குக் கதைக் கருவாகக் கொண்டுள்ளனர். சமுதாய ஏற்றத்தாழ்வுகள், மக்களிடையே இருக்கும் நம்பிக்கைகள், பெண்களின் நிலை, அறிவியல் சிந்தனைகள், செயலூக்கமிக்க மனிதாபிமானம், முதுமை நிலை ஆகியன மீரானின் சிறுகதைகளின் அடிக்கருத்துக்களாக அமைந்துள்ளன.

சமூகத்தில் காணப்படும் பெண்ணடிமைத்தனத்தின் கொடுமைகளை வேரறுக்கப் படைப்புக்களில் புரட்சிக்கரமானப் பெண் பாத்திரங்கள் நடைமுறைச் சிக்கல்களை மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளனர்.

படைப்புலகில் தனக்கென ஒரு தனி இடத்தையும், தனி நடையையும் உடையவர் முகமது மீரான் என்பதைப் பறைசாற்றும் வகையில் அவரது படைப்புக்கள் அமைந்திருக்கின்றன.

**சான்றெண் விளக்கம்**

1. சி. மறைமலை, **இலக்கியமும் சமூகவியலும்**, ப.89.
2. மேலது., ப.26.
3. மீனாட்சி முருகரத்தினம், **மேலை இலக்கியத் திறனாய்வு அறிமுகம்,** ப.68.
4. சி. மறைமலை, **இலக்கியமும் சமூகவியலும்**, ப.9.
5. மீனாட்சி முருகரத்தினம், **மேலை இலக்கியத் திறனாய்வு அறிமுகம்,** ப.9.
6. அ. மார்க்ஸ், **மார்க்சிய இலக்கியக் கொள்கை,** ப.3.
7. தோப்பில் முகமது மீரான், **நானும் என் எழுத்தும்,** ப.154.
8. மேலது., ப.152.
9. அ. சிவக்கண்ணன், **மு.வ. நாவல்களில் சமூகச் சிக்கல்கள்,** ப.16.
10. க. கைலாசபதி, **சமூகவியலும் இலக்கியமும்,** பக்.25-30.
11. அ. அ. மணவாளன், **இருபதாம் நூற்றாண்டின் இலக்கியப் கோட்பாடுகள்,** ப.9.
12. செ. சாரதாம்பாள், **இலக்கியமும் உளப்பகுப்பாய்வும்,** ப.8.
13. இராஜம் கிருஷ்ணன், **கரிப்பு மணிகள்,** முன்னுரை
14. கி.ரா. பதில்கள், ப. 17.
15. மேலது., ப.19.
16. விஜயலெட்சுமி ராஜாராம், **வட்டார இலக்கியமும் கி. ராஜநாராயணனும்,** ப.35.
17. தமிழண்ணல், **புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு,** ப.247.
18. மேலது., ப.483.
19. மேலது., ப.478.
20. மா. இராமலிங்கம், **நாவல் இலக்கியம்,** ப. 41.
21. கோ. கேசவன், **ராஜநாராயணனின் கலையாக்கம் ராஜநாரயணியம்,** ப.48.

# இயல் - 2

## சமய நம்பிக்கைகள்

**2.0** சமயம் அதைச் சார்ந்த மக்களின் நம்பிக்கைகள் வழிபாட்டு நெறிமுறைகள், சடங்குகள், பழக்கவழக்கங்கள் ஆகிய அனைத்தையும் ஆட்கொண்ட அமைப்பாக விளங்குகிறது. இறைநம்பிக்கை, வழிபாடு, சடங்கு ஆகியவற்றின் அடிப்படையில் மக்கள் உள்ளத்தைப் பக்குவப்படுத்தி அவர்கள் இவ்வுலகில் செம்மையாக வாழ்வதற்கு உதவுகின்ற வாழ்க்கை நெறி சமயம் ஆகும். **சமை** என்ற வினையின் அடியாகப் பிறந்தது சமயம். சமை என்பதற்குப் பக்குவப்படுத்துதல் என்ற பொருளுமுண்டு. பொதுவாக மனிதன் நம்பிக்கைகளால் தனது வாழ்வினை வாழ்ந்து கொண்டிருக்கின்றான். மனிதனின் மூன்றாவது கை நம்பிக்கை என்பர். அவனது நம்பிக்கைக் கைக்கூடும் போது அதில் உறுதி அடைகின்றான். மனிதன் கொண்டுள்ள பல்வேறான நம்பிக்கைகளில் மிகவும் முக்கியமாகத் திகழ்வது இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கையாகும். இது சமயநம்பிக்கையாகக் கருதப்படுகிறது.

உணர்ச்சிப்பூர்வமான கூறுகள் நம்பிக்கைகளைத் தீர்மானிக்கின்றன. வெளியிலிருந்து பார்க்கும் பார்வையில் சில நம்பிக்கைகளைப் பொய்யான நம்பிக்கைகளாக இனங்கான முடிந்தாலும் நம்பிக்கைகளைப் பின்பற்றும் மக்கள் அவற்றை உண்மைகளாக உணர்ந்தே வாழ்வில் கடைப்பிடிக்கின்றனர். மெய்ப்பிக்கப்படாமல் ஏற்றுக் கொள்ளப்பட்ட நம்பிக்கைகள் சமயத்தின் அடித்தளமாக அமைகின்றன.

நம்பிக்கைகள் பண்பாட்டின் முக்கியக் கூறுகளாக அமைகின்றன. மக்களின் வெவ்வேறு செயல்களில் அறிந்தோ அறியாமலோ நம்பிக்கைகள் வெளிப்படுகின்றன. நம்பிக்கைகளைச் செயல்வடிவமான வெளிப்பாடுகளில் மூலம் தான் உணர்ந்து கொள்ள இயலும். ஆனால், அச்செயல்பாட்டிற்கான காரணங்கள் மனித மனங்களில் உறைந்திருக்கும். இச்செயல்பாடுகள் வாய்மொழியாகவோ, நடத்தை சார்ந்தோ வெளிப்படும். இவற்றைத் தொகுத்து முறையான ஆய்விற்கு உட்படுத்துவதின் மூலம் குறிப்பிடட நம்பிக்கைகள் கொண்டு வாழும் மக்களின் பண்பாட்டினை உணர்ந்து கொள்ள இயலும்.

சமயங்கள் அனைத்தும் மனிதனை நெறிப்படுத்தத் தோன்றியிருக்கின்றன. நேரான வழியில் திசைகாட்டியாகச் சமய நம்பிக்கை குறிப்பிடப்படுகின்றது. அது சரியாக அமைந்துவிட்டால் இலக்கை எளிதில் அடைவது சாத்தியமாகும். தோப்பில் முகமுது மீரான் அவர்களின் சிறுகதைகளில் இசுலாத்தின் சமய நம்பிக்கைகள் குறித்த கருத்துக்கள் பற்றி ஆய்வதாக இவ்வியல் அமைகிறது.

இசுலாம் சமய நம்பிக்கைகள் குறித்த வரையறைகளை எட்டுப் பிரிவுகளாகக் கூறுகிறது.

2.0 முன்னுரை

2.1 இறைவன் மீது நம்பிக்கை

2.2 இறைவேதங்கள் மீது நம்பிக்கை (குத்புல்லாஹ்)

2.3 வானவர்கள் மீது நம்பிக்கை – (மலாயிகா)

2.4 பிறை பற்றி நம்பிக்கை

2.5 வழிபாடும் அதற்கு முந்தைய அழைப்புப் பற்றிய நம்பிக்கை

2.6 தர்ஹா பற்றிய நம்பிக்கை

2.7 இறுதி சடங்குகள் பற்றிய நம்பிக்கை

2.8 மறுமை நாள் பற்றிய நம்பிக்கை (ஆசிரா)

2.9 தொகுப்புரை

இந்த நம்பிக்கைகள் இசுலாத்தில் ‘அல் ஈமானுல் மு.ஃ.பஸ்ஸல்’ என அழைக்கப்படுகின்றன. இதனை

“ஆமன்து பில்லாஹி வ மலாயிக்கத்திஹி வகுதுபுஹி
வருஸீலுஹி. வல் யவ்மில் ஆகிரி. வல்கத்ரி ஹைரி ஹி
வஸர்ரிஹி மினல்லாஹி தஆலா வல்ப.ஃ.ஸி ப.ஃ.தல மவ்த்”[1] (ப. 44)

என்பதன் வழி அறியலாம்.

பொருள்: நான் அல்லாஹ்வையும், வானவர்களையும் அல்லாஹ்வின் வேதங்களையும், அவனது தூதர்களையும், இறுதிநாளையும் நம்புகிறேன். நன்மையும்,

தீமையும் சர்வ வல்லமை மிக்க அல்லாஹ்வின் விருப்பத்தினாலேயே ஏற்படுகின்றன என்பதையும் மரணத்திற்குப் பிறகுள்ள வாழ்க்கையையும் நம்புகிறேன் என "இஸ்லாம் நம்பிக்கைகளும் போதனைகளும்" என்ற நூலில் குலாம் சர்வர் விளக்கியுள்ளார்.

## 2.1 இறைவன் மீது நம்பிக்கை

இறைவன் மீது (நம்பிக்கை) ஈமான் கொள்ள வேண்டும் என்பதின் விளக்கம் (என்றால்) தன்னைக் குறித்து அல்குர்ஆனில் கூறியிருக்கும் தன்மைகள், (ஸி∴பத்துக்கள்) செயல்கள் அனைத்தும் உண்மையே என நம்புவதாகும். தவ்ஷீத் என்பதற்கு (அல்லாஹ்) இறைவன் ஒருவனே என்று பொருள். இது ஈமானின் (நம்பிக்கை) முதன்மையான பகுதி. திருக்குர்ஆனில் "சூரா இக்லாஸில்' இறைவன் மீது நம்பிக்கை கொள்வதுப் பற்றி தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

"கூறுவீவராக! அவன் அல்லாஹ் ஏகன். அல்லாஹ் எவரிடத்தும் எத்தேவையுமில்லாதவன். அனைவரும் அவனிடத்தில் தேவையுடையவர்களே. அவன் யாருடைய சந்ததியுமில்லை. அவனுக்கு யாரும் சந்ததி இல்லை. மேலும் அவனுக்கு நிகரானவர் எவரும் இலர்"[2]. (அல்குர் ஆன். 114:1-4)

இறைவன் ஒருவனே என்பது மிக முக்கியமான இசுலாமிய நம்பிக்கை. இதன் பொருள் பூமியிலுள்ள ஒவ்வொரு பொருளும் ஒரே படைப்பாளனாகிய அல்லாஹ்விடமிருந்து வந்தது. இறைவன்தான் இவ்வுலகத்தைப் படைத்துப் பரிபாலிப்பவனாகவும் அவற்றின் இயக்கங்களுக்கு ஒரே மூலகாரணமாகவும் இருக்கிறான் என நம்புவதாகும். தனது நம்பிக்கையை அறிவிப்பது ஒரு முஸ்லீமின் முதல் கடமை. மனிதன் இந்த நம்பிக்கையை அறிவிக்கும் பொருட்டு மனத்தாலும் சொல்லாலும் 'லாஇலாஹா இல்லல்லாஹ்' – அதாவது வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை என்று ஒவ்வொரு இசுலாமியரும் நம்பிக்கை கொள்ள வேண்டும். உறுதிமிக்க நம்பிக்கை எவரின் உள்ளத்தில் ஊடுருவி விட்டதோ அவர் உலகத்தின் துன்பங்கள் எவ்வளவு கடுமையாக இருப்பினும் அவற்றைத் தனது இறைநம்பிக்கைக்கு முன் மாபெரும் வெள்ளப் பெருக்கின் மேல் வரும் ஒன்றுமில்லா நுயையாகவே பார்ப்பர் என்பதை

> "சத்தியத்திற்கும் அசத்தியத்திற்கும் அல்லாஹ் இதனை உதாரணமாகக் கூறுகிறான். ஏனெனில் (அழுக்கு) நுரையோ

பயனற்றதாக (இருப்பதால்) அழிந்து (மறைந்து) விடுகிறது. மனிதனுக்குப் பயனளிக்கக் கூடியவையோ பூமியில் சேர்த்து வைக்கப்பட்டு நிலையாக இருக்கின்றன. இவ்வாறே நம்பிக்கை அற்றவர்களை அழுக்கு நுரைக்கும், நம்பிக்கையாளர்களை பூமியில் சேர்த்து வைக்கப்படும் பயன்தரும் பொருள்களுக்கும் ஒப்பிட்டு அல்லாஹ் உதாரணம் கூறுகிறான்”[3]. (அல்குர் ஆன் 13:17)

குர்ஆனின் இக்கருத்துக்கள் இறைவனின் மீது நம்பிக்கை கொள்வதினால் உண்டாகும் பயனை அளிப்பதாக அமைந்துள்ளன. அறிவுத்துறைகள் ஆயிரம் இருந்தாலும் அவற்றில் எல்லாம் தலையாயது இசுலாம் நம்பச் சொல்பவை குறித்த அறிவைப் பெறுவது. நம்பிக்கைகள் என்ற அடித்தளங்களின் மேல்தான் இசுலாம் என்ற மாளிகை நிர்மாணிக்கப்பட்டுள்ளது. இந்த நம்பிக்கைகள்தான் மனிதன் சூழ்நிலைகளால் சுரண்டப்பட்டுவிடாமல் பாதுகாப்பவை இசுலாமியர்கள் நேர்வழியில் நிலைத்து நிற்கவும் சமுதாயத் துறையில் விரைந்து முன்னேறவும் வழிவகுப்பவை.

“உங்களில் எவரேனும் ஒருவர் தம்முடைய மார்க்கத்திலிருந்து திரும்பி அவர் காபிராக (நிராகரிப்பவராக) இறந்துவிட்டால் அவர்களின் நற்கருமங்கள் இவ்வுலகத்திலும், மறு உலகத்திலும் பயன் தராமல் அழிந்துவிடும். இன்னும் அவர்கள் நெருப்பின் தோழர்களாக (நரகவாசிகளாக) அந்நெருப்பில் என்றென்றும் தங்கி விடுவார்கள்”[4].

(அல்குர்ஆன் 2:217)

மேற்கூறப்பட்ட இறைவசனம் இறை நம்பிக்கைதான் ஒருவன் செய்யும் நற்செயல்களின் பிரதிபலனை நிர்ணயிக்கும் நீதிபதியாக இருக்கின்றது என்பதை எடுத்துக்காட்டுகின்றது. தோப்பில் முகமது மீரான் இசுலாம் சமயத்தை மையப்படுத்திப் படைக்கும் சிறுகதைகளில் கதை மாந்தர்கள் மற்றும் நிகழ்வுகள் வாயிலாக இறை நம்பிக்கையை வெளிப்படுத்தியுள்ளார்.

இசுலாத்தின் அடிப்படைக் கடமைகள் ஐந்து. (கலிமா, தொழுகை, நோன்பு, ஜக்காத், ஹஜ்) இவற்றில் ஒன்றான தொழுகையை எத்தகைய இடர்ப்பாடுகள் நேர்ந்தாலும் அவற்றைச் சரிவர நிறைவேற்றுவது ஒவ்வொரு இசுலாமியரின் கடமையாகும். தஜ்ஜால் மேல் விழுந்த மலை என்ற சிறுகதையில் வரும் மோதினார்

(தொழுகைக்கு அழைப்பு விடும் பணி செய்பவர்) வறுமை நிலையில் இருந்தாலும் அவரின் இறை நம்பிக்கை என்பது ஒருபோதும் மாறவில்லை என்பதைத் தோப்பில் முகமது மீரான் சுட்டிக் காட்டுகிறார்.

தனக்கு உடல்நிலை சரியில்லாத நிலையில் கூட மனது மதக் கடமையைச் சரியாக நிறைவேற்ற வேண்டும் என்ற எண்ணத்தில்

> "காலில் சீவன் முடியும் வரை – தொண்டையில் குரல்
> ஓயும் வரை நானே பாங்கு சொல்லுவேன்"[5]. (ப. 37)

என்று கூறுவதின் மூலம் ஆசிரியரின் இறைநம்பிக்கை கதைமாந்தர் வழி வெளிப்படுகின்றது.

மனிதனுடைய வாழ்வில் மிகுந்த வேதனையும் துன்பமும் நிறைந்த காலம் அவனடைய 'அந்திமக்காலம்' இதனை, தோப்பில் முகமது மீரான்' இதை எப்படி நிறுத்துவது'? என்ற சிறுகதையின் வாயிலாக எடுத்துரைக்கின்றார். இறப்பின் தருவாயில் இறை நம்பிக்கையோடு ஒருவன் தனது உயிரை விடுவது. மறுமைக்கான வெற்றியாக அமையும் என்பதை,

> "எல்லாம் கேட்கும் பிள்ளே. கரயாதெங்கோ. காதிலொ கலிமா சொல்லிக் குடுங்கோ புள்ளே இந்த நேரம் கரயப்படாது, மெனத்து எல்லோருக்கும் உண்டு. நல்ல ஈமானோடு மரீக்கீதுக்குக் கேளுங்கோ. தலமாட்டிலிருந்து குர்ஆன் ஓதுங்கோ"[6]. (ப. 152)

தனது சிறுகதையின் வாயிலாக வெளிப்படுத்துகிறார். குர்ஆன் ஓதுவது, கலிமா சொல்லிக் கொடுப்பது இவையாவும் இறைநம்பிக்கையாகும் என்பதைக் கதை மாந்தர்களின் வாயிலாக அறிய முடிகிறது.

கணவனை இழந்து, உறவினர்களின் ஆதரவும் இல்லாமல், தனது வறுமையைப் போக்கிக் கொள்ள தேங்காய்த் தோப்பில் காவல் காக்கும் தொழில் செய்து வருகின்ற மைதீன் பீவி இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கையை "கொலுசு அணிந்த பாதங்கள்" என்ற சிறுகதையில் ஆங்காங்கே வெளிப்படுத்துகிறார்.

"ரகுமானே... இந்த ஒரு ஈடாவது தேங்கா
களவு போகாமை இருக்கணுமே...." (ப. 185)

மேலும்,

"ரப்பே நெட்டி இல்லாமலிருக்கட்டும்
பத்து பதினைந்து நெட்டிகள் இருக்கும்"[7] (பக்.184-185)

இவ்வரிகளின் வாயிலாக இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கை ஒரு மனிதனைக் கடமையுணர்வுள்ளவனாகவும், நேர்மையாளனாகவும் மாற்றுகிறது என்பதை மைதீன் பீவி பாத்திரத்தின் வாயிலாக ஆசிரியர் இறைநம்பிக்கையை வெளிப்படுத்துகிறார்.

இறைவன் மீது நம்பிக்கை கொள்ளும் போது தன்னம்பிக்கையும் சுயமரியாதையும் ஏற்படுகிறது. தன்னுடைய தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இறைவனைத் தவிர வேறு யாரையும் சார்ந்திருக்க வேண்டியதில்லை என நம்பிக்கையாளன் தெரிந்து கொள்கிறான். தனக்குத் தேவையானவற்றை வழங்கக்கூடிய ஆற்றல் இறைவனுக்கு மட்டுமே உண்டு. வேறு யாருக்கும் நன்மையையோ, தீமையையோ ஏற்படுத்தும் ஆற்றல் இல்லையென அவன் உறுதியாக நம்பி மனநிறைவு கொள்கிறான் என்பதை '45வது வார்டு வேட்பாளர்' என்னும் சிறுகதையில் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகிறார்.

"பாரஅத் என்னா, என்ன?
.... புதுக்கணக்கு
அப்படீன்னா?
நன்மையும், தின்மையும் கூட்டிக் கழித்து அயந்தொகை
எடுத்து அல்லா புதுக்கணக்குப் போடுத நாள்"[8]. (ப.377)

என்று கூறுவதின் மூலம் இறைவன் ஒருவனால் மட்டுமே நன்மையும், தீமையும் வழங்க முடியும் என்றும், தீர்ப்பு நாளில் நமது எண்ணங்களுக்கேற்றவாறு நமக்குத் தீர்ப்பு வழங்கப்படும் என்றும் சுட்டுகிறார். அல்லாஹ்வின் வழிகாட்டுதலைப் பின்பற்றினால் நாம் பரிசளிக்கப்படுவோம். இல்லாவிட்டால் தண்டிக்கப்படுவோம்

என்பதையும் தன் சிறுகதைகளின் வழியாக இறைவன் மீது கொண்டுள்ள நம்பிக்கையை வழிப் புலப்பபடுத்துகின்றார்.

இறைநம்பிக்கையோடு வாழ்ந்து இறைநம்பிக்கையுடன் இறப்பவரே வெற்றி பெற்றவர் ஆவார் எனும் இசுலாம் சமயத்தின் உன்னதமான கருத்துக்களைப் படைப்பாளர் தோப்பில் முகமது மீரான் அவர்கள் "ஒரு குட்டித்தீவின் வரைபடம், காலண்டர் பாவா, நாராயண முதலித்தெரு, 52-ஆம் நம்பர் வீடு போன்ற சிறுகதைகளின் வழி ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றார்.

## 2.2 வானவர்கள் மீது நம்பிக்கை

உலகில் எண்ணற்ற படைப்பினங்கள் உள்ளன. சில படைப்பினங்களை நாம் நன்றாகப் பார்க்கிறோம். சில படைப்பினங்களை நாம் பார்த்தாலும் நம்மால் அவற்றைத் தொட முடியவில்லை. ஆனால் நம்மால் அவற்றை உணரமுடியும். உதாரணம் காற்று. சில படைப்பினங்களை நம்மால் பார்க்க முடியாது. தொடவும் முடியாது, உணரவும் முடியாது. நம்முடைய அறிவுத்திறனைக் கொண்டு அறியத்தான் முடியும். அப்படிப்பட்ட படைப்பினங்கில் உள்ளவர்களில் வானவர்களும் அடங்குவர். இறைவன் படைத்த படைப்புகளில் சிறந்த படைப்பாக வானவர்கள் (மலாயிக்க) விளங்குகின்றனர். வானவர்கள் சில குறிப்பிட்ட கடமைகளை செய்வதற்காகத் தெய்வீக ஒளியிலிருந்து (நூர்) படைக்கப்பட்டுள்ளனர். ஒப்பிடும்போது முதல் மனிதரான ஆதம் (அலை) களிமண்ணிலிருந்து படைக்கப்பட்டுள்ளார். ஜின் நெருப்பினாலும், இப்லீஸ் எனப்படும் ஷைத்தான் ஜின்னிலிருந்தும் படைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் எந்நேரமும் இறைவனை வணங்கிக் கொண்டு இருப்பவர்கள். இவர்களுக்கு உறக்கமோ மனிதனுக்குள்ளே தேவைகள் எதுவுமில்லை.

இறைவன் கட்டளையிடுகின்ற பணிகளைச் செய்வதற்குத் தேவையான பண்புநலன்களும், ஆற்றல்களும் வானவர்களுக்கு வழங்கப்படடுள்ளன. அதனால் சுய விருப்பம் எதுவும் கிடையாது. இதற்கு மாறாக, நன்மையும், தீமையும் சுயவிருப்பத்தின் அடிப்படையில் தேர்ந்தெடுக்கும் உரிமை மனிதனுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. ஏனெனில் மனிதன் தன் செயல்களுக்காக இறுதித்தீர்ப்பு நாளில் கணக்கு ஒப்படைக்க வேண்டியவனாக இருக்கிறான்.

இறைவனின் ஆட்சியின் கீழ் வானவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களில் முக்கியமானவர்கள்.

- ஜிப்ரில்
- மிக்காயில்
- இஸ்ராயில்
- இஸ்ரா.ஃ.பீல்
- முன்கர், நக்கீர்

அல்லாஹ்விடமிருந்து இறைச் செய்திகளை முஹம்மது (ஸல்) அவர்களுக்கும் மற்ற தூதர்களுக்கும் கொண்டு வந்தவர் ஜிப்ரில் (அலை). மரணத்திற்கான வானவர் 'மலக்கில் மவ்த்' எனப்படும் இஸ்ராயில் ஆவார். உலகில் இறுதிநாளின் போதும் தீர்ப்புநாளிலும் இஸ்ரா.ஃ.பீல் எக்களம் ஊதுவார்

இறைவனால் படைக்கப்பட்ட வானவர்கள் மக்களுக்கு இறைக்கட்டளைகளையும் நன்மைகளையும், தீமைகளையும் பகுத்தறியும் பண்புகளையும் உணர்த்தியவர்கள் என முழுமையாக நம்ப வேண்டும். இதனைத் திருக்குர்ஆனில்

> "முஸ்லீம்களாகிய நாம் இறைத்தூதர்கள்
> அனைவரையும் நம்ப வேண்டும்" (2:285)

எனத் தெரிவிக்கப் பெற்றுள்ளது. மேலும்,

> "நாம் ஒவ்வொரு சமூகத்திற்கும் ஒரு தூதரை அனுப்பினோம்... இறைத்தூதர்கள் அனைவரும் நற்செய்தி அறிவிப்பவர்களாகவும், எச்சரிப்பவர்களாகவும் அனுப்பி வைக்கப்பட்டவர்கள். ஏனெனில், அத்தூதர்கள் அனுப்பப்படட பிறகு (எங்களை எச்சரிக்க எவரும் வரவில்லை) என்று முறையிட மக்களுக்கு ஓர் ஆதாரம் எதுவும் இருக்கக் கூடாது என்பதற்காக"[10]. (திருக்குர்ஆன். 16:36: 4:165)

எனக் கூறுகிறது. வானவர்கள் மனித வடிவில் வந்தால் தவிர அவர்களை நம்மால் காணமுடியாது. நபித்தோழர்களை எல்லாம் ஒன்றிணைத்து ஒருமுறை அவர்கள்முன்

வானவர் ஜிப்ரில் மனித வடிவில் தோன்றினார். அவர்களுக்குப் போதிப்பதற்காகவே அவர் வந்தார். ஆயினும், அவர் ஒரு வானவர் என முஹம்மது (ஸல்) அவர்கள் மட்டுமே தெரிந்து கொண்டார். வானவர்கள் தங்கள் கடமையைச் செய்வதற்கு ஏற்ற வடிவம் பெறச் சக்தியுடையவர்கள். இறைவன் எதைக் கட்டளையிடுகிறானோ அதைச் செய்கின்றவர்கள். அவர்கள் இறைவனின் விருப்பத்தை நிறைவேற்றுகின்ற, பாவம் செய்யாத, தூய பணியாளர்கள் என்ற கருத்துக்களில் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைப் பற்றி படைப்பாளர் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதையோடு ஒட்டி வெளிப்படுத்துகின்றனர்.

இதை எப்படி நிறுத்துவது? என்னும் சிறுகதையில் மரணப்படுக்கையில் இருக்கும் மலுக்கு முஹம்மது உயிரைக் கைப்பற்ற வரும் இஸ்ராயீல் என்ற வானவரின் வருகைப் பற்றி

> “அந்நேரம் கால் ஓசை வெளியே கேட்காதவாறு உள்ளே நுழையும் இஸ்ராயீல் என்ற மலக்கு கண்ணுக்குப் புலப்படாத தம் கரங்களால் மலுக்கு முஹம்மதுடைய உயிரைக் கிள்ளி எடுத்துவிட்டு சூனியத்தில் இறக்கை கட்டிப் பறந்து மறையும்”[11]. (ப. 152)

என்று கூறுவதன் மூலமாக வானவர்கள் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையைக் கதை மாந்தர்களின் வாயிலாகச் சுட்டுகின்றார்.

இசுலாம் சமயத்தில் வலியுறுத்தப்படும் இறப்பிற்குப் பின் உள்ள நிகழ்வுகள் நம்பிக்கையின் அடிப்படையில் நிகழ்வதாக ‘சுருட்டுப்பா’ என்ற சிறுகதையில் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

> “மக்கத்துக்குச் செல்லும்போது கப்பலில் இறந்தால் மய்யித்தைக் கடலிலல்லவா இறக்குவார்கள். கடலுக்கடியில் முன்கர் நக்கீர் போவார்களா? அந்த மய்யித்துக்ச் சொர்க்கம் கிடைக்குமோ?’[12].
> (ப. 211)

மேற்குறித்த வரிகளில் ஒருவர் இறந்தபின் அவரது மறுமை நாளில் முன்கர், நக்கீர் எனும் வானவர்கள் இறந்தவர்களின் மய்யித்திற்கு (சடலத்திற்கு) முன்பு தோன்றி இவ்வுலக வாழ்க்கை பற்றிய நிகழ்வுகள் குறித்த கேள்விகளைக் கேட்பார்கள்

என்பது நம்பிக்கையாகும். இந்த நம்பிக்கையைச் சுருட்டுப்பாவின் மனைவி ஆமினா உம்மாள் கூறுவதாக மீரான் படைத்துள்ளார்.

இறந்தவரை அடக்கம் செய்த பின்பு அவரின் புதைக்குழிக்குள் (கபுறுக்குள்) மனித கண்களுக்குப் புலப்படாமல் முன்கர், நக்கீர் என்ற இருவானவர்களும் நுழைந்து அவரிடம் இம்மை வாழ்க்கையில் செய்த நற்காரியங்கள் பற்றிக் கேள்வி கேட்கின்றனர். நன்மை செய்தவர்களைச் சொர்க்கத்தில் வரவேற்பார்கள், தீமை செய்வதவர்களை நரகத்தில் விசி எறிவார்கள் என்பதை,

> "இப்பம் மலாயிக்கத்துக்கள் (வானவர்கள்), கபருக்குள் கேள்வி கேட்கும் நேரம்.... துனியாவில் (உலகில்) நன்மை செய்தவர்களுக்கு மட்டுமே, கேள்விகளுக்கு உடன் பதில் சொல்ல முடியும். அப்படிச் சொல்பவர்களுக்குச் சொர்க்கப் பதவியும் கிடைக்கும். பதில் சொல்ல முடியாத பாவிகள் நரக நெருப்பில் கிடந்து எரிய வேண்டும்"[13].
>
> (ப. 371)

என்பதன் வழி உணர்த்தியுள்ளார். வானவர்கள் பற்றி மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையை 'சூட்சும இடைவெளி' என்னும் சிறுகதையில் தன் விளக்க வெளிப்பாடாகப் படைத்துள்ளார்.

இறைவன் கட்டளையிடுகின்ற பணிகளைச் செய்வதற்குத் தேவையான பண்பு நலன்களும் ஆற்றல்களும் வானவர்களுக்கு வழங்கப்பட்டுள்ளன என்பதை 'உம்மாவின் ருஹ்' என்னும் சிறுகதையில்,

> "இஸ்ராயீல் என்ற உயிர் பிடிக்கும் வானவருக்கு அல்லாஹ் கற்றுக் கொடுத்த நுட்பமான முகர்வு அறிவைக் கொண்டு உம்மாவின் மூச்சுக் கரைந்த காற்றை மோப்பம் பிடித்து பின் தொடர்ந்த இஸ்ராயீல் உம்மாவைக் கொண்டு செல்வதற்கு முன் ஆஸ்பத்திரி அறைக்குள் புகுந்து பதுங்கிக் கொண்டிருந்த மர்மத்தை யாரும் அப்போது அறியவில்லை"[14]. (ப.255)

என்று வானவர்கள் அறிவு நுட்பத்தைத் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகின்றார். தோப்பில் முகமது மீரான் இசுலாம் சமயத்தைச் சார்ந்தவர் என்பதால் அவரது சிறுகதைகள் இசுலாமிய சமய நம்பிக்கையை அடியெற்றியே அமைகின்ற எனலாம். வானவர்கள் மீது கொண்டுள்ள நம்பிக்கையை 'வானவர்கள் செல்லுமிடம்', 'பச்சைநிறக் கார்', 'முன்னோர்களின் இரண்டாவது நல்லடக்கம்', 'ஒரு சவ ஊர்த்தியின் நகர் வலம்' போன்ற சிறுகதைகளில் ஆங்காங்கே சுட்டிச் சென்றுள்ளார்.

## 2.3 இறைவேதங்கள் மீது நம்பிக்கை

இறைவன் மனிதனைப் படைத்து அவன் தான் விரும்புவது போல் வாழ்ந்து கொள்ள விட்டுவிடாமல் வாழ்க்கை நெறியை வேதங்களின் மூலமும் தூதர்களின் மூலமும் வகுத்துக் கொடுக்கின்றான். இவற்றின் அடிப்படையில் மனித சமுதாயத்திற்கு வேதமாக அல்குர்ஆனையும், தூதராக முஹம்மது (ஸல்) அவர்களையும் அனுப்பியுள்ளான். எனவே நமது வாழ்க்கையை நாம் நினைப்பது போன்றெல்லாம் அமைத்துக் கொள்ளாமல் அல்குர்ஆனும் நபிமொழியும் காட்டித் தரும் நெறியிலேயே அமைத்துக் கொண்டால் வாழ்வு சிறப்புறும் என்று 'வேதவரிகளும் தூதர் மொழிகளும்' என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

> "(திருக்குர்ஆன்) பெரும்பாக்கியங்கள் நிறைந்த ஒரு வேதமாகும். இதனை நாம் உம்மீது (நபிகள் நாயகத்தின் மீது இறக்கி அருளியுள்ளோம். இந்த மக்கள் இதனுடைய வசனங்களைச் சிந்திக்க வேண்டும்; அறிவுடையோர் இதிலிருந்து படிப்பினை பெற வேண்டும் என்பதற்காக"[15]. (ப.34)

உலகில் பல்வேறு பகுதிகளில் வாழ்ந்த மக்களுக்கு இறைவன் வழிகாட்டுதல்களை வழங்கியிருக்கின்றான் என்பது இசுலாத்தின் கோட்பாடாகும். இந்த வழிகாட்டுதல்களில் இறுதியாக வந்தது திருக்குர்ஆன். இது மனிதகுலம் முழுவதற்கும் எல்லாக் காலத்திற்கும் வந்த ஒரு வழிகாட்டியாகும். திருக்குர்ஆனுக்கு முந்தைய வேதங்கள் ஒரு குறிப்பிட்ட பகுதியில் வாழ்ந்த மக்களுக்கு அருளப்பட்டவை.

ஒரு நம்பிக்கையாளன் குர்ஆனில் குறிப்பிட்ட எல்லா வேதங்களையும் நம்புகிறான். இசுலாமில் வேதங்கள் நான்கு வகைப்படும். அவை

- தவ்ராத்
- ஜபூர்
- இன்ஜீல்
- திருக்குர்ஆன்

தவ்ராத் வேதம் மூஸா நபிக்கும் (வானவருக்கும்) ஜபூர் வேதம் தாவூத் நபிக்கும், இன்ஜீல் வேதம் ஈஸா நபிக்கும், திருக்குர்ஆன் முஹம்மது (ஸல்) நபிக்கும் அருளப்பட்டது. வேதங்களில் திருக்குர்ஆன் மட்டுமே மாற்றப்படாமலும் இடைச்செருகல் இல்லாமலும் அதன் உண்மை வடிவில் நிலைத்திருக்கிறது. தவ்ராத்தும், ஜபூரும், இன்ஜீலும் இப்போது இல்லை. இப்போது அவற்றின் மூலவடிவத்தில் கிடைக்கும் வேதகால நூல்களெல்லாம் அந்தந்த வேதங்கள் அருளப்பட்ட இறைத்தூதர்களின் மரணத்திற்குப் பிறகு அவர்களைப் பின்பற்றுவோரால் எழுதப்பட்டவை.

இறைச் செய்திகளை மொழியும் வேதங்களின் வழிகாட்டுதல் மனிதகுலத்திற்கு இறைவன் வழங்கிய மிகப்பெரும் அருட்கொடை என்பதை இறை வேதங்கள் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையைத் தலைப்பொருள். இறக்கை இழந்த பறவை, ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை, இதை எப்படி நிறுத்துவது? சூட்சும இடைவெளி, ஓர் உஸ்தாதின் அகமியம் போன்ற சிறுகதைகளின் வாயிலாகச் சுட்டிச் செல்கிறார்.

‘தலைப்பெருநாள்’ என்ற சிறுகதையில் வரும் ஆபிதாவிடம் தாய் வியாத்தும்மா வெள்ளி இரவு என்பதால் ‘புர்தா’ என்னும் வேதநூலை எடுத்து ஓதுமாறு கூறினாள். இதனை,

“நிலைப்படியில் தகர விளக்கை வைத்துக் கொண்டு
ஆபிதா புர்தா ஷரீபை ஓதத் தொடங்கினாள்
மௌலாய சல்லிவஸல் லிம்தாயி மனஅபதா....
அமின் ததக்குரிஜீ ரானின் பிதீ ஸலமீ....[16] (ப.17)

என ஓதுவதினால் வறுமை என்னும் இருள் நீங்கி வாழ்வில் ஒளிப் பெருகும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் தான் வேதநூல்களை ஓதுகின்றனர் என வியாத்தும்மா என்ற கதை மாந்தரின் மூலமாக எடுத்துரைக்கின்றார். மதங்கள் இறை நம்பிக்கையை மையமாக வைத்தே தோற்றம் பெற்றுள்ளன. இன்று உலகில் கடவுள் நம்பிக்கையற்ற ஒரு மதத்தையேனும் காணமுடியவில்லை. ஒவ்வொரு மதத்தினரும் தத்தமது வேதநூல்களாகக் கருதும் அந்த மத வழிகாட்டிகளை வைத்தே கடவுள் நம்பிக்கையையும், கடவுளுக்கு இருக்க வேண்டிய பண்புகளையும், குறிப்பிட்ட அந்த மதத்தோடு பின்னிப் பிணைத்துள்ளனர் என்பதை 'ஓர் உஸ்தாதின் அகமியம்' எனும் கதையில் எடுத்துரைக்கிறார்.

> "புள்ளே ஓதியாச்சா, நேரத்தெ ஊட்டுக்குப் போ....
> மௌலூதுக்குள்ள சாமான் வாங்கிக் கொடு"[17]. (ப.191)

என மதத்தின் வழிகாட்டியயான உஸ்தாத் (ஆசிரியர்) தனது மாணவர்களுக்கு (தில்மீதுகள்) இறைநம்பிக்கையை வேதங்களின் மூலமாக எடுத்துரைப்பதாகப் படைத்துள்ளார்.

அறிவியல் முன்னேற்றத்தால் பல மாற்றங்கள் தொழுகைப் பள்ளியில் நடந்திருந்தாலும் இறைவேதங்களை ஓதி நேர்ச்சை வழங்கும் பழக்கம் இன்னும் நிலைத்திருப்பதை "ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை" எனும் சிறுகதையின் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

> "யாசீன் ஓதினார்கள்
> நேர்ச்சை வழங்கினார்கள்"[18]. (ப.114)

இயற்கையின் பாதிப்புகட்கு உட்பட்ட நிலையில்தான் மனிதனிடத்தில் கடவுட் கோட்பாடுகளும் வழிபாட்டு முறைகளும் தோன்றின. ஒரு சமூக அமைப்பின் மரபினைக் கண்டு கொள்வதற்கு அச்சமூகத்தின் நம்பிக்கைகள்தான் துணைபுரிகின்றன. இந்த நம்பிக்கைகள் சமூகத்தின் தேவை கருதியும், குறிக்கோளினை மையப்படுத்தியும், காலம் கடந்தும் வளர்ந்து வருகின்றன என்பதை மைதீன் பிள்ளை என்னும் கதைமாந்தரின் வாயிலாக வெளிக்காட்டுகிறார்.

இறப்புத் தருவாயில் இறைநம்பிக்கையோடு தனது உயிரை விடுவதால் அதுவே மறுமைக்கான வெற்றியாக அமையும் என்பதை அடியொற்றி ‘இதை எப்படி நிறுத்துவது?’ எனும் சிறுகதையைத் தோப்பில் முகமது மீரான படைத்துள்ளார்.

“நல்ல ஈமானோட மரீக்கீதுக்குக் கேளுங்கோ
தலைமாட்டிலிருந்து குர்ஆன் ஓதுங்கோ”[19]. (ப.152)

இறக்கும் தருவாயில் உள்ளவர்களுக்கான குர்ஆன் ஓதுவது, கலிமா சொல்லிக் கொடுப்பது இவையாவும் இறைநம்பிக்கைகளாகும். இறந்த ஆன்மா நல்ல பயனைப் பெற வேண்டுமெனில் அதற்கான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டும் என்பதைக் கதைப்பாத்திரங்களின் மூலமாக விவரித்துள்ளார். இறைவேதங்கள் தனது வழிகாட்டுதல்களையும், போதனைகளையும் பின்பற்றுமாறு மக்களை வலியுறுத்துகின்றன. இவ்வுலகிலும், மறுமையிலும் மனித இனத்தின் வெற்றி இறைவேதங்களைப் பின்பற்றுவதிலேயே அமைந்திருக்கிறது எனும் கருத்தைச் சுட்டிச் செல்கின்றனர்.

## 2.4 பிறை பற்றிய நம்பிக்கை

இசுலாம் சமயத்தின் ஒவ்வொரு பண்டிகைகளும், விழாக்களும் பிறையை அடிப்படையாகக் கொண்டே அமையும். இவற்றில் முக்கியமானது ரமலான் மாதமாகும். இம்மாதத்தில்தான் ஒவ்வொரு இசுலாமியரும் தனது கடமைகளுள் ஒன்றான நோன்பை நோற்கின்றனர். ஒவ்வொரு இசுலாமியரும் சிறப்பாகக் கருதப்படும் மாதமாக ரமலான் விளங்குகிறது. இந்த ரமலான் மாதத்தில் முப்பது நாள்களும் நோன்பு நோற்பது கடமையாக்கப்பட்டுள்ளது. இதனை,

“ஈமான் கொண்டோர்களே! உங்களுக்கு முன் இருந்தவர்கள் மீது நோன்பு விதிக்கப்பட்டிருந்தது போல் உங்கள் மீதும் விதிக்கப்பட்டுள்ளது. அதன் மூலம் நீங்கள் தூய்மையுடையோர் ஆகலாம்”[20]. (அல்குர்ஆன் 2:183)

எனவும்

"ரமலான் மாதம் ஏத்தகையதென்றால் அதில்தான் மனிதர்களுக்கு வழிகாட்டியாகவும், தெளிவான சான்றுகளைக் கொண்டதாகவும, நன்மை-தீமைகளைப் பிரித்தறிவிப்பதுமான அல்குர்ஆன் இறக்கியருளப் பெற்றது. ஆகவே உங்களில் எவர் அம்மாதத்தை அடைகிறாரோ, அவர் அம்மாதம் நோன்பு நோற்க வேண்டும்"[21].

(அல்குர்ஆன். 2:188)

எனவும் நோன்பு பற்றித்திருமறையில் கூறப்பட்டுள்ளது. நோன்பு நோற்று முடிந்த மறுநாளே ஷவ்வால் பிறை முதல் நாள் கொண்டாடப்படும் பண்டிகையையே ரம்ஜான் (ஈதுல் ஃபிதர் எனும் ஈகைத் திருநாள் அல்லது பெருநாள் பண்டிகையாகும். இச்சிறப்பு வாய்ந்த ஈகைத் திருநாள் பற்றி 'விளக்கு' சிறுகதையில் ஆசிரியர் வெளிக்காட்டுகின்றார்.

'உலக முஸ்லீம்களின் மனதில் தேங்கி கிடந்த
துயரங்களை இந்த இரவும் நாளைய பகலும்
துடைத்தெடுக்கின்றன"[22]. (ப. 13)

இசுலாம் சமயத்தின் ஒவ்வொரு பண்டிகைகளும், விழாக்களும் காரணத்தின் அடிப்படையிலே கொண்டாடப்படுகின்றன. இந்தக் கொண்டாட்டத்தின் பெரும் மகிழ்ச்சியைத் தன் வசப்படுத்திக் கொள்பவர்கள் சிறுவர்களே. பிறையைக் கண்ட சிறுவர்களின் களிப்புப் பற்றி,

"ஆற்றுப் பள்ளியில் பாறைமேல் பிறை காணக் கூடி நின்றவர்களின் தொண்டையிலிருந்து மகிழ்ச்சி நுரைத்துப் பொங்கி வார்த்தைகளாக வழிந்தது.

'பெறை கண்டாச்சோ'

"ஓ....
'பெறை கண்டாச்சோ'
ஓ...."[23] (ப.9)

என்று பிறை கண்ட செய்தியைக் கேட்டவுடன் நாளைப் பெருநாளை எதிர்நோக்கி நின்ற பிஞ்சு உள்ளங்களின் உள்ளிருந்து தோன்றிய ஆரவாரம் நாளை வரும் பெருநாளை இன்முகத்தோடு வரவேற்றது. பெருநாளின் இன்பம் என்பது இசுலாமியர்கள் அனைவரையும் களிப்படையச் செய்து இன்பத்தின் மகிழ்ச்சியின் எல்லைக்கே கொண்டு செல்லக் கூடியதாகும். மகிழ்ச்சியை 'இறக்கை இழந்த பறவைகள்', 'காலண்டர் பாவா' முதலிய சிறுகதையின் வாயிலாகப் புலப்படுத்துகின்றார்.

> "அதன் மரணப் படுக்கையிலிருந்து பிறக்கும் அந்த இரவைத்தான் மக்கள் கூர்ந்து பார்த்துக் கொண்டு நிற்கின்றனர். அந்த இரவின் கர்ப்பத்திற்குள்தான் பெருநாள் ஒளிந்திருக்கிறது.... பெருநாள் பிறையைப் பார்க்க மக்கள் அங்குமிங்குமாகக் கூடி நிற்கின்றனர்"[24].
>
> (ப.100)

பெருநாள் என்பது ஹஜ் பெருநாள், நோன்புப் பெருநாள் என்று இரண்டு வகை உண்டு. இந்த இரண்டு பெருநாள்களும் பிறை கண்ட பின்னரே கொண்டாடப்படும். முகமது மீரான் அவர்கள் தனது சிறுகதைகளில் இசுலாம் சமூகத்தில் பிறைகண்ட சூழலில் என்ன நிகழும் என்பதைப் பிறை காணும் நிகழ்ச்சி வழி வெளிப்படுத்துகின்றார்.

மனித வாழ்வில் தவிர்க்க முடியாத நிகழ்ச்சிகளில் திருமணம் முக்கியமான இடத்தை வகிக்கின்றது. இத்திருமணத்தை ஒவ்வொரு சமயத்தினரும் அவர்களின் சமய பழக்கவழக்கங்களுக்கு ஏற்பவும் சமயக் கோட்பாட்டிற்கு ஏற்பவும் மாற்றி அமைத்துக் கொள்கின்றனர். திருமணமானது ஒருவரைத் தனிமனிதன் என்னும் நிலையிலிருந்து மாற்றிக் குடும்பம் என்கிற அமைப்பிற்குக் கொண்டு வருகிறது. இதைப் போன்று இசுலாம் சமயத்தின் திருமணமும் பிறையின் அடிப்படையில் தான் நிகழ வேண்டும் என இசுலாமியர் நம்பிக்கைக் கொண்டுள்ளனர். பிறையை வளர்பிறை, தேய்பிறை என இரண்டாகப் பிரித்து மங்கள நிகழ்ச்சிகளை வளர்பிறையில்தான் நிகழ்த்த வேண்டும் என நம்பிக்கைக் கொள்கின்றனர். இப்பிறைப் பற்றிய நம்பிக்கைகளை 'பொன்னரை ஞாண்' எனும் சிறுகதையில்,

"வியாழாச்ச இருட்டி வெளியாச்ச ராவு பிறை
பந்திரண்டுக்கு எங்க மக அஸ்மா பீவிக்கும் பூத்துரற
அல்லா பிச்சைக்க மகன் அலிக்கும் நிக்காஹ்......"[25] (ப.69)

எனச் சுட்டுக் காட்டுகின்றார். பிறையை மையமாகக் கொண்டு வாழ்வில் நிகழும் அனைத்து மங்கள நிகழ்ச்சிகளையும் செய்வதன் மூலம் இறைவன் வழங்கிய அனைத்துவிதமான நன்மைகளும் தங்களுக்குக் கிடைக்கும் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் மக்கள் செயல்படுகின்றனர்.

இதேபோன்று மற்றொரு சிறுகதையான 'நெட்டோகாலி என்ற நூறுல் ஹஸன்' எனும் சிறுகதையில் இசுலாம் சமயத்தில் வலியுறுத்தப்படும் பிறைப் பற்றி மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகள் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன.

"துல்ஹஜ் மாதம் பிறை இருப்பத்து ஒன்றில் இலங்கத்தடி வீட்டில் தங்கி வரும் ஸைனபா பீவியின் ஒரே மகனான நெட்டோகாலி என்று அறியப்படும் நூறுல் ஹஸனுக்குக் கல்யாணம்"[26]. (ப. 196)

மேற்குறித்த வரிகளில் 'இசுலாம் சமயம் சார்ந்த சில நம்பிக்கைகளைத் தோப்பில் முகமது மீரான் தம்முடைய சிறுகதைகளில் எடுத்துக்காட்டி இஸ்லாமிய சமூகப் பின்னணியை முன்னிலைப்படுத்தியுள்ளார்.

## 2.5 வழிபாடும் அதற்கு முந்தைய அழைப்புப் பற்றிய நம்பிக்கையும்

இசுலாத்தின் அடிப்படைக் கடமைகள் ஐந்து. அவை, கலிமா, தொழுகை, நோன்பு, ஜக்காத், ஹஜ் ஆகும். இவற்றை இசுலாத்தின் ஐந்து தூண்கள் (அர்கானுல் இஸ்லாம்) என்பர். இந்தத் தூண்களைப் பற்றி ஹதீஸில் (முஹம்மது (ஸல்) அவர்கள் சொன்னவை. செய்தவை, இசைவு அளித்தவை)

- ஷஹாதத் (கலிமா, உறுமொழி)
- ஸலா (ஹ்)) (ஐந்து நேரத் தொழுகை)
- ஜகாத் (பொதுநலநிதி)
- ஹஜ் (மக்காவிற்குப் புனிதப் பயணச் செய்தல்)
- ஸவ்ம் (ரமலான் மாதத்தில் நோன்பிருத்தல்)"[27] (ப.85)

அல்லாஹ்வைத் தவிர வேறு இறைவன் இல்லை. முஹம்மது நபி இறைவனின் தூதராக இருக்கிறார்கள் என்ற உறுதிமொழி கலிமா, தய்யிபா என அழைக்கப்படுகிறது. இது ஒட்டுமொத்த இசுலாமிய நம்பிக்கையை உள்ளடக்கியுள்ளது.

முதல் தூணான ஷஹாதா, தவ்ஹீதையும் முஹம்மது (ஸல்) அவர்களின் தூதத்துவத்தையும் குறிக்கிறது. மற்ற நான்கு தூண்களும் இசுலாத்தின் முக்கியமான கடமைகளாகும். அவை ‘இபாதா’ என்றழைக்கப்படுகின்றன. இறைவனுக்கு விருப்பமான எல்லாச் செயல்களையும் இபாதா எனும் அரபுச் சொல் குறிக்கும். தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் ஆகியவை இபாதா அல்லது இறைவழிபாட்டின் வடிவங்களாகும். இவற்றை முறையாக, சரியாக நிறைவேற்றினால் நம்மைப் படைத்துப் பரிபக்குவப்படுத்துகின்ற இறைவனின் நெருக்கத்தைப் பெறமுடியும் என மக்கள் நம்பிக்கை கொண்டுள்ளனர். இதனைத் தோப்பில் முகமது மீரான் தம்முடைய சிறுகதைகளில் எடுத்துக்காட்டி இசுலாமிய சமூகப் பின்னணியை முன்னிலைப்படுத்தியுள்ளார். ஒலியைப் பற்றியும் பல இடங்களிலும் கதையோடு ஒட்டி வெளிப்படுத்துகின்றார்.

தலைப்பொருள், தஜ்ஜால் மேல் விழுந்த மலை, தங்கராசு, சன்னதியில், 45-வது வார்டு வேட்பாளர் போன்ற சிறுகதைகளில் வழிபாட்டிற்கும் அதாவது தொழுகைக்கான முந்தைய அழைப்பான பாங்கு கூறுவதை மிக இயல்பாக எடுத்துரைக்கின்றார்.

இசுலாத்தின் இரண்டாவது தூண் தொழுகை. இது நாள்தோறும் செய்ய வேண்டிய ஐந்து நேரத் தொழுகையைக் குறிக்கிறது. ஒரு நாளைக்கு ஐந்து நேரங்களில் தனியாகவோ குழுவாக இணைந்தோ தொழுகைகள் நிறைவேற்றப்படுகின்றன. நாம் இறைவனை நினைவு கூர்வதற்காகத் தொழுகிறோம். இது இறைவனுடன் நம்மை நெருக்கம் கொள்ளச் செய்கிறது என்பதாகக் குர்ஆன் கூறுகிறது.

“என்னை நினைவுகூர்வதற்காகத் தொழுகையை நிலைநாட்டுங்கள்”[28].

(அல்குர்ஆன். 20:14)

இறைவன் மீதான நமது நம்பிக்கைக்கும், இசுலாத்தின் மீதான நம்பிக்கைக்கும் தொழுகையே செயல்முறை அத்தாட்சி. அதற்கென குறிப்பிட்ட நேரங்களில் அவை கட்டாயம் நிறைவேற்ற வேண்டும்.

> "குறிப்பிட்ட நேரத்தில் நிறைவேற்ற வேண்டும் என்று நிபந்தனையுடன் இறைநம்பிக்கையாளர்கள் மீது தொழுகை கடமையாக்கப்பட்டுள்ளது"[29]. (அல்குர்ஆன். 4:103)

என குர்ஆனில் கூறப்பட்டுள்ளது.

ஐந்து நேரத் தொழுகைகள்:

- ∴பஜ்ர் (வைகறையிலிருந்து சூரியன் உதிப்பதற்கு முன்பு வரை)
- ளுஹர் (நடுப்பகலிலிருந்து மாலை வரை)
- அஸர் (மாலையிலிருந்து சூரியன் மறைவதற்கு முன்பு வரை)
- ம∴கரிப் (சூரியன் மறைந்தவுடன் இருள் சூழும் முன்பு)
- இஷா (இரவு முதல் நடுநிசி அல்லது வைகறை வரை)

ஓர் உண்மையான இசுலாமியரின் அடையாளமே ஐங்காலத் தொழுகையைச் சரிவர நிறைவேற்றுவதுதான். இந்த அடிப்படைக் கோட்பாட்டை ஆங்காங்கே சிறுகதைகளில் அறிவுறுத்திச் செல்கின்றார்.

'தலைப்பெருநாள்' எனும் சிறுகதையில் சூரியன் மறைந்தவுடன் இருள் முழுவதும் முன்பு ம∴கரிப் தொழுகைக்கு அழைப்பு விடுவதை,

> "பெரிய பள்ளியிலிருந்து மக்ரிப் தொழுகையின் பாங்கொலி காற்றில கலந்து வந்து காதில் விழுந்தவுடன் வியாத்தும்மா சட்டென்று தன் கழுத்துப்பக்கம் விழுந்திருந்த மேல் துண்டின் ஒரு பகுதியை எடுத்துத் தலையில் முக்காடிட்டுக் கொண்டாள்"[30]. (ப.15)

பள்ளியில் ஐங்காலத் தொழுகைக்குப் பாங்கு (அழைப்புவிடுதல்) சொல்லும்போது ஏற்படும் நிகழ்வுகளையும், தொழுகையின் மீது மக்கள் கொண்டுள்ள

நம்பிக்கையையும் வியாத்தும்மா என்னும் கதைமாந்தரின் வாயிலாக எடுத்தியம்புகின்றார்.

சுக்கூர் லெப்பை என்ற பாத்திரத்தின் வழி தொழுகைக்கான பாங்கு கொடுக்கும் பணியினையும், அத்துடன் பாங்கு கூறும் பணியில் உள்ளவர் எத்தகு வறுமை நிலையில், பொருளாதாரத்தில் தாழ்ந்த நிலையிலும், உள்ளனர் என்பதையும் ஆசிரியர் விவரித்துள்ளார்.

> "அசருக்கு இன்னும் நேரமிருக்கிறது. எழுந்து கொள்ள நினைத்தார். எழுந்து நின்றபோது தலை சுற்றியது. சூனியமான வயிற்றில் பசி குழல் ஊதியது. இரவு படுத்தது ஒரு தேத்தண்ணி குடித்துவிட்டு; சுப்ஹீக்கு பாங்கு சொல்ல வரும்போது அருணாசலம் பிள்ளையின் கடை திறந்திருந்தது. அங்கு ஒரு சாயா குடித்தார். அந்தத் தெம்பில்தான் லுஹருக்குப் பாங்கு சொல்ல முடிந்தது"[31]. (ப.32)

இசுலாமியர்கள் வழிபாடு என்ற நிலையில் காலம் தவறாமையைக் கடைப்பிடிக்கக் கூடியவர்கள். அந்தந்த நேரத் தொழுகையை எந்தச் சூழலிலும் தள்ளி வைக்காமல் குறிப்பிட்ட நேரத்தில் தொழுகைக்கு முந்திய அழைப்பைக் கொடுத்துச் சரியான நேரத்தில் தொழுகையை நடத்தக் கூடியவர்கள் என்பதைச் சிறுகதையின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

தொழுகைக்கான பாங்கோசை கேட்டவுடன் மக்கள் விரைந்து தனது கடமைகளை நிறைவேற்றுவதைச் 'சன்னதியில்' எனும் சிறுகதையில் குறிப்பிட்டுள்ளார்.

> "வெள்ளைத்தாடி அப்பா' என்று குழந்தைகள் அழைக்கும் அலியார் லெப்பை, தொழுகைக்காக மக்களுக்கு அழைப்பு விடும் பாங்கோசை ஒலிபெருக்கி வாயிலாக அந்தச் சுற்றுச் சூழலின் வியாபித்து ஊர் மக்களின் காதுகளில் அலை மோதும்போது மக்கள் நேரமுணர்ந்து பள்ளிவாசலை நோக்கிப் பாய்வார்கள் தொழுகைக்கு"[32].(ப. 285)

தொழுகையை உரிய நேரத்தில் தொழுவதால் மானக்கேடானவைகளையும் (immoral) தீமைகளையும் தடுக்கும் என மக்கள் நம்பிக்கை கொண்டு

செயல்படுவதையும், தொழுகைக்கான அழைப்பொலியைப் பற்றியும் தன் கதையின் போக்கில் எடுத்துக் கூறுவதன் மூலமாக ஆசிரியரின் சமய நம்பிக்கையை உணரமுடிகிறது.

தொழுகை என்பது சொர்க்கத்தின் திறவுகோல். மனிதன் செய்த பாவங்களைப் போக்கும் நுழைவாயிலாகவும் விளங்குகிறது. இதனை ‘45-வது வார்டு வேட்பாளர்’ சிறுகதையில் வெளிப்படுத்தியுள்ளர்.

> “பள்ளிவாசல்ல வந்து இன்னு நடக்குத துஆவில் (பிரார்த்தனையில்) கலந்தா, இன்னுவரை செய்த பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்படும். நாளை முதல் அஞ்சு நேரம் தொழுது அமல் (நன்மைகள்) செய்தா சொர்க்கத்துக்குப் போகலாம்”[33]. (ப.378)

இசுலாமிய சமுதாய உயிரோட்டத்திற்கு மிக இன்றியமையாத அடிப்படையாக இருப்பது தொழுகை ஆகும். தொழுகை என்பது இறைவனுக்குச் செய்ய வேண்டிய (ஆன்மீக) வணக்கமாக இருந்தாலும் அது மனிதனின் நடவடிக்கைகள் தூய தன்மையுடன் மாற்றியமைக்கவும், மனித நேயம் (Human Being) தழைக்கவும் கடமையாக்கப்பட்டுள்ளது என தனது சிறுகதைகளில் அறிவுறுத்திச் செல்கின்றார்.

### 2.6 தர்ஹா பற்றிய நம்பிக்கை (வழிபாட்டு தலங்கள்)

இசுலாம் அரபு நேசத்தின் சமூகப் பின்னணியில் தோன்றியது. இந்தியாவில் இசுலாமிய ஆத்மஞானம் தோன்றிப் பரவுவதற்கு முன்னோடியாகவும் அடிப்படைச் சூழலாகவும் அமைந்தது இந்திய – அரபு நாடுகளுக்கிடையே தோன்றி வளர்ந்த வணிகத் தொடர்புகள் ஆகும். பெருமானார் முகம்மது நபி அவர்கள் அரபு நாட்டில் இசுலாமிய மார்க்கத்தை நிலைநாட்டிய கி.பி. ஏழாம் நூற்றாண்டு முதலே முஸ்லீம்கள் இந்தியக் கடல் எல்லையில் வந்து குடியேறத் தொடங்கிவிட்டார்கள். இக்கால எல்லை இந்தியாவிற்கும், இசுலாத்திற்கும் உள்ள தொடர்பின் தொன்மையைக் காட்டுகிறது. கி.பி. எட்டாம் நூற்றாண்டில் முகம்மது பின் காஸிம் என்பவரால் சிந்து நிலப்பரப்பு கைப்பற்றப்பட்ட நிகழ்ச்சி முஸ்லீம்களின் வருகையை உணர்த்துவதாக உள்ளது. தூஹ்பத்துல் முஸாஹிதீன் என்ற நூலின் ஆசிரியர் ரௌலன்டசன் இந்தியாவில் இசுலாமியர் வருகையைக் குறிப்பிடும்போது அரபு நாட்டு இசுலாமியர் மலபார் கடற்கரைப் பிரதேசங்களில் கி.பி. ஏழாம் நூற்றாண்டின்

இறுதியில் வந்து குடியேறியதாகக் குறிப்பிடுகிறார். தொடக்கத்தில் வணிகம் நிமித்தமாக வந்த இசுலாமியர் காலப்போக்கில் தங்களது சமயத்தைப் பரப்பும் நோக்குடன் இந்தியாவில் குடியேறினர்.

இசுலாத்தைப் பரப்புவதற்காக வந்த இறைநேசர்களின் அற்புதச் செயல்களைக் கண்டவர்களும் அதனைக் கேட்டவர்களும் அச்சமய இறைநேசர்களின் மறைவிற்குப் பின் அவர்களைச் சிறப்பிக்கும் நோக்கத்துடன் இறைநேசர்களின் அடக்கஸ்தலத்தை உயரமாக அமைத்து அந்த அடக்கஸ்தலத்தின் மீது பச்சைத் துணியைப் போர்த்தி வழிபடத் தொடங்கினா. தர்ஹா வழிபாடு என்பது இந்த மண்ணிற்கு உரிய பாரம்பரிய வழிபாடாகும்.

இசுலாமியச் சமயக் கோட்பாட்டின் அடிப்படையில் இன்று தர்ஹாக்களின் இருப்பு கேள்விக்குள்ளாக்கப்படுகிறது என்றாலும், தர்ஹாக்கள் மக்களை ஈர்க்கும் வழிபாட்டிடங்களாகவே இன்றும் நிலை பெறுகின்றன. தர்ஹா வழிபாட்டு முறை, தர்ஹாக்களைப் பொறுத்து மாறுபடுகிறது. வழிபாட்டு முறை மரபாகத் தொடர்ந்து வருகிறது. எழுத்து வடிவிலான வழிபாட்டு முறை இதற்கில்லை. தர்ஹாக்கள் அவற்றைச் சார்ந்த வாய்மொழி வழக்காறுகளில் தாம் நிலை கொள்கின்றன. தர்ஹா வழிபாட்டையும் அதன் சிறப்பையும் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதையின் மூலமாக வெளிப்படுத்துகின்றார்.

‘ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை, ஓர் இரங்கல் பா, கொலுசு அணிந்த பாதங்கள், ஓர் உஸ்தாதின் அகமியம், கேள்வியின் விளிம்பில், கடிகாரம் குட்டன் பிள்ளை சார், பிறப்பின் விசித்திரம், காலண்டர் பாவா, நிற்காத கால், அடையாளங்கள், நாராயண முதலித்தெரு 52-ஆம் நம்பர் வீடு’ ஆகிய சிறுகதைகளின் வாயிலாகத் தர்ஹா வழிபாட்டின் நம்பிக்கையைக் எடுத்துக் காட்டுகின்றார்.

“கொலுசு அணிந்த பாதங்கள் என்ற சிறுகதையில் படைப்பாளர் மைதீன்பீவி எனும் பாத்திரம் கபுரடி அப்பர்’ என்ற தர்ஹாவின் மீது நம்பிக்கை கொண்டு தனது செயல்கள் நிறைவேற வேண்டும் என்று மெழுகுவர்த்தியப் பற்றவைத்து வேண்டிக் கொள்ளும் வேண்டுதலையும் மிக எதார்த்தமாகச் சமூகத்தில் நிகழும் நிகழ்வாக எடுத்துக்காட்டுகின்றார்.

> “வயிறு பற்றி எரியும்போது மம்மதின் காலிலும் பீரின் காலிலும் பாம்பு கொத்துவதற்குத் திட்டி கூட்டுவாள். அவர்களுடைய வயிறு ஊதி இறக்க கபுரடி அப்பா’வின் தலைமாட்டில் மெழுகுவர்த்தி பற்ற வைப்பதும் உண்டு”[34]. (ப.184)

மேற்குறித்த வரிகளால் மைதின்பீவி என்னும் பாத்திரம் தான் காவல் காத்துவரும் தென்னந்தோப்பில் தனக்குத் தெரியாமல் தேங்காய்களையும், இளநீர்களையும் திருடிச் செல்லும் முகம்மது பீர் முதலிய பாத்திரங்களின் செயல்களினால் வெறுப்படைந்து அவர்களைப் பாம்பு கொத்த வேண்டும். வயிறு ஊதி இறக்க வேண்டும் என்று ‘கபுரடி அப்பா’ என்ற தர்ஹாவிற்கு நேர்த்திக் கடன் நேர்ந்து கொள்வதைப் படைப்பின் மூலம் கூறுகிறார்.

இதே போன்று ‘ஓர் உஸ்தாதின் அகமியம்’ எனும் சிறுகதையில் தாய்ப்பாசத்தின் மனஉணர்வுகளை வெளிக்காட்டுகின்றார். தன் மகனுக்கு அரபுப் பாடங்களைக் கற்றுத் தரக்கூடிய உஸ்தாத் (ஆசிரியர்) தனது வீட்டிற்கு உணவு உண்ண வரப்போகும் செய்தியைக் கேட்டு அதிர்ந்து போகின்றது. காரணம் யாதெனில் இந்த உஸ்தாது என்ற பாத்திரமானது அடிப்படையில் அதிகமாக உண்ணக் கூடிய ஒரு பாத்திரம் ஆகும். இத்தகைய ஒரு மனிதர் வீட்டிற்கு வந்து உண்ணப் போகிறார் என்பதை அறிந்தவுடன் தாய்ப்பாத்திரம் அஞ்சக்கூடிய ஒருநிலை ஏற்படுகின்றது. ஆனால் அதற்குப்பின் இந்த ஆசிரியருக்கு உடல்நிலை சரியில்லாமல் போய்விட்டது. அதனால் உணவு உண்ணத் தனது வீட்டிற்கு வரமாட்டார் என்ற செய்தியைக் கேட்டு மிகுந்த மன மகிழ்வு கொள்கின்றது தாய்ப்பாத்திரம். இதனை,

> “கபறடியப்பா! நீங்க என்னைக் காப்பாத்தினியோ – மோனே!
> கபறடீலெ ரண்டு மொழுவுதிரி பத்திவை. நா நேச்செ நேந்திட்டே
> இருக்கேன்”[35]. (ப. 195)

என்ற வரியின் வாயிலாக மக்கள் சிறுசிறு பிரச்சனைகளுக்குக் கூட நேத்திக்கடன் வழிபாடு என்ற நிலைக்குச் செல்லும் நிலையைப் படைப்பாளர் எடுத்துக்காட்டுகின்றார்.

தர்ஹா எனும் தைக்கால் வழிபாடு இந்தியா மக்களிடையே பரவலாக பரவிவந்த வழிபாட்டு முறையாக உள்ளது. அடிப்படையில் இசுலாமியர்கள் இத்தகு தர்ஹா வழிபாட்டைக் கடைப்பிடிப்பதன் நோக்கமும் அதற்கான காரணங்களையும் நோக்கும்போது இசுலாமியர்கள் இந்தியச் சூழலில் புராதனச் சமயத்திலிருந்து வந்தவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. இமம்க்கள் தங்களது பழைய மரபின் அடிப்படையிலும் வலிமார்களின் மீதுள்ள விருப்பமும் இவர்களைத் தர்ஹா எனும் வழிபாட்டு முறையைச் செய்ய வைத்துள்ளது எனக் கூறலாம்.

தர்ஹா என்பது இசுலாமிய இறைநேசர்களின் அடக்கஸ்தலமான மண்ணறையாகும். இங்குச் சென்று அவர்களுக்காக மணம் மிகு பத்தியைச் பொருத்திப் பூக்களை அடக்கஸ்தலத்தின் மீது பரவலாக விரித்து வைத்து யாசீன் என்னும் இசுலாத்தின் திருமறையான திருக்குர்ஆனின் முக்கியப்பகுதியை வாசித்தல், திக்ரு என்னும் ஜெபத்தைச் செய்தல், அம்மண்ணறையில் தங்கள் தலையை வைத்து வழிபடுதல் ஆகிய முறைகளில் வழிபாடு செய்கின்றனர். இதனை ‘ஆதத்தின் மகன் மைதீன்பிள்ளை’, ‘நிற்காத கால்’ போன்ற சிறுகதையின் வாயிலாக உணர்த்துகின்றார்.

> “யாசீன் ஓதினார்கள்
> நேர்ச்சை வழங்கினார்கள்”[36]. (ப.114)

மேலும்

> வியாழன் பகல் சாய்ந்து வெள்ளி இரவாகி விட்டிருந்தது. பெண்கள் பூ சூடிய தலையை மறைத்துக் கொண்டு அருள்பெற முஸா அப்பா தர்காவிற்குச் சென்று கொண்டிருந்தனர். கையில் பத்திக்கட்டு, பூ, விளக்கு எண்ணெ, பழக்குலை’ (ப.491)

மனிதன் தனது வாழ்க்கையை நம்பிக்கை எனும் தளத்தில் நகர்த்துகின்றனர். அந்தத் தளத்தில் ஒன்றுதான் தர்ஹா வழிபாடாகும். இது இந்த மண்ணிற்கே உரிய பாரம்பரிய வழிபாடு என்று முகமது மீரான் அவர்கள் தனது சிறுகதைகளின் மூலமாகச் சுட்டிச் செல்கின்றனர். தர்ஹாக்களில் நிகழ்த்தப்படும் நேர்ச்சைச் சடங்கு கொண்டு தர்ஹா வழிபாட்டை நாட்டார் வழிபாட்டுடன் இனங்காண முடிகிறது. தங்கள் குறைகளுக்குத் தீர்வு காணத் தர்காக்களை நாடும் பக்தர்கள் குறிப்பிட்ட ஒன்றை

நிறைவேற்றுவதாக நேர்ந்து கொள்கின்றனர். பின் அதை நிறைவேற்றவும் செய்கின்றனர்.

இறைநேசர்கள் வெளி உலகத்துக்குத்தான் இறந்தவர்கள. மத ஆர்வலர்கள் அவர்கள் கபருக்குள் (சமாதி) உயிருடன் என்றென்றும் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள் என்று கூறி கப்ரு வழிபாடு செய்கிறார்கள். இந்த இறைநேசர்கள் தமது தேவைகளை நிறைவேற்றுவார்கள். சிரமங்களைக் களைவார்கள் என்று நம்புவது, அவர்களிடம் உதவி கோருவது, இரட்சிக்கத் தேடுவது போன்ற செயல்களைச் செய்கின்றனர். சிலர் இறைநேசர்கள் இவ்வுலகில் ஆதிக்கம் செலுத்தி உலகின் இயக்கத்தில் பங்கு கொள்கிறார்கள். அவர்களால் நன்மை தீமை அளிக்க முடியும் என்று நம்புகிறார்கள். ‘பிறப்பின் விசித்திரம்’, ‘அடையாளங்கள்’ போன்ற சிறுகதைகளின் வாயிலாக மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையை வெளிக்காட்டுகின்றார்.

> “ஏழு பள்ளிகளுக்கும் நேர்ந்த நேர்ச்சையின் வெண்ணிக்கையில் எப்படியோ வந்தது அப்படியே போச்சு”[38]. (ப. 423)

தர்ஹா தொடர்பான நம்பிக்கைகள் மக்கள் மனத்தில் நிலை கொண்டு மரபாகத் தொடர்வதையும், தர்ஹா வழிபாட்டின்போது, இயற்கைக்கு அப்பாற்பட்ட சக்திகளின் மிது வழிபாட்டுக்குழுவினர் முழுமையான நம்பிக்கை கொள்வதையும் தனது சிறுகதையில் ஆங்காங்கே பதிவு செய்துள்ளார்.

அடக்கஸ்தலத்தைப் புனிதமாக மதித்து அதற்கான மரியாதையைச் சரியான முறையில் மேற்கொள்வதையும், தன்னுடைய பொருளாதாரச் சக்திக்கு ஏற்ற வேண்டுதலை நிறைவேற்றுவதையும், காணிக்கை செலுத்துவதையும் பாத்திரங்களின் வாயிலாக எடுத்துரைக்கின்றார். தர்ஹா வழிபாட்டில் இடம் பெற்றிருக்கும் பிறிதொரு நம்பிக்கை அவ்விடத்தில் நம்பிக்கை கொள்பவர்கள் அங்குச் சென்று ஏதாவது ஒரு பொருளை அந்த தர்ஹாவில் உள்ள உண்டியலில் காணிக்கையாகச் செலுத்தவேண்டும் என்பதாகும். இதனை ‘நிற்காத கால்’ எனும் சிறுகதையில்

> “இரயில் நிலையம் செல்லும் வழியில் சாலையோரம் அருள் புரியும் மூஸா அப்பா தர்காவில் காலை இருளில் விளக்கு எரிந்து

> கொண்டிருந்தது. மழை இல்லாதபோது மழைபெய்யச் செய்து வயல்களில் நெல் விளைய வைத்து அற்புதம் காட்டும் மூஸா அப்பா! அது வழியாகச் செல்லும் பஸ் பயணிகளும் நடைபயணிகளும் உண்டியலில் காசு போட்டும், பூவும் பத்தியும் வாங்கி மடியில் கட்டுவார்கள். சிலர் காதில் பூ வைப்பார்கள்”[39]. (ப.487)

என்கிறார். அடக்கஸ்தலம் என்றாலே அனைத்து இசுலாமியர்களுக்கு அது ஒரு பக்திக்குரிய இடமாகும். அதோடு அங்கு அடங்கியிருக்கும் இறைநேசர்களின சக்தி மீது நம்பிக்கை சேரும் சூழலில் அங்குக் காணிக்கையும் நேர்த்திக் கடனும் அதிகமாக உருவாகின்றன என்பதைச் சிறுகதையின் மூலமாக உணர்த்துகின்றார்.

பெரும்பான்மையான தர்ஹாக்காக்களில் மரங்கள் இடம் பெற்றுள்ளன. இம்மரங்கள் தர்ஹாவின் வழிபாட்டோடு தொடர்புபடுத்துப்படுகின்றன. இந்துக் கலாச்சார அமைப்பில் சமய வழிபாட்டில் மரங்கள் குறிப்பிடத் தகுந்த இடத்தினைப் பெற்றுள்ளன. மரங்களில் தெய்வம் உறைந்துள்ளன, நம்பிக்கை சங்க காலந்தொட்டு தொடர்ந்துள்ளது. நாட்டார் வழிபாட்டிலும் மரங்கள் தெய்வ உறைவிடமாகக் கருதப்படுகின்றன. தர்ஹா வழிபாட்டில் மரங்கள் பங்கு பெறுவது இந்தியக் கலாச்சாரத்தோடு தர்ஹா வழிபாட்டினைத் தொடர்புப்படுத்துகிறது. தர்ஹா வழிபாட்டில் மரங்கள் பெறும் முக்கியத்துவத்தை ‘ஓர் இரங்கறப்பா’ என்ற சிறுகதையில் வெளிப்படுத்துகின்றார்.

புதியதாகத் தாம் வாங்கும் வாகனங்களைத் தர்ஹாவிற்கு முதன்முதலாகக் கொண்டு செல்ல வேண்டும் என்ற நம்பிக்கையை அநேக இசுலாமியர்கள் வளர்த்துக் கொண்டுள்ளனர். அத்துடன் அங்குச் சென்று காணிக்கை செலுத்துவதை வழக்கமாகவும் நம்பிக்கையாகவும் கொண்டுள்ளனர். இதனை,

> “புதிதாக இறங்கும் லாரி, கார், மோட்டார் சைக்கிள், சைக்கிள், மாட்டுவண்டி, வில்வ வண்டி போன்ற வாகனங்களை முதன்முதலாக ஓட்டி வருவது இங்கேதான் கபுரடியின் காலடியில் பூவும், சந்தனமும் வைத்துப் பாத்திஹா ஓதுவார்கள். பிறகு வாகனங்களில் சந்தனம் தெளித்து பூமாலைக் கட்டி பத்தி பற்ற வைத்து ஓட்டிக் கொண்டே செல்வார்கள்”[40]. (ப.146)

மேற்குறித்த வரிகளின் மூலமாக இசுலாமிய மக்கள் தர்ஹா மீது கொண்டுள்ள நம்பிக்கையையும், தர்ஹாவில் நிகழும் செயல்பாடுகளையும் படைப்பாசிரியர் தனது கதையோடு ஒட்டிப் படைத்துள்ளார்.

## 2.7 இறுதிச் சடங்கு பற்றிய நம்பிக்கை

மனித வாழ்க்கையின் முடிவில் நிகழ்த்தப் பெறும் சடங்குகள் இறப்புச் சடங்குகள் ஆகும். எந்த ஒரு நிகழ்விற்கும் தொடக்கம் என்று ஒன்றிருந்தால் முடிவு என்ற ஒன்று உண்டு. இவ்வகையே மனித உயிர்களின் முடிவு நிலை வழக்கங்களைப் பிரதிபலிப்பது இறப்புச் சடங்குகள் ஆகும். ‘ஒருமனிதன் இவ்வுலகத்தில் முதன் முதலாக உயிர் பெற்று வரும் போது அவனைச் சமூகத்திற்குள் அழைத்தலின் பொருட்டுப் பல்வேறு சடங்குகள் நிகழ்த்தப்பெற்று வருகின்றன். அம்மனிதனைச் சடங்கு மூலம் சமூக ஏற்பு பெறச் செய்யப்படுகிறது. இத்தகு வரவேற்பு நிகழ்த்தப்பட்ட மனிதனுக்கு அவன் இம்மண்ணை விட்டுப் பிரிந்து போகும் போது அவனது ஆன்மாவானது உருப்பெற்ற இடத்திற்கு நல்ல முறையில் சென்றடைய வேண்டும் என்று பல்வேறு சடங்குகள் நிகழ்த்தப்பெற்று, வழியனுப்பப்படுகிறது. ஒருவருடைய மரணத்தின் போது செய்யப்படுகின்ற சடங்குகள் அவரிடம், அவரது உறவினரும், நண்பரும் கொண்டுள்ள மதிப்பையும், அன்பையும், அவர்களது சமயப்பற்றையும் புலப்படுத்தும் வகையில் அமைகின்றன. மனிதனாகப் பிறந்தவனுக்குப் பிறப்பு எப்படி மாறாதோ அதுபோலவே இறப்பும் மாறாதது. பிறப்பு, இறப்புப் பற்றி நிலையாமை என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர்.

> “உறங்கு வதுபோலும் சாக்காடு; உறங்கி
> விழிப்பது போலும் பிறப்பு”[41]. (அதிகாரம் 34)

என்னும் குறளில் இறப்பு எனப்படுவது ஒருவனுக்கு உறக்கம் வருதலைப் போன்றது; பிறப்பு எனப்படுவது உறக்கம் நீங்கி விழித்துக் கொள்வதைப் போன்றது என்கிறார். இறப்பின் மீது அச்சம் தேவையில்லை என்பதையும் உணர்த்துகின்றார். ஒவ்வொரு சமயத்திலும் அவர்களின் சமயக் கோட்பாட்டிற்கு ஏற்ப சடங்குகள் செய்கின்றனர். இறைவன் நாட்டப்படியே இறப்பு நிகழும் என்பது இசுலாம் சமயத்தினரின் நம்பிக்கையாகும். இறப்புச் செய்தியைக் கேள்விப்பட்டதும்

> “இன்னா லில்லாஹி வா இன்னா இலைஹி ராஜிஊன்”[42]. (ப. 172)

என கூறவேண்டும். இது வாழ்க்கைக் கலை என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது. நாம் இறைவனுக்காகவே இருக்கின்றோம். நிச்சயமாக அவனின் பக்கமாக மீளக் கூடியவர்கள் என்பது இதன் பொருள். ஓர் உயிர், உடல் எனும் கூட்டை விட்டுப் பிரியும் சூழலில் உயிரானது சொர்க்கம் அல்லது நரகத்திற்குச் செல்வது அம்மனிதன் வாழ்ந்த வாழ்வைப் பொருத்தே அமையும். ஒரு மனிதன் நல்ல தன்மைகளோடு வாழ்ந்து சொர்க்கத்தைச் சென்றடைவதே சிறந்தது என்று இசுலாம் கருதுகிறது. அதோடு சொர்க்கம் செல்வதற்கு என்று பல நேரிய வழியைக் காட்டுகின்றது. இறைநம்பிக்கையோடு வாழ்ந்து இறைநம்பிக்கையுடன் இறப்பவரே வெற்றி பெற்றவர் ஆவார் எனும் இசுலாம் சமயத்தின் கருத்துக்களைப் படைப்பாளர் தனது சிறுகதைகளின் வழி ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றார்.

ஒவ்வொரு சமயத்திலும் இறந்த மனிதனை ஒவ்வொரு முறையில் தகனம் செய்வர். இசுலாம் சமயத்தில் இறந்தவரின் உடலை அடக்கம் செய்வதற்குச் சில நம்பிக்கை சார்ந்த சடங்குகளைச் செய்கின்றனர். அறிகுறி காணுதல், படுக்க வைத்தல், குளிப்பாட்டுதல், துணி சுற்றுதல், தொழுகை நிறைவேற்றுதல் அடக்கம் செய்தல், மனைவி தனித்திருத்தல், துக்கம் விசாரித்தல், இறையருள் வேண்டுதல் போன்ற சடங்குகள் செய்யப்படுகின்றன. இதனை முகமது மீரான் தனது சிறுகதைகளில் பல இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

### 2.7.1 அறிகுறி காணுதல்

இறக்கும் தருவாயில் இருக்கும் ஒருவரிடத்தில் மரணத்தின் அறிகுறிகள் தென்பட்டவுடன் முன்னோர்கள், அறவுரை கூறுதுல், மேற்குதிசை (கிப்லா) நோக்கி படுக்க வைத்தல், திருமந்திரம் ஓதுதல், பால் ஊற்றுதல் போன்ற செயல்களைச் செய்கின்றனர்.

### 2.7.2 அறவுரை கூறுதல்

பொதுவாக ஒவ்வொரு மனிதனின் ஆசையும் தான் இறக்கும் நிலையில் சுற்றத்தார், உற்றார், உறவினர் தான் பெற்ற பிள்ளைகள் என யாவரும் சுற்றி இருக்க வேண்டும் என்பதாகும். மேலும் இறக்கும் தருவாயில் இருப்பவர் தம்முடைய மக்களை அழைத்து அவர்களிடம் தனது இறப்புக்குப் பின்னால் அவர்கள் நடந்து கொள்ள வேண்டிய முறையைப் பற்றி கூறுவது வழக்கமாக உள்ளது. இவ்வகையில்

“இதை எப்படி நிறுத்துவது?” என்ற சிறுகதையில் வரும் மலுக்கு முகமது தனது மக்களையும், சுற்றத்தாரையும் அந்திம நிலையில் தேடுகின்றார்.

> “புல்லாந்து கிடக்கும் மலுக்கு முஹம்மதின் ஒளியிழந்த கண்கள் சுற்றிலும் தம் குழந்தைகளைத் தேடுவதைப் போல காட்சி தந்தன. குழியில் கிடந்து அவ்விழிகள் தேடுவதைக் கண்டதும் உறவினர் கண்களிலிருந்து நீர் கொட்டியது”[43]. (ப.152)

என்ற வரிகளின் மூலம் இறக்கும் தருவாயில் இருக்கும் மனிதனின் நிலையையும், அம்மனிதனைச் சுற்றி நிற்கும் உறவினர் நிலையையும் தனது படைப்பின் மூலம் வெளிப்படுத்துகின்றார் மீரான் அவர்கள்.

### 2.7.3 திருமந்திரம் ஓதுதல்

ஒருவருடைய உயிர் உடலை விட்டுப் பிரிவதற்கு முன்பு அவருடைய மகள், மனைவி, மகன் அல்லது உறவினர்கள் சுற்றத்தார்கள் போன்ற அனைவரும் ஒன்று சேர்ந்து குர் ஆன் ஓதுதல், கலிமா சொல்லிக் கொடுத்தல் போன்ற செயல்களைச் செய்கின்றனர். இவ்வாறு செய்வதனால் (சக்கராத்து) இறக்கும் தருவாயில் ஏற்படும் துன்பங்கள் நீங்கிவிடும் என்றும், இறப்பவருக்கு மறுமைக்கான வெற்றியைத் தேடித் தரும் என்றும் நம்பிக்கை கொள்கின்றனர். இதனைத் தோப்பில் முகமது மீரான் “இதை எப்படி நிறுத்துவது”? எனும் சிறுகதையில்,

> “காதிலெ கலிமா சொல்லிக் குடுங்கோ....
> நல்ல ஈமானோட மரீக்கீதுக்குக் கேளுங்கோ
> தலமாட்டிலிருந்து குர்ஆன் ஓதுங்கோ”[44].... (ப. 152)

மேற்குறித்த வரியின் மூலம் இறந்த ஆன்மா நல்ல பயனைப் பெற வேண்டுமெனில் அதற்கான வழிமுறைகளைச் செய்ய வேண்டும். மேலும் படைப்பாளர் மறுமைக்கான வெற்றி கலீமா உடன் கூடிய மரணமே அதற்காக அதிகமாகக் கலீமாவைச் சொல்லிக் கொடுங்கள் என துணைப்பாத்திரங்களின் வழி வெளியிடுகின்றார். சமூகத்தில் பல நிலைகளில் வாழ்ந்த மனிதன் இறுதியில் கலீமா எனும் ஈமானை வெளிப்படுத்தாமல் இறப்பானாயின் அது மனிதனின் நாசத்திற்குக்

காரணமாகிவிடும். எனவே கலீமா தான் மனிதனின் ஈடேற்றத்திற்குக் சிறந்தது என்பதைத் தனது படைப்பின் மூலம் உணர்த்துகின்றார்.

### 2.7.4 பால் ஊற்றுதல் அல்லது ஜம்ஜம் நீர்விடுதல்

மரணப் படுக்கையிலிருப்போர்க்கு நா வறண்டு போகாமல் இருக்கவும் உள்ளம் தூய்மை அடையவும் மக்காவில் இருந்து கொண்டு வரப்பட்ட ஜம்ஜம் நீரை ஊற்றுகின்றனர். இந்நீர் கிடைக்காத நிலையில் பால் ஊற்றப்படுகிறது. இந்நீர் மகன், மகள், பேரன், பேத்தி மூலமாகக் கொடுக்கப்படுகிறது. இந்த வழக்கமானது அனைத்துச் சமயத்தினரிடமும் காணப்படுகிறது. இதனை,

> "மரணப் படுக்கையில் வறண்டுபோன நாவில் சக்காரத்துத் தண்ணீர் தொட்டு வைப்பது தான் அது"[45]. (ப. 48)

என 'பவர்க்காரி' எனும் சிறுகதையின் வாயிலாக மரணத்தின் தருவாயில் நீர் அல்லது பால் தொட்டு வைக்கும் வழக்கம் இருந்ததை எடுத்துரைக்கின்றனர். இதே போன்று பால் ஊற்றும் சடங்கப் பற்றி 'பேரன்' என்ற சிறுகதையிலும் சுட்டிச் செல்கின்றார்.

### 2.7.5 மேற்குத் திசை நோக்கிப் படுக்க வைத்தல் (கிப்லா)

உடலை விட்டு உயிர் நீங்கியதும் அவ்வுடலை 'மய்யித்' எனக் கூறுகின்றனர். பின்பு மேற்குத் திசையை நோக்கிப் படுக்க வைக்கும் சடங்குகளைச் செய்கின்றனர். இச்சடங்குகளை முகவாய்க் கட்டுதல், கசப்பு மாற்றுதல், சாம்பிராணிப் புகை காட்டுதல், தண்ணீர்த்தட்டு வைத்தல், உலோகத் துண்டு வைத்தல், விரைவு படுத்துதல் எனப் பல்வேறாகப் பிரிப்பர்.

### 2.7.6 முகவாய்க் காட்டுதல்

உயிர் நீங்கிய உடலின் முகவாயை ஒரு வெள்ளைத் துணியால் கட்டிவிடுகின்றனர். பின்பு (மய்யித்தின்) பிணத்தின் கண்களைக் கசக்கிமூடி, பின்பு கால் பெருவிரல்களை ஒன்றாக இணைத்து ஒரு சிறிய துணியால் கட்டிவிடுகின்றனர். உயிர் நீங்கிய உடலின் வாயானது திறந்த நிலையில் இருப்பின் அதனுள் காற்று புகுந்து வயிறு பெரிதாகிவிடும். மேலும் பார்ப்பதற்கு விகாரமாகக் காட்சியளிக்கும். அவ்வாறு விகாரமாகக் காட்சியளிக்காமல் இருப்பதறக்காக அதன் முகவாயானது ஒரு

துணியால் கட்டப்படுகிறது. கண்களைக் கசக்கி மூடிவிடுவதும் இந்த நோக்கத்தின் அடிப்படையில் அமைந்திருக்கிறது. இச்சடங்கில் கால்கள் விரிந்துவிடாமல் சேர்ந்திருப்பதற்காகப் பெருவிரல்கள் இரண்டையும் சேர்த்து ஒரு துணியால் கட்டப்படுகின்றன. இவ்வாறு முகவாய்க் கட்டும் வழக்கம் இசுலாமியரல்லாதப் பிற சமயத்தினரிடத்திலும் காணப்படுகிறது. இக்கருத்தை அடியொற்றி “கருந்தேளின் கொடுக்குகள்’ எனும் சிறுகதையைத் தோப்பில் முகமது மீரான் படைத்துள்ளார்.

> “தாடியும் மீசையும் சேர்த்துக் கட்டப்பட்டுள்ளது. காலின் பெருவிரலைச் சேர்த்து துணியால் கட்டப்பட்டுள்ளது. கையிரண்டும் நெஞ்சில் ஒன்றன் மேல் ஒன்றாகக் கட்டி வைக்கப்பட்டிருந்தது”[46]. (ப.168)

என்னும் பகுதி வழி அறியலாம். இறப்புச் சடங்குகள் உயிர் பிரிந்த யாக்கைக்கு நிகழ்த்துவதாகும். இவ்யாக்கையானது தன் இயல்பு நிலையிலிருந்து மீவியல்பு தன்மையைக் கொண்டிருக்கும் உயிர் பிரிந்த யாக்கையைப் பிணம் என்று குறிப்பர். சமூக மாந்தர் என்பதைச் சிறுகதையின் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

### 2.7.7 கசப்பு மாற்றுதல்

இறந்தவரின் உடலிலிருந்து பழைய ஆடைகளைக் களைந்து, சடலத்தினைத் தண்ணீரால் கழுவி விடுவது கசப்பு மாற்றுதல் ஆகும். கசப்பு மாற்றிய பின்பு அவ்வுடலுக்குத் தூய்மையான ஆடைகளை அணிவிக்கின்றனர். கசப்பு மாற்றுவதன் நோக்கம் ஒருவருடைய உடலிலிருந்து உயிர்பிரியும் போது சிறுநீர், மலம், முதலிய கழிவுகள் வெளியேறக் கூடும். அவ்வாறு வெளியேறிய கழிவுகளை அகற்றி, அவ்வுடலைத் தூய நிலையில் படுக்க வைப்பது கசப்பு மாற்றுவதன் நோக்கம் ஆகும். இச்சடங்கை இசுலாமிய நெறிகளைப் பின்பற்றுபவர்கள் செய்ய வேண்டும். இதனை,

> “ஒருவர் இறக்கும்போது மரணவேதனையில் மலஜலம் கழித்து விடுவதுண்டு. அவற்றைக் கழுவி சுத்தம் செய்யப்பட வேண்டும். இறந்தபின்னர் அவருடைய அடிவயிற்றுப் பகுதியை நன்றாக அழுத்தி, உள்ளெ உள்ள அசுத்தங்களை வெளிப்படுத்தி, மறைவிடங்களில் இருந்து வெளியாகும் மலஜலத்தைத் துண்டு துணிகள் சுற்றப்பட்ட

> தமது கைகளால் கழுவ வேண்டும். மரணித்தவர் அணிந்திருந்த ஆடையை அகற்ற வேண்டும்”[47] (ப.49)

என ‘ஜனஸா தொழுகை – சட்டங்கள்’ என்னும் நூலில் ஒருவர் இறந்தவுடன் செய்யும் சடங்குகளைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது.

### 2.7.8 சாம்பிராணிப் புகை காட்டுதல்

கசப்பு மாற்றும் சடங்கிற்குப் பின்னால் ஒரு பலகைக்குச் சாம்பிராணிப் புகையைக் காட்டுகின்றனர். அப்பலகையின் மீது இறந்தவரின் உடலைப் படுக்க வைக்கின்றனர். பின்பு தலைக்கருகில் ஊதுவத்திகளைப் பொருத்தி வைப்பது வழக்கமாக உள்ளது. சாம்பிராணிப் புகையைக் காட்டுவது நோய்க் கிருமிகள் எவையேனும் இருப்பின் அவைகளை அழிக்கும் என்பது அறிவியல் அடிப்படையில் அமைந்திருக்கிறது. அவ்வுடல் வைக்கப்பட்டுளள அறை துர்நாற்றம் ஏற்படாமல் இருக்கவும் ஊதுவத்திகள் பொருத்தி வைக்கப்படுகின்றன. இறந்தவீட்டில் ஊதுவத்திகளைப் பொருத்தி வைக்கும் பழக்கம் அனைத்துச் சமய மக்களிடமும் காணப்படுகிறது. இதை,

> “இரண்டு மூன்றுபேர் மய்யித்தை (சடலத்தை) தூக்கி வீட்டிற்குள் கிடத்தினார்கள் எறிந்து முடிந்து போன ஊதுபத்தி சாம்பலைச் சுற்றி எறும்பு வரிசை... எறிந்து முடிந்து ஊதுபத்தியின் வாசனை குடிசைக்குள் தங்கி நின்றது”[48]. (பக்.204-205)

இறந்த உடலின் அருகில் ஊதுபத்தி பொருத்தி வைக்கும் பழக்கம் இசுலாமிய மக்களிடம் இருப்பதை ‘சுருட்டுப்பா’ சிறுகதையில் ஆங்காங்கே வெளிக்காட்டுகிறார்.

### 2.7.9 சாம்பலைத் தூவுதல் அல்லது தண்ணீர்த்தட்டு வைத்தல்

இறந்த உடல் வைக்கப்பட்டுள்ள கட்டிலின் நான்கு கால்களைச் சுற்றிலும் சாம்பலைத் தூவுதல் அல்லது தண்ணீர்த் தட்டுகளை வைக்கும் வழக்கத்தைப் பின்பற்றுகின்றனர். உயிர் நீங்கிய உடல் வைக்கப்பட்ட பலகையில் எறும்பு போன்ற உயிரினங்கள் ஏறிச் சில நேரங்களில் அவ்வுடலைத் தீண்டக்கூடும். அவ்வுயிரினங்கள் பலகையில் ஏறாதபடித் தடுப்பதற்காகத் தண்ணீர்த் தட்டுகள் அல்லது சாம்பலைத் தூவுகின்றனர். இதனை “கருந்தேளின் கொடுக்குகள்” என்ற சிறுகதையில்,

> "சடலத்தை தூக்கிக் கட்டிலில் வைத்தார். கட்டிலின் நான்கு கால்களைச் சுற்றிலும் சாம்பலைத் தூவினார்"[49]. (ப.169)

என இறந்த உடலைச் சுற்றி சாம்பல் தூவும் வழக்கம் மக்களிடையே காணப்படுவதை முகமது மீரான் எதார்த்தமாக எடுத்துக்காட்டுகின்றனர்.

### 2.7.10 விரைவுபடுத்துதல்

இறந்த உடலைக் குளிப்பாட்டி அதை அடக்கம் செய்வதில் விரைவு காட்டும் வழக்கத்தை இசுலாமியர் கடைப்பிடிக்கின்றனர். இதற்காக இசுலாமியர்கள் கூடுமானவரை மாலையில் இறந்தவரை இரவிற்குள்ளும், இரவில் இறந்தவரை மறுநாள் அதிகாலையிலும் அடக்கம் செய்து விடுகின்றனர்.

உலகில் வாழ்ந்து இறந்த மனிதர்கள் அனைவரும் மறுமை நாளில் (இறுதி தீர்ப்பு நாளில்) மீள உயிர்ப்பித்து எழுப்பப்படுவார்களென்றும் அவர்களது செயல்களனைத்தும் விசாரிக்கப்பட்டு நல்லடியார்கள் சுவனத்திற்கும் பாவிகள் நரகத்திற்கும் அனுப்பப்படுவர் என்ற நம்பிக்கை இசுலாமியரிடம் காணப்படுகின்றது.

> 'எவர் வரம்பு மீற இவ்வுலக வாழ்க்கையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டாரோ, நிச்சயமாக அவர் ஒதுங்குமிடம் நரகமாகும். மேலும், எவர் தன் இறைவனின் சந்நிதியைப் பயந்து மனோ இச்சையிலிருந்து தன்னைத் தடுத்துக் கொண்டாரோ நிச்சயமாக அவர் ஒதுங்குமிடம சுவனமாகும்"[50]. (அல்குர் ஆன். 80:37-41)

குர்ஆனில் கூறும் வசனங்கள் இறந்தவரை விரைவில் அடக்கம் செய்வதால் நன்மை செய்தவர்கள் விரைவில் சொர்க்கம் அடைந்துவிடுவர் எனவும், தீமை செய்தவர்களுடைய பாவங்கள் பிறரைப் பற்றுவதற்கு முன் அவர்கள் நரகத்தை அடைந்துவிடுவர் என்றும் கூறப்படுகிறது.

### 2.7.11 குளிப்பாட்டுதல்

இறந்த உடலைக் குளிப்பாட்டுவது இசுலாமியர் சட்ட நூல்களில் கட்டாயமாக்கப்பட்டுள்ளது. இதை 'பர்ளுகிபாயா' என்கின்றனர். இறந்த உடலைக் குளிப்பாட்டுவதை, இறந்தவரைத் தொழுகைக்கேற்ற தூய நிலையில் அடக்கம்

செய்ய வேண்டும் எனும் நோக்கத்தின் அடிப்படையில் செய்கின்றனா். இறந்தவரைக் குளிப்பாட்டும்போது தண்ணீரில் இலந்தஇலை சேர்த்தல், வயிறு தடவுதல், முகத்தையும், கைகளையும், கால்களையும் கழுவுதல், கற்பூரம் வைத்தல் பொன்ற பழக்கவழக்கங்களை மேற்கொள்கின்றனா். இத்தகு நிலையில் மிக இயல்பாகச் சமூகத்தளத்தை ஒட்டிய பழக்கங்களைத் தனது கதைகளின் வாயிலாக எடுத்துக்காட்டுகின்றார்.

> "கொஞ்சம் நேரம் கழிந்ததும் மய்யித்தைக் குளிப்பாட்டுபவா் வந்து சேர்ந்தார். இருவரும் சேர்ந்து மய்யித்தை எடுத்துக் குளிப்பாட்டினார்கள்"[51]. (ப.172)

என 'கருந்தேளின் கொடுக்குள்' சிறுகதையின் மூலம் இறந்தவுடலைக் குளிப்பாட்டும் வழக்கம் உள்ளதை வெளிப்படுத்துகின்றார். உயிா் நீங்கிய உடலைக் குளிப்பாட்டும் தண்ணீரில் இலந்த இலையைச் சேர்க்கும் வழக்கத்தை இசுலாமியா் கடைப்பிடிக்கின்றனா். இவ்விலை கிடைக்காத போது சிலா் உசிலை இலையைச் சேர்க்கின்றனா். இலந்த இலை, உசிலை இலை இரண்டும் கிருமிநாசினிகளாகும். இதைக் குளிப்பாட்டும் தண்ணீரில் சேர்ப்பதனால் இறந்தவுடலில் நோய்க்கிருமிகள் எவையேனும் இருப்பினும் அவைகளை அழிக்கும் என்னும் கருத்தின் அடிப்படையில் செய்யப்படுகின்றது.

இறந்தவுடலைக் குளிப்பாட்டும்போது, அதன் வயிற்றைத் தடவிவிடும் வழக்கம் உள்ளது. இச்சடங்கில் இறந்தவுடலின் தலைமுடி, தாடி போன்றவற்றைச் சிகைக்காய், சோப்பு, சந்தனம் முதலியவற்றால் நன்றாகத் தேய்த்துவிடுகின்றனா். பின்பு அவ்வுடலை இடப்பக்கமும், வலப்பக்கமும் சாய்த்து வயிற்றைத் தடவி அதன் மறைவிடங்களைக் கழுவிவிடுகின்றனா். இடப்பக்கமும், வலப்பக்கமும் சாய்த்துப் பின்பு அதன் வயிற்றைத் தடவுவதுதான் நோக்கம் மாசு ஏதேனம் இருப்பின் அதை அகற்றும் வகையில் அமைந்திருக்கிறது.

### 2.7.12 ஒளுச் செய்தல் (முகம், கை, கால் கழுவுதல்)

இசுலாமியா் தனது கடமைகளில் ஒன்றான தொழுகையை நிறைவேற்றும் போது வாய், முகம், கால், கை போன்றவற்றைத் தண்ணீா் கொண்டு கழுவித் தன்னைத் தூய்மைப்படுத்தும் வழக்கத்தைக் காலம் காலமாகக் கடைப்பிடித்து

வருகின்றனர். எனவே இறந்தவுடலைத் தொழுகைக்கேற்ற தூயநிலையில் வைக்க வேண்டும் என்னும் நோக்கத்தின் அடிப்படையில் முகம், கை, கால் போன்ற உறுப்புக்களைக் கழுவிவிடுகின்றனர்.

### 2.7.13 கற்பூரம் வைத்தல்

இசுலாமியர்களின் தொழுகையில் கைகளைக் கட்டி நிற்றல், குனிதல், நெற்றி தரையில் பட மண்டியிடுதல் போன்ற நிலைகள் உள்ளன. இவைகளில் ‘மண்டியிட்டுத் தொழும் போது நெற்றி, இரு உள்ளங்கைகள், இருகால் மூட்டுக்கள் இரு கால்பெருவிரல்கள் ஆகிய எழும் தரையில் படும் உறுப்புக்கள் ஆகும். குளிப்பாட்டிய பின் இவ்வேழு உறுப்புக்களில் கற்பூரம் வைப்பது, தொழுகையில் அவை பெறும் சிறப்பினால் கற்பூரம் ஒரு கிருமி நாசினியாக இருப்பதாலும் இதன் இன்றியமையாமை புலனாகின்றது.

### 2.7.14 கபனிடுதல் (துணி சுற்றுதல்)

இறந்தவுடலைத் குளிப்பாட்டிய பின்பு அதைத் துணிகளால் சுற்றுகின்றனர். இதற்கு ‘கபன்’ என்று பெயர். சுத்தமான – தூய வெண்மையான உடலை முழுவதுமாக மறைக்கும்படியான துணியைக் கொண்டு போர்த்துவதே சிறந்ததாகும் என்று இசுலாம் கூறுகிறது.

“நீங்கள் வெள்ளை உடை (களையே) உடுத்துங்கள். எனெனில் அதுவே உங்கள் உடைகளில் சிறந்ததாகும். இறந்தோருக்குப் வெள்ளை உடையில் காபனிடுங்கள்’ என்று நபி (ஸல்) அவர்கள் கூறியதாக ஜனஸா **தொழுகை சட்டங்கள்** என்ற நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இறந்தவர் ஆணாயிருப்பின் அவரை வேட்டி, சட்டை, போர்வை என்னும் மூன்று துணிகளாலும், இறந்தவர் பெண்ணாயிருப்பின் அவரை வேட்டி, சட்டை, போர்வை, முக்காடு, மார்புக்கடடு என்னும் ஐந்து துணிகளாலும் சுற்றுவது வழக்கமாக உள்ளது. இவ்வழக்கம் வேட்டி சட்டை அணிவித்தல், திருமந்திரம் எழுதுதல், தலைப்பாகைக் கட்டுதல், போர்வையால் மூடுதல் என்னும் சிறுசிறு சடங்குகளாகச் செய்யப்படுகின்றது. இதனை இதை எப்படி நிறுத்துவது? ‘கருந்தேளின் கொடுக்குகள்’ ‘ஒரு சவ ஊர்தியின் நகர்வலம்’ போன்ற சிறுகதைகளில் இறுதிச் சடங்குகள் செய்யும் முறையை எடுத்துக்காட்டுகின்றார்.

> “பள்ளியில் சென்று லெப்பையைப் பார்த்தார், கபன் அணிய லெப்பை கைநீட்டி கூலியைப் பெற்றுக் கொண்டார். லெப்பை புதிய துணியைக் கிழித்தார். கபன் அணிவித்தார். மூன்று கட்டுகள் கட்டப்பட்டன”[52].
>
> (பக்.171-172)

‘கருந்தேளின் கொடுக்குகள்’ எனும் சிறுகதையில் பீர்முகமது பாத்திரம் மரணம் அடைந்த நிலையில் உள்ள சடலத்தை அடக்கம் செய்வதற்காகத் தயாராகும் ஜிப்பாக்காரர் பாத்திரம். இதற்கான செயல்பாடுகளில் ஈடுபடுகிறார். முகமது மீரான் அவர்கள் இச்சிறுகதையின் மூலமாக இறந்த உடலை அடக்கம் செய்யும் முறையை உணர்த்துகின்றார்.

### 2.7.15 வேட்டி, சட்டை அணிவித்தல் (கஜார், கமீஸ்) திருமந்திரம் எழுதுதல்

இறந்தவுடலைத் குளிப்பாட்டிய பின்பு அதற்கு வேட்டி, சட்டை அணிவிக்கின்றனர். அவ்வாறு அணிவிக்கும் துணிகளில் பன்னீர், அத்தர் (வாசனைத் திரவியம்) போன்ற நறுமணப் பொருட்களைத் தெளிக்கும் வழக்கம் உள்ளது. சிலர் ‘ஜம்ஜம்’ எனும் கிணற்று நீரில் நனைந்த துணிகளை அவ்வுடலுக்கு அணிவிக்கின்றனர்.

வேட்டி, சட்டை போன்ற துணிகளில் பன்னீர், அத்தர் தெளிப்பது நறுமணத்திற்கு ஆகும். சட்டை என்பது தையலற்ற துணி என்பதாகும். அத்துணி உடலைச் சுற்றுவதற்காகப் பயன்படுத்தப்படுகிறது. கிணற்றுத் தண்ணீர் எல்லா நோய்களுக்கும் அருமருந்தாக இருப்பதாக இசுலாமியர்கள் நம்புகின்றனர். இதனால் ‘ஹஜ்’ என்னும் புனிதப் பயணம் சென்று திரும்பும் இசுலாமியர்கள் தாம் இறந்த பின்பு தம்மை அடக்கம் செய்வதற்குரிய துணியை இத்தண்ணீரில் நனைத்துக் கொண்டு வருகின்றனர். புனிதப் பயணம் மேற்கொள்ளும் இசுலாமிய மக்களிடம் இறப்பை எதிர்பார்க்கும் தன்மை உள்ளதை இதன் வழி அறியலாம்.

இறந்த சடலத்தின் மார்பில் ‘சிக்சா’ எனும் மணப்பொடியால் திருமந்திரம் எழுதப்படுகிறது. இறந்த உடலில் திருமந்திரத்தை எழுதுவது இறந்தபின் இசுலாமியக் கோட்பாட்டை நினைவு கூறும் வகையில் அமைகிறது. ‘சிக்சா’ என்னும் பொடி மணத்திற்காகவும், இறந்த உடல் கெடாமல் இருப்பதற்காகவும் பயன்படுத்தப்படுகிறது.

### 2.7.16 தலைப்பாகை கட்டி, போர்வையால் மூடுதல் (லிபாபாவால்)

இறந்தவுடலுக்குத் தலைப்பாகை, கட்டும் வழக்கத்தை இசுலாமியர் காலம் காலமாக மேற்கொள்கின்றனர். இறந்தவர் சமயத்தலைவர் அல்லது மார்க்க அறிஞராக இருப்பின் அவருக்குத் தலைப்பாகையைக் கட்டுவது ஒரு காலத்தில் சிறப்பாகக் கருதப்பட்டது. தற்காலத்தில் இறந்தோர் அனைவருக்கும் தலைப்பாகை கட்டப்படுகிறது. இறந்தவர் பெண்ணாயிருப்பின் அவருக்குத் தலைப்பாகைக்குப் பதிலாக முக்காடு (மக்கன்னா) கட்டப்படுகிறது.

உயிர் நீங்கிய உடலைப் போர்வையால் மூடும்போது அதன் முகத்தை உறவினர்களுக்குக் காட்டுவது இறந்தவரைக் கடைசி முறையாகக் காணும் வகையில் செய்யப்படுகிறது என்பதை,

> “குளிப்பாட்டிய மய்யித் (சடலம்) சிறிது நேரம் முகம் மூடாமல் வைக்கப்பட்டிருந்தது. நேரம் சாய்வதை யாரோ நினைவுபடுத்தியதும் மய்யித்தைத் துணியால் சுற்றி மூன்று கட்டுகள் போடப்பட்டன”[53]
>
> (ப.368)

என ‘பேரன்’ சிறுகதையின் வாயிலாகப் போர்வையால் மூடும் சடங்குகளைப் பற்றி தெளிவாக விவரித்துள்ளார். போர்வை மீது மூன்று சிறிய துணிப்பட்டிகளைக் கட்டுகின்றனர். இவ்வாறு கட்டுவது அவ்வுடலிலிருந்து போர்வை கலைந்து விடக்கூடாது என்னும் நோக்கத்தின் அடிப்படையில் இறந்தவர் பெண்ணாக இருப்பின் அவருக்கு முக்காட்டுத் துணியையும் மார்புக் கட்டுத் துணியையும் (சீனாபெந்த்) அணிவித்துப் பின்பு அவரைப் போர்வையால் மூடப்படுகிறது.

### 2.7.17 தொழுகை நிறைவேற்றுதல்

இசுலாமியர்கள் இறந்தவுடலைத் துணிகளால் சுற்றிய பின்பு அதை ‘ஜனஸா’ எனக் கூறுகின்றனர். பின்பு இறந்த சடலத்தை ‘சந்தூக்’ என்னும் மரப்பெட்டியில் வைத்துத் தொழுமைகயை நிறைவற்றுவதற்காகப் பள்ளிவாசலுக்குக் கொண்டு செல்லுகின்றனர். இவ்வாறு கொண்டு செல்லும்போது அவர்கள் சுமந்து செல்லுதல், சாட்சி பகர்தல், தொழுகை நடத்துதல் போன்ற சடங்குகளை மேற்கொள்கின்றனர். இதனை,

> “சந்தூக்கைத் தூக்கி வருவதற்கான கூலியும் கொடுத்தார். மய்யித்தைச் சந்தூக்கில் எடுத்து வைத்தார்”[54]. (ப.172)

என்று ‘சுருட்டுப்பா’ கருந்தேளின் கொடுக்குகள். ‘ஒரு சவ ஊர்தியின் நகர்வலம்’ போன்ற சிறுகதைகளில் இறந்த உடலை சந்தூக்கில் வைத்து அடக்கம் செய்வதற்குப் பள்ளிவாசலுக்கு எடுத்துச் செல்லும் வழக்கம் இசுலாமிய மக்களிடையே காணப்படுவதை வெளிக்காட்டுகின்றார்.

### 2.7.18 சுமந்து செல்லுதல்

உயிர் நீங்கிய உடலை வைக்கப்பட்ட பெட்டியைத் தம்முடைய தோள்களில் சுமந்து செல்லும் வழக்கத்தைப் பின்பற்றுகின்றனா. வழியில் அப்பெட்டியைக் காண நேரிடுபவர்கள், அதைப் பின்தொடர்ந்து செல்கின்றனர். பின்தொடர்ந்து செல்ல இயலாதவர்கள் எழுந்து நின்று மரியாதை செலுத்துகின்றனர். இறந்த உடலைச் சுமந்து செல்வது அவ்வுடலைச் சுமப்பவருடைய நாற்பது வருடப்பாவங்கள் மன்னிக்கப்படும் என்றும், சுமந்து செல்லும்போது அவ்வுடலுக்கு முன்பாக வானவர்கள் நடந்து செல்வார்கள் என்றும் இசுலாமியர்கள் நம்பிக்கைக் கொள்கின்றனர். இறந்த உடலைப் பின்தொடர்ந்து செல்வதனால் ஏற்படும் நன்மைகள் பற்றி நபி நாயகம் அவர்கள் கூறியதாக

> “ஒரு முஸ்லீமுக்கு மற்றொரு முஸ்லீம் ஜனாஸாவுடன் செல்ல வேண்டும் என்பது கடமையாகும்”. மேலும் கூறினார்கள். “ஒருவர் ஜனாஸாவில் கலந்து கொள்கிறார்; மேலும் ஜனாஸா தொழுகை தொழுகிறார். எனில் அவருக்கு ஒரு ‘கீராத்’ நன்மை அளிக்கப்படும். தொழுகைக்குப் பிறகு நல்லடக்கம் செய்யும்போது அதில் பங்கு கொண்டால், அவருக்கு இரண்டு ‘கீராத்’ நன்மை அளிக்கப்படும்”[55]

என ஜனாஸா உடன் செல்வதனால் ஏற்படும் நன்மைகள் பற்றி வாழ்க்கைக் கலை எனும் நூலில் கூறப்பட்டுள்ளது.

### 2.7.19 சாட்சி பகிர்தல்

இசுலாமியர்கள் இறந்தவுடல் வைக்கப்பட்ட பெட்டியைச் சுமந்து செல்லும்போது இறந்தவருக்கு நரக வேதனைக் குறைய வேண்டும் என்பதற்காக

"அஷ்ஷஹுது அன்லாஇலஹ இல்லல்லாஹு வஹ்தஹு லாஷரிகலஹு அவஅஷ்ஹுது அன்ன முஹம்மதன் அப்துஹு வரஸீலுஹு"[56]

என்னும் சாட்சி பகரும் திருமந்திரத்தைக் கூறுகின்றனர். இதன் பொருள் வணக்கத்திற்குரியவன் இறைவன். அவன் தனித்தவன்; அவனுக்கு யாதொரு இணையுமில்லை; முஹம்மது நபி அவர்கள் அவனுடைய திருத்தூதர் ஆவார்" என்னும் திருமந்திரத்தைக் கூறிக் கொண்டு இறந்த உடலைச் சுமந்து செல்லும் வழக்கம் இசுலாமியரிடம் காணப்படுகிறது.

### 2.7.20 தொழுகை நடத்தி அடக்கம் செய்தல்

இறந்த உடல் வைக்கப்பட்ட பெட்டியைப் பள்ளிவாசலுக்குக் கொண்டு வந்த பின்பு இறந்தவருக்கு மரியாதை செலுத்தும் வகையிலும், பாவமன்னிப்புக் கோரும் வகையிலும் தொழுகை நடத்தப்படுகிறது. இத்தொழுகையை ஆண்கள் அனைவரும் கட்டாயமாகத் தொழ வேண்டும் என இசுலாமிய சட்டங்கள் கூறுகின்றன. ஆனால் பெண்களுக்கு இது கடமையல்ல.

இறந்த உடலுக்காகத் தொழுகை நடத்திய பின் அவ்வுடலை அடக்கம் செய்யும் இடமாகிய 'கப்ருஸ்தானுக்குக்' கொண்டு செல்கின்றனர். அடக்கம் செய்யும்போது புதைகுழி தோண்டுதல், மூன்று பிடிமண் போடுதல் குச்சி ஊன்றுதல், மரக்கிளை வைத்தல், தண்ணீர்த் தெளித்தல், திருமறையின் தோற்றுவாய் ஓதுதல், தர்மம் செய்தல், நீராடிச் செல்லுதல் மனைவி தனித்திருத்தல் (இத்தா) புதைத்த இடத்தில் பிரார்த்தனைச் செய்தல் (ஜியாரத்) போன்ற சடங்குகளைக் கடைப்பிடிக்கின்றனர்.

### 2.7.21 புதைகுழி தோண்டுதல்

இசுலாமியர்கள் இறந்தவரை அடக்கம் செய்ய அவரின் உயரத்திற்கு ஏற்ப 'கப்ரு' என்னும் புதைகுழியைத் தோண்டுகின்றனர். இப்புதைகுழி வடக்கும், தெற்கும் ஆகிய திசைகளில் இருக்க வேண்டும் என்பது மரபு. புதைக்குழி வடக்கும், தெற்கும் ஆகிய திசைகளில் தோண்டுவது, இறந்தவுடலின் முகமானது மேற்கு (கிப்லா) நோக்கி இருக்க வேண்டும் என்னும் இசுலாமியரின் மரபின் அடிப்படையில் தோண்டப்படுகிறது. இசுலாமிய சமயத்தில் இறந்தவரை அடக்கம் செய்வதற்குச் சில

வழிமுறைகள் நம்பிக்கைகளாகக் கடைப்பிடிக்கப்படுகின்றன. இதனைத் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதைகளில் பல இடங்களில் எடுத்தாண்டுள்ளார்.

இதை எப்படி நிறுத்துவது? 'கருந்தேளின் கொடுக்குகள்', 'சுருட்டுப்பா', 'பேரன்', 'ஒரு சவ ஊர்தியின் நகர்வலம்', '45-வது வார்டு வேட்பாளர்' போன்ற சிறுகதைகளின் வாயிலாக அடக்கம் செய்யும் முறைகளைக் காட்டுகின்றார்.

> "குழி வெட்டக் கூலி முன்னரே கொடுத்தார். குழி வெட்டுபவன் சொன்ன மரக்கடையில் பலாப் பலகைக்கு விலை கொடுத்தார். ரப்பர் மரத்தின் பலகை கபர்க்குழியின் நான்கு புறமும் வைக்கப்பட்டது"[57].
>
> (ப. 171)

ஒவ்வொரு சமயத்திலும் இறந்த மனிதனின் உடலை ஒவ்வொரு விதத்தில் தகனம் செய்வர். இசுலாம் சமயத்தினர் தனி விதத்தில் உடலைத் தகனம் செய்வர். இறந்தவரை அடக்கம் செய்ய சில நம்பிக்கைகளைக் கொண்டுள்ளனர் என்பதையும், அடக்கம் செய்யும் முறையைப் பற்றியும் 'கருந்தேளின் கொடுக்குகள்' சிறுகதையில எடுத்துரைக்கின்றார்

### 2.7.22 மூன்றுபிடி மண்போடுதல்

பெட்டியிலிருந்து இறந்த சடலத்தை எடுத்துப் புதைகுழியில் வைக்கின்றனர். அவ்வாறு வைக்கும்போது அதன் தலையை வடக்குத் திசை நோக்கியும், அதன் பாதங்களைத் தெற்குத்திசை நோக்கியும் வைப்பது மரபு. மனித இறந்தவுடலைச் சுற்றிக் கட்டியிருந்த துணிப்பட்டிகளை அவிழ்த்து முகத்தை மேற்குத்திசை நோக்கி வைக்கின்றனர். அப்போது உறவினர்கள் அவ்வுடலின் தலைக்கருகில் மூன்றுபிடி மண்ணைப் போடுகின்றனர்.

முதல் பிடி மண்ணைப் போடும்போது "மின்ஹா கலக்னா(க்)கும்" என்று கூறுகின்றனர். அதாவது இறைவன் இம்மண்ணிலேயே மனிதனைப் படைக்கிறான்; என்றும், இரண்டாம் பிடி மண்ணைப் போடும்போது "(வபீஹா நுஈதுடக்கும்)" இம்மண்ணிலிருந்து அவனை மீட்டுகிறான் என்றும், மூன்றாவது பிடியின் போது (வமின்ஹா நுகர்ஜி(க்)கும் தார(த்)தன் உக்ரா) இம்மண்ணிலிருந்து அவனை

வெளியாக்குவான், என்றும் இசுலாமியச் சமயக் கருத்துக்களின் அடிப்படையில் இச்சடங்குகளைச் செய்கின்றனர்.

### 2.7.23 குச்சி ஊன்றி மரக்கிளை வைத்தல்

புதைகுழியில் மூன்றுபிடி மண்ணைப் போட்டபின் அதில் மூங்கில் குச்சிகளைச் சாய்த்து ஊன்றுகின்றனர். பின்பு குச்சிகளின் மீது மூங்கில் பாய்களை விரித்துப் புதைகுழியை மண்ணால் மூடுகின்றனர். இவ்வாறு செய்வதனால் புதைகுழியில் வைக்கப்பட்ட உடல் மண்ணால் அழுத்தப்படாமல் இருக்கும் என்ற நோக்கத்தின் அடிப்படையிலாகும்.

இசுலாமியர்களிடையில் புதைகுழியை மண்ணால் மூடும்போது அதன் வடக்கிலும், தெற்கிலும் மரக்கிளையை ஒடித்து வைக்கும் பழக்கம் உள்ளது. புதைகுழியில் மரக்கிளைகள் வைப்பது ‘அவை பசுமையாய் இருக்கும்வரை இறந்தவருக்காக இறையருளை நாடும்; அதனால் அவருக்கு வேதனை குறையும் என்ற நம்பிக்கையில் மரக்கிளையை வைக்கின்றனர். இது காலம்காலமாக இன்றும் இசுலாமிய மக்களிடையே பழக்கத்தில் உள்ளது.

### 2.7.24 திருமறையின் தோற்றுவாய் ஓதுதல்

இறந்தவருக்குப் புதைகுழியில் ஏற்படும் வேதனையை எளிதாக்கவும், அவருடைய ஆத்மா சாந்தியடையும் பொருட்டும் பாத்திஹா ஓதுகின்றனர். இறப்பவருக்கு அவர்கள் செய்த நன்மை, தீமைகளுக்கு ஏற்ப மறுமையில் (முன்கர், நக்கீர்) வானவர்கள் கேள்வி கேட்பார்கள். இக்கேள்வியின் அடிப்படையில் சொர்க்கம், நரகம் கிடைக்கும் என்பது இசுலாமிய மக்களின் நம்பிக்கை. திருமறை ஓதும்போது இறந்தவருக்கு வேதனை குறையும் என நம்பிக்கை கொள்கின்றனர். இச்சடங்கு முறைப்பற்றி உஸ்மான் (ரலி) அவர்கள் அறிவித்தாக ஜனாஸா தொழுகைச் சட்டங்கள் எனும் நூலில் கூறப்பட்டுள்ளது.

“இறந்தவரை அடக்கம் செய்தபிறகு இறைத்தூதர் (ஸல்) அவர்கள் அங்கு (சற்று நேரம்) இருப்பார்கள். ‘உங்கள் சகோதரருக்குப் பாவமன்னிப்புக் கேளுங்கள். அவருக்கு உறுதியைத் தரும்படி கேளுங்கள். ஏனெனில், அவர் இப்போது

விசாரிக்கப்படுகிறார்'' என்று கூறுவார்கள். எனவே இறந்தவருக்காகத் திருமறை ஓதும் பழக்கம் மக்களிடையே உள்ளது.

### 2.7.25 மனைவி தனித்திருத்தல் (இத்தா)

இறந்தவர் ஆணாக இருப்பின் அவரை அடக்கம் செய்தபின்பு அவருடைய மனைவி நான்கு மாதம் பத்து நாட்கள் வரை தனித்திருக்க வேண்டும். இம்முறைக்கு 'இத்தா' என்று பெயர். அவ்வாறு தனித்திருக்கும்போது திருமணமானவள் என்பதற்கு அடையாளமாக தான் அணிந்திருந்த கருகமணியை நீக்கிவிட வேண்டும். இவ்வழக்கம் மற்ற சமயத்தவரின் தாலியை நீக்கும் வழக்கத்துடன் ஒத்துள்ளது.

மனைவியைத் தனித்திருக்கச் செய்வதனால் அவளின் துயரைப் போக்க முடியும் என்றும், தனது கணவனுக்காக இறைவனிடம் பிரார்த்தனை செய்வதற்கு ஏற்ற சூழலாக இருக்கும் என்றும் கருதுகின்றனர். அப்பெண் நான்கு மாதம் பத்துநாள் இத்தா இருப்பது அவள் கருவுற்றிருப்பதை அறிந்து கொள்ளும் நோக்கத்தின் அடிப்படையிலும் ஆகும். மனைவி தனித்திருக்கும்போது வண்ண ஆடைகள், அணிகலன்கள், நறுமணப் பொருட்கள் முதலியவற்றைப் பயன்படுத்தக்கூடாது. 'இத்தா' முடிந்தப் பின்பு அப்பெண் மறுமணம் செய்து கொள்ளலாம் என இசுலாம் கூறுகிறது. இதனை அல்குர்ஆனில்

> "எவராவது மனைவியை விட்டு மரணித்தால், நான்கு மாதங்களும் பத்து நாட்களும் (மறுதிருமணம் செய்யாமல்) அந்த பெண்கள் காத்திருக்க வேண்டும். அந்தக் காலக்கெடுவை பூர்த்தி செய்துவிட்டால், அவர்கள் தம் (விருப்பத்திற்கு ஏற்ப) காரியத்தில் நல்லமுறையில் முடிவு எடுப்பதில் உங்கள் மீது எந்தக் குற்றமும் இல்லை. நீங்கள் செய்வதை இறைவன் நன்கு அறிந்தவன்"[58].

(திருக்குர் ஆன் 2:234)

இத்தா இருந்த காலம் முடிந்ததும் பிற கன்னிப் பெண்களைப் போன்று எல்லாவகையான ஆடைகளையும் அணியலாம். விதவைகள் வாழ்நாள் முழுவதும் அல்லது மறுமணம் ஆகும் வரை வெள்ளை ஆடைதான் உடுத்த வேண்டும். அவள் நற்காரியங்களில் கலந்து கொள்ளக்கூடாது. வெளியில் செல்லாமல் மூலையில்

முடங்கிக் கிடக்க வேண்டும். அலங்காரம் செய்யக்கூடாது என்ற இசுலாம் வரையறை செய்யவில்லை. இது மக்களின் அறியாமையால் விளைந்த மூடபழக்கவழக்கமாகும். இதனைத் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதையில்,

> "அவன் மவுத்தாகி ஆறுமாசம்தானே ஆச்சு. அதுக்குள்ள பெட்டியைத் தூக்கிட்டு இறங்கிட்டியே வெட்கம்தான் இல்லையா?"[59] (ப.103)

கணவனை இழந்த விதவைப் பெண்கள் வெளியே வரக்கூடாது. அப்படி வந்தால் சமூகத்தின் அவலத்திற்கு ஆட்பட வேண்டும் என்பதை ஸபியா என்னும் கதைமாந்தர் மூலமாக 'இறக்கை இழந்த பறவைகள்' என்னும் கதையில் சுட்டிக் காட்டுகின்றார்.

### 2.7.26 புதைத்த இடத்தில் பிரார்த்தனைச் செய்தல் (ஜியாரத்)

இறந்தவரை அடக்கம் செய்த இடத்திற்குச் சென்று அவர்களின் மறுமை வாழ்விற்காக இறைவனிடம் பிரார்த்தனைச் செய்யும் வழக்கம் இசுலாமிய மக்களிடையே காணப்படுகிறது. பொதுவாக இறந்தவரின் உறவினர்கள் வெளிநாடுகளிலிருந்து திரும்பி வந்ததும் இப்பிரார்த்தனையைச் செய்வார்கள். இச்சடங்குகள் 'சுருட்டுப்பா' எனும் சிறுகதையில்,

> "கொளும்பிலிருந்தும் சிங்கப்பூரிலிருந்தும் பத்துப் பதினைந்து வருடங்களுக்குப் பின் ஊர் திரும்பியவர்கள் சுருட்டுப்பாவைச் சந்திப்பார்கள். தங்களின் வாப்பா, உம்மா, மனைவி மக்களின் கப்றுகள் இருக்கும் இடத்தைக் கேட்பார்கள்.... ஜியாரத் செய்யும்வரை சுருட்டுப்பா உடன் இருப்பார்"[60]. (ப. 208)

இறந்தவருக்காகப் பிரார்த்தனை செய்யும் வழக்கம் காலம் கடந்தும் நிலைத்து நிற்கிறது என்பதை தோப்பில் முகமது மீரான் எடுத்துரைக்கின்றார்.

### 2.7.27 பிற சடங்குகள்

இறந்தவரை அடக்கம் செய்த பின்பு அவர்களுக்காக இறைவனிடம் வேண்டும் பொருட்டுச் சில சடங்குகளைச் செய்கின்றனர். இச்சடங்குகள் திருமறையை ஓதிய பின்பு இறந்தவர் நினைவாக அரிசி, ரொட்டி, பணம் முதலியவற்றை ஏழைகளுக்குத்

தர்மம் செய்கின்றனர். இறந்தவர் பெயரில் பத்தாம் நாள், இருபதாம் நாள், முப்பதாம் நாள், நாற்பதாம் நாள், மூன்று மாதம், ஆறுமாதம், ஒரு வருடம் என்று பிரித்துத் (பாத்திஹா) திருமறை ஓதி தர்மம் செய்கின்றனர். இப்படிச் செய்வதனால் இறந்தவருக்கு மறுமையில் நன்மை விளையும் என்ற இசுலாமியர் நம்புகின்றனர். இச்சடங்குகளை முடித்தப்பின்பு அனைத்து உறவினர்களுக்கும் உணவுப் பரிமாறப்படும் இதனைக் ‘கத்தச் சோறு’ என்று கூறுவார்கள். இப்பழக்கம் இன்றும் இசுலாமிய மக்களிடையே காணப்படுவதை,

> “கண்ணும்மா, மைதீன் பிள்ளை வூட்டுக் கத்தச் சோறு தின்னப் போவலியா?”[61] (ப. 41)

மேற்குறித்த வரிகளின் மூலமாக நினைவுப்படுத்துகிறார். இறந்தவரின் ஆன்மா சாந்தியடையவும் அவரின் சொர்க்க வாழ்விற்காகவும் இறந்த பின்பும் பல சடங்குகளை மக்கள் செய்வதை ‘கத்தச்சோறு’ என்னும் சிறுகதையின் வாயிலாக உணர்த்துகின்றார். நம்பிக்கையின் அடிப்படையில் தோன்றும் பழக்கவழக்கங்கள் காலப்போக்கில் சடங்குகளாகவும், கலாச்சாரங்களாகவும் மாறுகின்றமையால் இவற்றை மக்கள் நம்பிக்கையின் அடிப்படையில் சடங்குகளாக மேற்கொள்கின்றனர் என்று படைப்பாசிரியர் கூறுவதின் மூலம் அறியலாம்.

## 2.8 மறுமை பற்றிய நம்பிக்கை

இசுலாம் சமயம் பல நம்பிக்கைகளை உடையதாகும். அத்தகு நம்பிக்கைகளின் அடிப்படையில் வாழ்வை அமைத்தால் இறுதியில் நாம் செல்லும் இடம் சொர்க்கமாகும். நாம் வாழ்கின்ற வாழ்க்கையில் அர்த்தம் உள்ளது என கருதுகின்றனர். முதல் நம்பிக்கையான ‘கலீமா’ எனும் தூண் சரியாக இருந்தால் நாம் இறுதியில் சென்றடையும் இடமும் சரியாகத்தான் இருக்கும் என்ற கருத்தினை அடியொற்றியே முகமது மீரான் சிறுகதைகள் அமைந்துள்ளன.

படைப்பாளர் மறுமைக்கான வெற்றி கலிமாவுடன் கூடிய மரணமே, அதற்காக அதிகமாகக் கலீமாவைச் சொல்லிக் கொடுங்கள் என துணைப்பாத்திரங்களின் வழி வெளியிடுகின்றார். சமூகத்தில பல நிலைகளில் வாழ்ந்த மனிதன் இறுதியில் கலீமா எனும் ஈமானை வெளிப்படுத்தாமல் இறப்பானாயின் அது அந்த மனிதனின்

நாசத்திற்குக் காரணமாகிவிடும். எனவே கலீமாதான் மனிதனின் ஈடேற்றத்திற்குச் சிறந்தது என்பதைத் தனது படைப்பின்வழி உணர்த்துகின்றார்.

> "ஒவ்வொரு ஆத்மாவும் மரணத்தைச் சுகித்தே தீரும். எனினும் உங்கள் (செயல்களுக்குரிய) கூலிகளை நீங்கள் பூரணமாக அடைவதெல்லாம் மறுமை நாளில்தான்"[62]....
>
> (திருக்குர்ஆன். 3:185)

என்னும் குர்ஆனின் வரிகள் மறுமைநாள் என்பது மனிதராகப் பிறந்த அனைவருக்கும் கட்டாயம் உள்ளது என்ற நம்பிக்கையை அறிவிப்பதாக அமைந்துள்ளது. தோப்பில் முகமது மீரான் இசுலாம் சமூக சமயத்தை மையப்படுத்திச் சிறுகதைகள் படைக்கும்போது அதில் இடம் பெறும் பாத்திரங்கள் வழி மறுமைநாள் பற்றிய நம்பிக்கையை வெளிப்படுத்திக் காட்டியுள்ளார்.

'கடல்' என்ற சிறுகதையில் செய்தகமது மீன் பிடிக்கும் தொழில் செய்பவர். இவர் மீன்பிடிக்கும் போது அலை சீறியடித்ததில் கட்டுமரம் கவிழ்ந்தது. அப்போது,

> "முன்னால் மரணம் அகன்ற வாயுடன் நிற்கின்றது. அதன் கோரப்பற்களில் அவன் வாழ்வு ஜடமாகத் துவண்டு கிடப்பது மனக் கண்ணில் தெரிந்தது. வாழ்க்கைக்கும் மரணத்துக்குமுள்ள நிமிஷ தூர பயணத்தில்... அவன் அந்தராத்மா தீனக்குரல் எழுப்பியது. ஆமினா நாளை ஆகிரத்திலாவது"[63]... (ப. 60)

என்று மரணத்தின் பிடியில் சிக்கிய செய்தகமது மறுமையைப் பற்றிய நம்பிக்கையுடன் கூறுவதாக ஆசிரியர் உணர்த்துகின்றார். இதே போன்று 'சுருட்டுப்பா' என்ற சிறுகதையில் இடம்பெறும் 'சுருட்டுப்பா' என்ற பாத்திரம்.

> "இங்கு கஷ்டப்பட்டால் நாளை மஹ்ஷரில் சுகிக்கலாம்"[64]. (ப.206)

என்று எடுத்துக் கூறுவதன் மூலமாக இம்மை, மறுமை பற்றிய கருத்துக்களை இடம்பெறச் செய்துள்ளார். இவ்வரிகளில் இவ்வுலக வாழ்வில் ஒருவர் அடையும் துன்பத்தால் இறுதிநாளான (மஹ்ஷரில்) மறுமையில் இறைவனின் நாட்டத்தைப் பெற்று நன்மையை அடையலாம்" என்ற கருத்து எடுத்துக் காட்டப்பட்டுள்ளது.

காரணம் ‘சுருட்டுப்பா’ எனும் பாத்திரம் இறந்தவர்களை அடக்கம் செய்வதற்காகக் குழி வெட்டும் தொழிலைச் செய்து வருபவர். இவர்களை இசுலாம் சமூகத்தில் கப்ரு வெட்டும் தொழில் செய்பவர்கள் என்று அழைப்பார்கள்.

பொதுவாக இசுலாம் சமூகத்தில் இத்தகு தொழில் செய்து வாழ்பவரின் பொருளாதாரம் மிகவும் பின்தங்கிய நிலையில் அமைந்துள்ளது என்பதை எடுத்துக்காட்ட விரும்பும் முகமது மீரான், அவர்களது வாழ்க்கையை மையப்படுத்தும் விதத்தில் ‘சுருட்டுப்பா’ எனும் சிறுகதையை ஆக்கம் பெறச் செய்துள்ளார். இச்சிறுகதையில் இடம் பெற்றுள்ள சுருட்டுபப்பா எனும் பாத்திரம் கபுறுவெட்டும் தொழில் காரணமாக வறுமையில் வாழ்ந்து பல இன்னல்கள் அடைந்தாலும் கூட மறுமைநாளில் இறைவன் தமக்கு நன்மைகளைத் தந்து உதவுவான் என நம்பிக்கை கொண்டுள்ளார். கபுறு வெட்டும் தொழிலை இசுலாம் மனித சமூகத்திழற்கு நன்மை பயக்கும் செயலாக ஏற்றுக் கொள்கிறது. இக்கருத்தை அடியொற்றியே ‘சுருட்டுப்பா’ எனும் சிறுகதையைப் படைத்துள்ளார்.

இச்சிறுகதையில் இசுலாம் சமயத்தில் வலியுறுத்தப்படும் இறப்பிற்குப் பின் உள்ள நிகழ்வுகளும் நம்பிக்கைகளாகச் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

> “மக்கத்துக்குச் செல்லும்போது கப்பலில் இறந்தால் மய்யித்தைக் கடலிலல்லவா இறக்குவார்கள். கடலுக்கடியில் முன்கர் நக்கீர் போவார்களா? அந்த மய்யிததுக்குச் சொர்க்கம் கிடைக்குமா? அப்படியானால் இந்த மய்யித்தைக் கேள்வி கேட்க முன்கர் நக்கீர் செல்வார்கள். இந்த மய்யித்துக்கும் சொர்க்கம் கிடைக்கும்”[65].
>
> (ப.211)

மேற்குறித்த வரிகளில் ஒருவர் இறந்தபின்னர் அவரது மறுமைநாளில் முன்கர், நக்கீர் எனும் வானவர்கள் இறந்தவர்களின் சடலத்திற்கு முன்பு தோன்றி இவ்வுலக வாழ்க்கைப் பற்றிய நிகழ்வுகள் குறித்த கேள்விகளைக் கேட்பார்கள் என்பது இசுலாமிய மக்களின் நம்பிக்கையாகும். இந்த நம்பிக்கைச் சுருட்டுப்பா சிறுகதையில் சுருட்டுப்பா என்ற பாத்திரம் இறந்த பின்பு வறுமையின் காரணமாக அவரது

மய்யித்தை அடக்கம் செய்ய இயலாத நிலையில் அவரது மனைவி ஆமினா உம்மாள் கூறுவதாக அமைந்துள்ளது.

மனிதர்கள் செய்யும் நன்மை தீமைகளுக்கு ஏற்றவகையில் மறுமையில் பலன்கள் கிடைக்கின்றன என்று திருமறைகள் கூறுகின்றன. உலகில் வாழ்ந்த மனிதர்கள் அனைவரும் மறுமை நாளில் மீள உயிர்ப்பித்து எழுப்பப்படுவார்களென்றும் அவர்களது செயல்களனைத்தும் விசாரிக்கப்படடு நல்லடியார்கள் சுவனத்திற்கும், பாவிகள் நரகத்திற்கும் அனுப்பப்படுவார் என்றும் நம்பிக்கை கொள்ளப்படுகிறது.

> “அல்லாஹ் அவனைத் தவிர வேறு இறைவனில்லை. அவன் நிச்சயயமாக மறுமை நாளில் உங்களை ஒன்று சேர்ப்பான் அதில் சந்தேகமில்லை”[66]. (அல்குர் ஆன். 04.81)

இறந்தவர் மீண்டும் இறைவன் முன் உயிர்ப்பித்து அவனது நற்கருமங்களுக்கு ஏற்க கூலி கிடைக்கும் என இசுலாம் கூறுகிறது. மறுமைநாள் என்பது மனிதனாகப் பிறந்த அனைவருக்கும் கட்டாயம் உள்ளது என்ற நம்பிக்கையை “சூட்சும இடைவெளி” என்ற சிறுகதையின் வாயிலாக வெளிக்காட்டுகின்றார்.

“துனியாவில் (உலகில்) நன்மை செய்தவர்களுக்கு மட்டுமே, கேள்விகளுக்கு உடன் பதில் சொல்ல முடியும். அப்படிச் சொல்பவர்களுக்குச் சொர்க்கப் பதவியும் கிடைக்கும். பதில் சொல்ல முடியாத பாவிகள் நரக நெருப்பில் கிடந்து எரிய வேண்டும். பாவிகளைக் கியாமம் உலக முடிவு நாள்) வரை விஷப்பாம்புகள் தீண்டிக் கொண்டேயிருக்கும்”[67]. (ப.371) மறுமை மீதான நம்பிக்கை ஓர் இசுலாமியரின் வாழ்க்கையில் மிகப் பெரிய தாக்கத்தை உண்டாக்குகிறது. இறைவன் தனது எல்லாச் செயல்களையும் கவனிக்கிறான் - மறுமை நாளில் செயல்கள் அனைத்திற்கும் கணக்குக் கொடுக்க வேண்டும் என ஒவ்வொரு மனிதனும் நம்புகிறான். ஆகவே அவனது தொடர்புகளும் நடத்தைகளும் அறிவுடைமையுடனும், கட்டுப்பாடுள்ளதாகவும் அமைகின்றன என்பதை ‘நரகம் பூமியில்’ பவர்க்காரி, அன்புக் முதுமை இல்லை, ‘45-வது வார்டு வேட்பாளர்’ போன்ற சிறுகதைகளில் மறுமை நாள் பற்றி மக்கள் கொண்டுள்ள நம்பிக்கைகளை எடுத்துக்காட்டுகிறார்.

## 2.9 தொகுப்புரை

நம்பிக்கை என்பது முழுமையான நிலையை அடையும்போது அதன்மீது ஒரு முழுமைத்தன்மை மிகுந்த பற்று ஏற்படும். அந்த அடிப்படையில் அமைவது சமய நம்பிக்கையாகும். இசுலாம் என்பது சில நம்பிக்கையை அடியொற்றி அமைந்தது. இறைவனை நம்புகின்ற நிலையில் மறுமை நாளைப் பற்றி அச்சமும், வழிபாட்டில் ஒரு கவனமும் ஏற்படும். இதன் வழி வாழ்க்கையும் சிறக்கும். படைப்பாளர் அவர்களும் இந்தத் தளத்திலேயே தனது சிறுகதைகளைச் சிறப்பாக அமைத்துள்ளார். இவரது சிறுகதைகள் முழுமையும் சமய நம்பிக்கைகளை அடியொற்றியே அமைந்துள்ளன.

மனிதன் பிறந்தது முதல் இறக்கும் வரை இன்ன வழிமுறைகளில்தான் வாழ வேண்டும் என்று இசுலாம் காட்டுகின்றது. அதோடு இறை நம்பிக்கையையும், வழிபாட்டு முறைகளையும் கற்றுத் தருகிறது. ஈமான் எனும் இறைநம்பிக்கையோடு வாழ்ந்து இறைநம்பிக்கையுடன் இறப்பவரே வெற்றி பெற்றவர் ஆவார் எனும் இஸ்லாம் சமயத்தின் உன்னதமான கருத்துக்களைப் படைப்பாளர் முகமது மீரான் தனது படைப்புகளில ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றார்.

இறைவனால் படைக்கப்பட்ட வானவர்கள் மக்களுக்கு இறைக்கட்டளைகளையும், நன்மைகளையும், தீமைகளையும் பகுத்தறியும் பண்புகளையும் உணர்த்தியவர்கள் என முழுமை நம்ப வேண்டும் என்பதைப் படைப்பாளர் தனது படைப்பில் வலியுறுத்துகின்றார்.

இறைச் செய்திகளை மொழியும் வேதங்களின் வழிகாட்டுதல் மனிதகுலத்திற்காக இறைவன் வழங்கிய மிகப் பெரும் அருட்கொடை என்றும், இவ்வுலகிலும், மறுமையிலும் மனித இனத்தின் வெற்றி இறைவேதங்களைப் பின்பற்றுவதிலேயே அமைந்திருக்கிறது என்றும் மையப்படுத்தித் தனது படைப்பைப் படைத்திருப்பதைக் காணலாம்.

இசுலாம் சமயத்தின் ஒவ்வொரு பண்டிகைகளும், விழாக்களும் பிறையை அடிப்படையாகக் கொண்டே அமையும். பிறையை மையமாக்க கொண்டு வாழ்வில் நிகழும் அனைத்து மங்கள நிகழ்வுகளையும் செய்வதன் மூலம் இறைவன் வழங்கிய அனைத்துவிதமான நன்மைகளும் கிடைக்கும் என்ற நம்பிக்கையில் இசுலாமிய மக்கள் செயல்படுவதை மிக எதார்த்தத்துடன் வெளிக்காட்டியுள்ளார்.

தொழுகை என்பது இறைவனுக்குச் செய்ய வேண்டிய ஆன்மீக வணக்கமாக இருந்தாலும் அது மனித நடவடிக்கைகளைத் தூய தன்மையுடன் மாற்றியமைக்கவும், மனிதநேயம் தழைக்கவும் கடமையாக்கப்பட்டுள்ளது என தனது படைப்பின் வழி அறிவுறுத்திச் செல்கின்றார்.

இசுலாமிய சமயக்கோட்பாட்டின் அடிப்படையில் இன்று தர்காக்களின் இருப்பு கேள்விக்குள்ளாக்கப்படுகிறது என்றாலும் தர்காக்கள் மக்களை ஈர்க்கும் வழிபாட்டிடங்களாகவே இன்றும் நிலைபெற்றதையும், தர்கா தொடர்பான நம்பிக்கைகள் மக்கள் மனத்தில் நிலைக் கொண்டு மரபாகத் தொடர்வதையும் மையமாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளன.

மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறான நம்பிக்கைகள் காணப்படுகின்றன. இந்த நம்பிக்கைகளைப் பின்பற்றுவதால் தங்கள் வாழ்க்கை வளமும் நலமும் பெறும் என நம்புகின்றனர். இயற்கையின் பாதிப்புகட்கு உட்பட்ட நிலையில்தான் மனிதனிடத்தில் கடவுட்கோட்பாடுகளும் வழிபாட்டு முறைகளும் தோன்றின. ஒரு சமூக அமைப்பின் மரபினைக் கண்டு கொள்வதற்கு அச்சமூகத்தின் நம்பிக்கைகள் துணைபுரிகின்றன. இந்த நம்பிக்கைகள் சமூகத்தின் தேவை கருதியும், குறிக்கோளினை மையப்படுத்தியும் வளர்ந்து வருகின்றன. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை அவன் கொண்டிருக்கும் நம்பிக்கைகளே அவனை இயக்குகின்றன எனக் கூறும் அளவிற்கு நம்பிக்கைகள் மனித வாழ்வில் பெரும் பங்கு வகிக்கின்றன எனலாம். இறப்பிற்குப் பின் நிகழும் சடங்குகள் இறந்தவரின் நினைவுகளைப் போற்றும் வகையில் அமைந்திருக்கின்றன. இறப்பு என்பது உயரியல் ரீதியாக எல்லோருக்கும் நிகழ்கிறது. அஃதே மனித இனத்துள் நிகழும் போது பல சடங்கார்ந்த நிகழ்வுகளை முன்வைக்கிறது என்பதைத் தனது படைப்பில் வெளிப்படுத்துகின்றார்.

இன்றைய அறிவியல் யுகத்தில் மரபு வழியாகப் பின்பற்றப்படும் சடங்குகளும், நம்பிக்கைகளும் நடைமுறை வாழ்க்கைக்கு ஏற்புடையதாக இருந்தாலும் சில நேரங்களில் ஒவ்வாத தன்மையாக அமைந்துவிடுகின்றன என்பதையும் படைப்பாசிரியரின் சிறுகதைகளின் வழியே அறிய முடிகிறது.

**சான்றெண் விளக்கம்**

1. குலாம் சர்வர், **இசுலாம் நம்பிக்கைகளும், போதனைகளும்,** ப.44.
2. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன்,114:1-4
3. மேலது., திருக்குர்ஆன், 13:7
4. மேலது., திருக்குர்ஆன், 2:217
5. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.37.
6. மேலது., ப.152.
7. மேலது., பக்.184-185.
8. மேலது., ப.377.
9. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன்,2:285
10. மேலது., திருக்குர்ஆன், 16:36, 4:165
11. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.152.
12. மேலது., ப.211.
13. மேலது., ப.371.
14. மேலது., ப.255.
15. ஹபீப் முஹம்மது, **வேதவரிகளும் தூதர் மொழிகளும்,** ப.34..ஃ.
16. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.17.
17. மேலது., ப.191.
18. மேலது., ப.114.
19. மேலது., ப.152.
20. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன்,2:183
21. மேலது., திருக்குர்ஆன். 2:188.
22. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.13.
23. மேலது., ப.9
24. மேலது., ப.100
25. மேலது., ப.69
26. மேலது., ப.196
27. குலாம் சர்வர், **இஸ்லாம் நம்பிக்கைகளும், போதனைகளும்,** ப.85.
28. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன்,20:14
29. மேலது., திருக்குர்ஆன். 4:103.

30. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.15.
31. மேலது., ப.32.
32. மேலது., ப.285.
33. மேலது., ப.378.
34. மேலது., ப.184.
35. மேலது., ப.195.
36. மேலது., ப.114.
37. மேலது., ப.491.
38. மேலது., ப.423.
39. மேலது., ப.487.
40. மேலது., ப.146.
41. வரதராசனார், மு. **திருக்குறள் தெளிவுரை,** குறள். 339
42. மௌலான முஹம்மது யூசுப் இல்லாஹி, **வாழ்க்கைக் கலை,** ப.172.
43. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.152.
44. மேலது., ப.152.
45. மேலது., ப.48.
46. மேலது., ப.168.
47. மவ்லவி அப்துல்லாஹ் மன்பா, ஜனஸா தொழுகை – சட்டங்கள், ப.49.
48. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** பக்.204-205
49. மேலது., ப.169.
50. அப்துல் ரவு.ஃ.ப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன், 80:37-41
51. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.172
52. மேலது., பக்.171-172
53. மேலது., ப.368.
54. மேலது., ப.172.
55. மௌலான முஹம்மது யூசுப் இல்லாஹி, **வாழ்க்கைக் கலை,** ப.177.
56. மேலது., ப.176.
57. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.17.
58. அப்துல் ரவு.ஃ.ப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன், 2:234
59. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.103.
60. மேலது., ப.208.

61. மேலது., ப.4.
62. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன், 2:234
63. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.60.
64. மேலது., ப.206.
65. மேலது., ப.21
66. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** திருக்குர்ஆன், 4:81
67. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.37.

# இயல் - 3

## சிறுகதைகளில் பெண்கள் நிலை

**3.0** பெண்கள் குடும்பம் மற்றும் சமூகத்தில் சிறப்பிற்குரிய உறுப்பினராகக் கருதப்படுபவர்கள். மகப்பேறு என்னும் மனித உற்பத்தித்தளம் பெண்களாவர். வளமையின் இருப்பிடம் சமூகம் ஓர் நேர்கோட்டின் வளர்ச்சியைப் பெறுவதற்குப் பெண்கள் முக்கியக் காரணமாக இருக்கின்றனர். மனிதத் தோற்றத்திலிருந்து இன்றுவரை ஆண்கள், பெண்களை ஒரு வரையறைக்குள் கட்டுப்படுத்தி வைத்திருக்கின்றனர். பெண்களின் செயல்பாடுகள் சிறப்பிற்குரியனவாக இருந்தபோதும் சமூகம் அவர்களுக்குக் கொடுத்த இடம் அடிமைத்தனம் ஆகும். சமூகத்தில் அடித்தளமான குடும்பத்தை நிருவகிப்பது, குழந்தைகளை நன்முறையில் வளர்ப்பது போன்ற முக்கியப் பணிகளைச் செய்பவர்கள்.

ஆண் இனம் விதித்த கட்டுப்பாட்டுகளிருந்தும் அடிமைத்தளத்தில் இருந்தும் பெண்களை விடுவிப்பதற்காகச் சமூகச் சீர்திருத்தவாதிகள் களத்தில் குதித்தனர். அவர்களின் போராட்டத்தின் விளைவால் இன்றைய பெண் இனம் முழுச் சுதந்திரம் பெறவில்லை என்றாலும் சிறப்பான இடத்தைப் பெற்றிருக்கிறது என்பதனைப் பெண் இனம் ஒத்துக் கொண்டிருக்கிறது. பெண்களின் அடிமைத்தனத்தை விரட்டுவதற்குச் சமூக சீர்திருத்தவாதிகள் போராடியதற்குத் துணை நின்றவர்கள் இலக்கியப் படைப்பாளர்கள். இலக்கியப் படைப்பாளர்கள் பெண்களுக்குச் சமூகம் கொடுத்த தாக்கத்தினையும், பெண்கள் அனுபவித்த கொடுமைகளையும் இலக்கியத்தின் வழி வெளிப்படுத்தினர். அவ்வாறு பெண் விடுதலைக்காக களம் இறங்கிய இலக்கியப் படைப்பாளர்களுள் தோப்பில் முகமது மீரானும் ஒருவர்.

சமுதாயத்தில் விழிப்புணர்ச்சி ஏற்படுத்த வேண்டும் என்ற எண்ணம் மேலை நாடுகளில் கி.பி. 18ஆம் நூற்றாண்டு முதலே இருந்தது. பெண்களின் நிலைமை பற்றிப் பரவலான சிந்தனையோட்டம் அந்நாடுகளில் பேசப்பட்டும், எழுதப்பட்டும் வந்தன. பெண்ணியம் என்ற இயக்கத்தின் அமைப்பு முதன்முதலில் மேற்கத்திய நாடுகளில்தான் கருக்கொண்டு உருவாயிற்று. நமது பண்பாட்டு, நாகரிக வளர்ச்சிக் கூறுகளுக்கு ஏற்ற வண்ணம் இந்தியாவிலும் குறிப்பாகத் தமிழகத்திலும் பெண்களின் நிலைப்பற்றி சிந்தனைகள் முகிழ்த்தன.

“பெண் பிறவி மிக விழுமியது – அப்பிறவியில் பெண்மை, தாய்மை, இறைமை என்னும் இயல்புகளை சிறந்து விளங்குகின்றன. பெண்மையினின்றும் தாய்மையும், தாய்மையினின்னும் இறைமையும் மலர்கின்றன என்ற திரு.வி.க.வின் பெண்ணைப் பற்றிய மதிப்பீடு பெண்ணின் இயல்புகள் மேன்மைப்படுத்துவதாய் அமைகிறது. இத்தகைய மேன்மைக்கு நேர்மாறாய் பெண்களின் நடைமுறை வாழ்வில் பல அவலங்கள் நேரிடுகின்றன. தோப்பில் முகமது மீரான் சிறுகதைகளின் வழி பெண்களின் நிலைகளை ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும். இன்றைய இலக்கிய உலகில் மேலைநாட்டு பெண்ணியக் கோட்பாடுகளை பொருத்தி பார்க்கின்றன. இப்பெண்ணியக் கோட்பாடுகளை எடுத்துக் கொண்டால் இவ்வாய்வின் எல்லையும் பரப்பும் விரிவடையும். ஆதலால் ஒரு குறிப்பிட்ட எல்லைக்குட்பட்ட தோப்பில் முகமது மீரான் சிறுகதையில் பெண்களின் நிலை மட்டுமே ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 3.1 பெண் நிலை சொற்பொருள் விளக்கம்

பெண் என்னும் சொல் பெண்களுக்குரிய இயல்புகளை உடையவள் என்று பொருள்படும். தமிழில் பெண்ணியம், பெண்நிலைவாதம், பெண்ணுரிமை, ஏற்பு என்ற பெயர்களில் வழக்கிலுள்ளன.

“பெண் என்னும் சொல், பெண்களுக்குரிய இயல்புகளை உடையவள் என்று பொருள்படும்”[2] என்கின்றனர் முத்துச்சிதம்பரம். “பெண் ஓர் ஆண்மகனை மணம் செய்து கொண்டு, அன்பு, தியாகம், தொண்டு, பொறுமை, அறிவு, அழகு என்று இவ்வளவு சிறப்பியல்களையும் கணவனுக்காக அவள் மகிழ்ச்சிக்காகவும் பயன்படுத்துபவளே பெண்”[3] என்று குறிப்பிடுகின்றனர்.

## 3.2 அகராதி தரும் - விளக்கம்

அகராதிகளில் பெண்நிலைவாதம், பெண்கலம், பெண்டகை, பெண்டு, பெண்ணரசி, பெண்ணருங்கலம் எனற சொற்களில் பெண்ணியல் சுட்டப்படுகிறது. பெண்ணியம் என்று குறிக்கப்படவில்லை.

“பெண்ணலம் என்பது பெண்மைக்குணம், பெண் இனம்”[4] என்கிறது கழகத் தமிழ் பகுதி

| | | |
|---|---|---|
| பெண்கலம் | - | எண்ணத்தின் சிற்றின்பப் பகுதி |
| பெண்டகை | - | பெண் தன்மை |
| பெண்டு | - | மனைவி, பெண் |
| பெண்ணரசி | - | செல்வமுடையவள், அழகிற் சிறந்தவள். |
| பெண்ணருங்கலம் | - | பெண்களில் சிறந்தவள் |
| பெண்ணலம் | - | பெண்மைக்குணம், பெண்ணின்பம் |

"பெண்ணின் அழகு"[5] என்றும் பெண் சார்ந்த சொற்கள் பல்வேறு பொருள்களால் குறிக்கப்பட்டுள்ளன. இன்று பெண்ணியம் என்ற சொல் புதிய சமூகச் சூழ்நிலையில் பெண்களைப் பற்றிய புதிய பார்வையின் அடிப்படையில் எழுந்துள்ள கோட்பாட்டினைக் குறிக்கும் சொல்லாக விளங்குகிறது". பெண்களின் தேவை நிறைவாழ்வு அவர்கள் சார்பாக வாதாடுவது", போராடுவது (Advocacy of the Climas of Woma)"[6] என்ற பொருளை பெண்ணியம் என்பதற்கு ஆக்ஸ்போர்டு அகராதி தருகிறது. "நாம் மனிதர்களாகப் பிறக்கிறோம். ஆனால் பாலின அடிப்படையிலான தொழில் சார்ந்த பாகுபாடுகள் நம்மை ஆண்-பெண் என்ற பிரிவுகளாகப் பிரித்திருக்கிறது. ஒவ்வொரு பிரிவும் மனித வர்க்கத்தில் பாதியளவே கொண்டதாயிருக்கிறது. இன்றும் வளராமலேயே இருக்கின்ற ஒரு பிரிவின் வளர்ச்சியை மீறியதாக இன்னொரு வளர்ச்சியிருக்கிறது. இவ்வாறான பாலினச் சமனற்ற வளர்ச்சிக்குக் காரணமாகவும், ஒப்புதலாக இருப்பது பாலினப் பங்களிப்பு குறித்த சமூகச் கலாச்சாரத்திட்டங்களே இத்திட்டங்களே சமூகம் பெருமைப்படுத்துகின்றது. குழந்தைகள் பிறந்த நாளிலிருந்து சமூக மயமாதல் மூலமாக அவைகளைச் செய்து முடிப்பதற்குப் பயிற்றுவிக்கப்படுகிறது"[7] என்று சென்னாரெட்டி குறிப்பிடுகிறார்.

"Feminism" என்பதற்குப் பெண் உரிமை ஏற்புக் கோட்பாடு. பெண்ணுரிமை ஆதரவு அளிக்கிறது"[8] என்கிறது. சென்னைப் பல்கலைக்கழக ஆங்கிலப் பேரகராதி. "பெண்ணியம் என்பது சமூகத்திலம் அரசியலிலும் ஆண்களுக்கு நிகரான உரிமைகளைப் பெற்றுத் தருவதற்கான ஒரு கோட்பாடு" என்கிறது. வெப்ஸ்டர் ஆங்கிலப் பேரகராதி.

சமூகவியல் அகராதி – ‘பெண்ணியம் என்பது ஒரு சமுதாய இயக்கமாகும் என்று கூறுகிறது. 16-ஆம் நூற்றாண்டில் இங்கிலாந்தில் இவ்வியக்கம் தோற்றம் பெற்றது. ஆண்களுக்கு நிகராகச் சமூக, பொருள், அரசியல் சமன்பாட்டைப் பெண்கள் அடைவதே இவ்வியக்கத்தின் நோக்கமாகும். இது பெண்களுக்குப் பொருளாதார விடுதலை வேண்டும் என்னும் கோட்பாடு உள்ளடக்கியது”[10] என்பர்.

## 3.3. வரையறை – பெண்கள் நிலைகள்

ஆண் - பெண் என்ற இரு பாலினத்தின் கூட்டமைப்பே குடும்பம் மற்றும் சமூகமாகும். குடும்ப, சமூக வாழ்வில் பெண் இல்லாத வாழ்க்கை கடலில் துடுப்பு இல்லாத மரக்கலம் போன்றதாகும். இலக்கியங்கள் ஆண் - பெண் ஆகிய இருவரின் உணர்வுகளையே பிரதிபலிக்கின்றன. சமூகத்தின் சரி பாதியாக விளங்கும் பெண்கள் காலங்காலமாகச் சமூகத்தின் தாக்குதலுக்கு ஆட்பட்டு தனது சமஉரிமையை இழந்து காணப்படுகின்றனர். இத்தாக்குதலிலிருந்து மீண்டு வர எண்ணிய பெண்கள் ஏற்படுத்திய கருத்தாக்கமே பெண்ணியம் என்பதாகும்.

ஆண்களால் உருவாக்கப்பட்ட இச்சமூகத்தில் பெண் தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்வதற்காகப் பல்வேறு நிலையிலும் போராட வேண்டியுள்ளது. பெண்ணியம் என்பது பெண்கள் குறித்த அக்கறையின் வெளிப்பாடு எனலாம். சமூக அமைப்பில் ஆண்கள் பிடியிலிருந்து பெண்களின் விடுதலை உணர்வை முன்வைத்துச் செல்கிறது. இச்செயல் ஆணாதிக்கத்தால் உருவான மரபு ரீதியான கட்டுப்பாடுகளை எதிர்த்து கேள்விக்கு உட்டுபத்துகிறது. பெண்ணியத்தின் முக்கிய செயல்பாடு ஆண்களை எதிர்ப்பதல்ல. ஆண்களுக்குச் சரிசமமாகத் தங்களையும் நடத்த வேண்டும் என்பதையும், அவர்களுக்கு நிகராகச் சமூகத்தில் மதிக்க வேண்டும் என்ற அடிப்படை நோக்கத்தையும் முன்வைத்து பெண்ணிய அமைப்புகள் செயல்படுகின்றன.

“சமூகத்திலும் வேலைத்தளத்திலும் குடும்பத்திலும் நிலவும் பெண் ஒடுக்குமுறை மற்றும் சுரண்டல் பற்றிய பெண்மையின் உணர்வு நிலைகளாகும். இந்நிலையை மாற்றுவதற்குப் பெண்களும் ஆண்களும் எடுக்கும் உணர்வுப்பூர்வமான நடவடிக்கையாகும்”[11] என பெண்ணியத்திற்கு விளக்கம் தருகிறார் பிரேமா.

“பெண்ணியம் எல்லாப் பெண்களையும் அரசியல் மற்றும் பிற அடிமைத்தளத்திலிருந்து விடுவித்தல் என்ற கொள்கை உடையது. இளம்பெண் தொழிலில் ஈடுபட்டுள்ள பெண், ஏழைப்பெண், தன்னினச் சேர்க்கையுடைய பெண்கள். மூதாட்டியர் மற்றும் பொருளாதார நிலையிலும் மரபு மணமுறை துன்புறும் பெண் இவர்கள் அனைவருக்கும் விடுதலை பெற்றுத் தருவதே இதன் இலக்காகும்”[12]. மேலும் பெண்ணை ஓர் உயிர் எனச் சமூகம் அங்கீகரித்து அவளுக்கு ஆணுக்குச் சமமான உரிமையும் சுதந்திரமும் கொடுக்கத் தூண்டும் கொள்கை பெண்ணியம். பெண்ணின் வரலாறு மத, பொருளாதார, பண்பாட்டு ரீதியான ஒடுக்குமுறையின் பல்வேறு பரிணாமங்கள். அதற்கான தீர்வுகள் அதை அடைவதற்கான வழிமுறைகள் இவற்றை ஆராய்வது”[13] என்பார். இரா. பிரேமா. “பெண்நிலைவாதம் எனப்படும் பெண் விடுதலை இயக்கத்தை வழிநடத்திச் செல்லும் தத்துவமும் வாழ்க்கை முறையுமாகும்”[14] என்கிறார் அபர்ணா மகந்தா.

மேற்கூறிய விளக்கங்களை நோக்கும்போது சமுதாயத்தில் அனைத்துப் படிநிலைகளிலும் பெண்விடுதலையைக் கோருவதே பெண்ணியத்தில் அடிப்படையக் கருத்தாகும் எனலாம். இது பெண்களை நவீனமயமாக்கும் சிந்தனையின் எழுச்சியாகும். பெண்ணுக்கு எதிராக எழும் எந்த ஆயுதத்தையும் முறியடித்து அவளுக்குத் தனித்துவம் உண்டு என்பதை உணர்த்துவமாகும்.

பெண்ணியம், பெண் விடுதலை, பெண் சுதந்திரதம், பெண்நிலைவாதம் போன்ற சொற்களின் கருத்துகள் ஆண்களுக்குகெதிராக ஒலிக்கும் அபாயச்சங்கு என்றே எண்ணுகின்றனர். ஆண் தன் ஆதிக்கச் சக்தியால் அடிமைப்படுத்திப் பெண்ணை மீட்டு, அவளுக்குரிய உரிமையைப் பெற்றுத் தந்து, சமுதாய மாற்றத்திற்கான விழிப்புணர்வைப் பெறச் செய்வது பெண்ணியம் ஆகும். இத்தகைய சமூக மாற்றத்தைப் பெற பெண்களும் ஆண்களும் சேர்ந்து போராடுவதே பெண்ணியம். பெண்களுக்கு மட்டும் சமுத்துவம் வேண்டும் என்று கேட்கவில்லை. சமத்துவமுள்ள சமுதாயம் உருவாக வேண்டும் என்பதே பெண்ணியத்தின் அணுகுமுறை. அதில் ஆணும் - பெண்ணும் பாலினப்பாகுப்பாட்டில் மனிதர்களாக மதிக்கப்பட வேண்டும் என்பது பெண்ணியக் கோரிக்கையாகும்.

பெண்ணிய இயக்கமானது, பெண்கள் தாமாக முடிவெடுத்து அவர்களின் விருப்பப்படி வாழ்க்கையை நடத்திச் செல்லும் ஒரு சமூகத்தை உருவாக்குவதாகும்.

பெண்கள் அனுபவிக்கும் எல்லாவிதமான அடக்குமுறைகளையும் எதிர்ப்பது மட்டுமின்றி, பெண்களின் மேம்பாட்டிற்குரிய வழிமுறைகளையும் செயற்படுத்துகிறது. இந்த அடக்குமுறைகள் பெண்ணினத்திற்குப் பொதுவாக இருப்பதால் இந்நிலை மாறுவதற்குப் பெண்கள் பாடுபட வேண்டும். அப்பொழுதுதான் வெற்றி கிடைக்கும்.

ஒரு சமுதாயத்தின் வரலாறு, பண்பாடு, இவற்றைப் பற்றிய உணர்வு, நோக்கு, செயல்பாடுகளைப் பொறுத்துப் பெண்ணியம் பற்றிய விளக்கம் மாறுபடும். 17-ஆம் நூற்றாண்டில் தோன்றிய பெண்ணியம் குறித்த கருத்தாக்கங்கள் 20-ஆம் நூற்றாண்டில் மேலும், பல குறிக்கோளோடு மாறுதலுக்குட்பட்டது. மனித வரலாற்றில் ஆணாதிக்கச் சமூகச் சூழல் உருவாவதற்குச் சமயங்களும் அவை வகுத்துக் காட்டும் சமூக உறவுநிலை தொடர்பான விதிமுறைகளும் கூட சில நேரங்களில் காரணமாக அமைந்துவிடுவதை மறுத்துரைக்க இயலாது. இந்தியாவில் 18-ஆம் நூற்றாண்டில் நிலவிய பெண்ணியமான இந்து பத்தினித் தர்மம் 19-ஆம் நூற்றாண்டில் வலுவிழந்தது. ஆனால் 20-ஆம் நூற்றாண்டு தொடங்கிய பெண்ணியக் கருத்துக்கள் புரட்சிகரமான மாறுதல்களைக் கொண்டு வளர்ச்சியடைந்து வருகின்றன.

அமெரிக்க நாட்டினரின் பெண்ணியச் சிந்தனை இந்திய நாட்டினரின் பெண்ணியச் சிந்தனையைப் போன்றோ, பார்ப்பனர்களின் பெண்ணியச் சிந்தனை போன்றோ, இருப்பதில்லை. ஓரினத்து மக்களிடையேயும் கூட அவர்களுடைய கல்வி, விழிப்புணர்ச்சி, ஆண், பெண் பால்வேறுபாடு, ஆணாதிக்கம். இவற்றைப் பொறுத்து மாறுபடும். சுரண்டலற்ற சமுதாயத்தைப் படைப்பது பெண்ணியத்தின் நோக்கமாகும். தெற்காசிய நாடுகள் பெண்ணியம் என்பதற்கு “பெண்கள் சமூகத்திலும், அலுவலங்களிலும், பணிகளிலும் வீட்டினுள்ளேயும், நசுக்கப்பட்டன பற்றிய விழிப்புணர்ச்சியும், அந்நிலையை மாற்றியமைக்க ஆண்களும், பெண்களும் ஒருவரையொருவர் புரிந்து கொண்டு செயல்படும் முயற்சிகளும்”[15] என்னும் கௌரியின் விளக்கத்தை ஏற்றுக் கொண்டுள்ளன. இக்கருத்தின்படி பாலியல் அடிப்படையில் சமூகத்திலிருக்கும் ஏற்றத்தாழ்வுகளையும், ஆணாதிக்கத்தையும் ஆண் தலைமையையும் அறிந்து அந்நிலையை மாற்ற முயல்கின்றவர்கள் பெண்ணியவாதிகள் ஆகின்றனர்.

ஆணாதிக்கச் சமூக அமைப்பு பெண்களை இல்லத்திற்குள் இறுத்தி அவர்களது சமூக இயங்குவெளியைச் சுருக்கியது. இதனை அடிபப்டையாகக்

கொண்ட ஆண்கள் சமூக அமைப்பில் தனது நிலையை மைய நிலைக்குக் கொண்டு சென்றனர். இங்குப் பெண்களை விளிம்பு நிலையான ஓரத்து வாழ் நிலைக்கு உட்படுத்தினார்கள். அதிகாரம் செலுத்த முயன்ற ஆண்கள் சமூக அமைப்பில் கட்டுப்பாடுகளை எல்லாம் பெண்களுக்கும், உரிமைகளை எல்லாம் ஆணிற்கும் வரையறுத்துக் கொண்டனர். இதனால் பெண்களின் புழங்கு தளங்களைக் குறுக்கினார்கள். இந்நிலையிலிருந்து பெண்களை மீட்டு, அவர்களால் எல்லா செயல்களையும் செய்ய முடியும் என நிரூபித்தல், பெண்களால் தனித்து இயங்க முடியும் என்ற எண்ணத்தைத் தூண்டுதல், பெண்கள் எதற்கும் சளைத்தவள் அலல் என வலியுறுத்துதல். கட்டுப்பாடுகள் என்பது பெண்களுக்கு இடப்பட்ட விலங்கு. அதை உடைத்தெறிய வேண்டும் எனக் கூறுதல், இதுபோன்று இன்னும் பல அடிப்படைத் தேவைகளைப் பெண்களை மையப்படுத்தி பெறுவதற்கான முயற்சியே பெண்ணியம் என அமைப்பாகும். சமூக விழிப்புணர்வு கொண்ட படைப்பை உருவாக்க படைப்பாளர்கள் மத்தியில் பெண்ணியம் என்னும் கருத்தாக்கமும் ஒரு முக்கியப் பாடுகளமாக அமையப் பெற்றது. இதற்குப் படைப்பாளர் தோப்பில் முகமது மீரான் விதிவிலக்கல்ல.

### 3.4 இலக்கியங்கள் கூறும் பெண்கள் நிலை

தற்கால இலக்கிய வகைகளுள் ஒன்று சிறுகதை. சிறுகதைகளில் பெண்ணியச் சிந்தனை எவ்வாறு இடம் பெற்றுள்ளது என்பதை ஆராயும் முன் அதற்கு முன்னர் உள்ள காலகட்டங்களில் தோன்றிய இலக்கியங்களில் பெண்கள் எங்ஙனம் இடம் பெற்றுள்ளனர் என்பதை ஆராய்வது இன்றியமையாததாகிறது.

“இலக்கியம்” என்பது மனிதன் சமயத்தோடு கொள்கின்ற உறவை நிச்சயப்படுத்துகின்ற உணர்ச்சிகளின் பரிமாற்றம்”[16] என்று இந்திரா பார்த்சாரதி கூறுகின்றார். சங்ககாலம் முதல் தற்காலம் வரையுள்ள அனைத்து இலக்கியங்களிலும் இடம் பெற்றிருக்கின்றனர். சங்ககால இலக்கியங்களில் பெண்கள் சிறந்த தாயாகவும், காதலியாகவும் இடம் பெற்றிருக்கின்றனர். குடும்ப வேலைகளையும், கணவனுக்குரிய பணிகளையும் குழந்தைகள் வளர்ப்பதையும் பெண்கள் செய்துள்ளனர் என்பதைப் புறநானூற்றுப் பாடல் அடிகள் மெய்ப்பிக்கின்றன. எடுத்துக்காட்டாக, ‘ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே’ என்று

கூறுவதன் மூலம் பெண்ணானவள் குழந்தையைப் பெற்றுக் கொடுப்பதைத் தன் கடனாகச் கொண்டிருக்க வேண்டும் என்பது விளக்கப்படுகின்றது.

சங்க காலத்தில் பெண்கள் கல்வியிலும், அரசியலிலும், வீரத்திலும் சிறந்து விளங்கியுள்ளனர். ஔவையார், காக்கைப்பாடினியார், வெண்ணியக் குயத்தியார், பெருங்கோப்பெண்டு, நச்செள்ளையார், ஒக்கூர் மாசாத்தியார், மாறோக்கத்து நப்பசலையார் போன்ற பெண்பாற் புலவர்களின் புலமைத்திறம் போற்றுதற்கு உரியதாக விளங்குகின்றன. மன்னனின் கொடைச் சிறப்பையும் போரில் வெற்றி பெற்ற மன்னனின் வீரசிறப்பையும் இவர்கள் புகழ்ந்து பாடியுள்ளனர்.

சங்க இலக்கியங்கள் வழி பெண்கள் வீரத்திலும் சிறந்து விளங்கியதை அறிய முடிகின்றது. போரில் இறந்து கிடக்கின்ற தன் மகனின் சடலத்தைப் பார்த்து மகிழ்ச்சி அடைகின்ற வீரப் பெண்டீரை

> "வால்நரைக் கூந்தல் முதியோள் சிறுவன்
> களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை
> ஈன்ற ஞான்றினும் பெரிதே கண்ணீர்
> நோன்கழை துயல்வரும் வெதிரத்து
> வான் பெயத்தூங்கிய சிதறினும் பலவே"[17].

என்றும்

> ..... சிதைந்து வேறாகிய
> படுமகன் இடக்கை காணூஉ
> ஈன்ற ஞான்றினும் உவந்தனளே"[18].

என்றும் புறநானூற்றுப் பாடலடிகள் மூலம் அறிய முடிகின்றது. இவ்விலக்கியங்களில் கணவனை இழந்த கைம்பெண்டிர்க்குச் சமூகம் இழைத்த கொடுமைகளும் காணப்படுகின்றன.

சமணமும் பௌத்தமும் உலக இன்பத்தையும், பெண்ணின்பத்தையும் வெறுத்தன. பௌத்தம், சமணம் ஆகிய சமயங்கள் பெண்களை சமயத்திற்குத் தடை எனக் கருதின. "பிறப்பாலே, மகளிர் இழிவுடையவர்கள் மாசுடையவர்கள்[19]

என்று பறைசாற்றி மகளிர் வாழ்வை இருளடையச் செய்தனர். சமணர் என்று மயிலை சீனிவேங்கடசாமி சமணமும் தமிழும் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். சைவ, வைண, இசுலாம், சமய காலத்தில் இறைவன் புகழ் பரப்புவதிலும், இறைவனைப் பாடுவதிலும், சமயத்தைப் பரப்புவதிலும் ஆண்களுக்கு நிகராகவே பெண்களும் தம் பங்களிப்பை அளித்துள்ளனர் என்பது ஈண்டு நோக்கத்தக்கது. அக்காலத்திலேயே பெண்கள் தமது விருப்பப்படி எந்தச் செயலையும் செய்யக்கூடாது. அவள் ஆண்களைச் சார்ந்து வாழும் ஒட்டுண்ணியாக பாவிக்கப்படடனர். சங்ககாலப் பெண் சமூக விழாக்களிலும், நிகழ்ச்சிகளிலும் சுதந்திரமாகப் பங்கேற்றன. என்றாலும் அவர்களுக்கு முழுச் சுதந்திரம் இருந்தது என்று உறுதியாகக் கூற முடியவில்லை. இந்த இலக்கியத்தின் மூலம் ‘ஒருவனுக்கு ஒருத்தி’ என்ற கோட்பாடு இருந்ததை அறியலாம். கற்பு தலையாயக் கொள்கை எனக் கருதப்பட்டாலும் பரத்தையர் அமைப்பும் இக்காலச் சமூகத்திலும் இருந்தது. சங்க காலத்தில் களவு வாழ்க்கை கட்டாயமாக திருமணத்தில் முடிய வேண்டும் என்ற நிலை இருந்ததைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறிய முடிகின்றது.

சங்க மருவிய கால இலக்கியங்களிலும், காப்பியங்களிலும், பெண்களுக்கு மட்டுமே கற்பு வலியுறுத்தப்படுகின்றது. சிலப்பாதிகாரத்தில்

> “இன்துணை மகளிர்க்கு இன்றியமையாக்
> கற்புக் கடம் பூண்ட இத்தெய்வம் அல்லது
> பொற்புடைத் தெய்வம் யாம் கண்டிலமால்”[20].

என்று கண்ணகியின் கற்பு கவுந்தியடிகள் மூலமும், இதனையே மணிமேகலை “மாபெரும் பத்தினி மகள் மணிமேகலை”[21] என்று மணிமேகலையின் கற்பு மூலமும் போற்றப்படுகின்றது. மேலம் கண்ணகியின் கற்புத்திறத்தைச் செங்குட்டுவனும் அவனுடைய தேவியும்

> “மாபெரும் பத்தினிக் கடவுள்”

என்றும்,

பத்தினிக் கடவுளைப் பரசல் வேண்டும்”[22] என்றும் தெய்வநிலையில் வைத்துப் போற்றுகின்றன.

சீவகசிந்தாமணியில் காப்பியத் தலைவன் சீவகன் காந்தவேதத்தை, நாமகள், குணமாலை, பதுமை, கேமசரி, கணகமாலை, விமலை, சூரமஞ்சரி, இலக்கணை என்னும் எண்மரை மணந்து கொண்டு பின் துறவு மேற்கொள்கின்றான். இதன் மூலம் ஆண்களுக்குக் கற்பு வலியுறுத்தப்படவில்ல என்பதை அறிய முடிகின்றது. பரத்தையர் அமைப்பும் அக்காலச் சமூகத்தில் ஏற்றுக் கொள்ள கூடியதாக இருந்த அவ்வமைப்பைக் ‘கூடா ஒழுக்கம்’ என்று குறிப்பிட்டுள்ளது. இக்கூடா ஒழுக்கம் வாழ்வியலில் மக்களால், குறிப்பாகப் பெண்களால் ஏற்றுக் கொள்ள முடியாத ஒன்றாகவே இருந்தது. திருக்குறளில் ‘கூடா ஒழுக்கம்’ என்று ஒரு அதிகாரம் உள்ளது. கூடா ஒழுக்கத்தின் வழி கணவன் வாழவு நெறிதவறினாலும் அன்றைய பெண்கள் கண்ட தெய்வம் என்றெண்ணிக் கணவனுக்கு அடங்கி வீட்டிற்குள்ளே ஒடுங்கி வாழ்ந்தனர்.

சிற்றிலக்கியங்கள் வழி ஆணின் வீரத்தைக் காட்ட பெண்களை ஒரு கருவியாக்கி இழிவுபடுத்தியுள்ளனர். உலா வரும் ஆடவனைக் கண்டு ஏழுபருவப் பெண்களும் மயக்கமுறுவதாக இவ்விலக்கியம் குறிப்பிடுவதை,

> “ஒருகை வளைபூண்ட பெண்கள் ஒருகைவளை பூணமறந்து
> ஒருவார் நகைப்பவரை நாடுவார் கவிழ்வார்”[23].

என்ற பாடல் மூலம் அறிய முடிகின்றது. இவ்வாறு சிற்றிலக்கியங்களில் உலா வரும் ஆடவனைக் கண்டு மயக்கமுறுவதாகவும், தன் சுயநினைவு இழப்பதாகவும் பெண்கள் இடம் பெறுகின்றனர். பெண்களின் பிற தலையாயப் பண்புகள் இங்குச் சுட்டப் பெறவில்லை.

தமிழில் கிடைத்த முதல் இலக்கண நூலான தொல்காப்பியம் மொழிக்கும் வாழ்க்கைக்கும் இலக்கணம் இயம்புகின்ற நூலாக விளங்குகிறது. இவற்றிலும் ஆணுக்கு வன்மையும், பெண்ணுக்கு மென்மையும் கற்பிக்கப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

"பெருமையும் உரனும் ஆடுஉ மேன"[24]

என்று பெருமையும் வலிமையும் ஆணுக்குரிய பண்புகளாகவும்

"அச்சமும் நாணும் மடனும் முந்துறந்த
நிச்சமும் பெண்பாற்கு உரிய என்ப"[25] (தொல்.பொருள். களவி. 8)

மேலும்,

"கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும்
மெல்லியல் பொறையும், நிறையும் வல்லிதின்
விருந்து புறந்தகுதலும் 'சுற்றம் ஓம்பலும்
பிறவும் அன்ன கிழவோன் மாண்புகள்"[26] (தொல்.பொருள். கற்பு )

அச்சம், நாணம், மடம், கற்பு, ஒழுக்கம், பொறுத்துப்போதல் போன்ற குணங்கள் பெண்களிடம் எப்பொழுதும் இருக்க வேண்டிய குணங்கள் என்று கூறுகிறது. இது அறியாமை உடையவர்களாகவே பெண்களைச் சித்திரிப்பதைக் காட்டுகிறது.

தற்கால இலக்கிய வகைகளான புதினம், சிறுகதை புதுக்கவிதைகளில் பெண்களின் சித்திரிப்பு மட்டுமின்றி அவர்களின் நிலை மாற்றத்திற்கு வழிகள் பற்றிய முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. இவ்விலக்கிய வகை பெண்களின் நிலையைத் திறனாய்வோடு சமூகத்திற்குப் பறைசாற்றுகின்றன. இதனால் "பெண்களின் கல்வி, திருமணம், சமூகத்தில் பெற வேண்டிய உரிமை போன்றவை முன்னேற்றம் பெறுகின்றன. இவ்வாறு காலந்தோறும் தோன்றும் இலக்கிய வகைகளில் பெண்கள் பாடுபொருளாக அமைந்துள்ளனர்.

## 3.5 இசுலாமும் பெண்கள் நிலையும்

இசுலாமியக் கண்ணோட்டத்தில் ஆணும் - பெண்ணும் சமம். மனித சமூகத்தினராகத் திகழும் ஆண்கள் பெண்கள் என்ற இருபாலருக்குச் சட்ட விதிமுறைகளைச் சமயங்கள் வகுத்துக் கொடுக்கின்றன. இசுலாமிய சமயத்தில் பெண்கள் குறித்த செய்திகள் விரிவாக 'அந்நிஸா' என்ற தலைப்பில் திருக்குர்ஆனின் நான்காவது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ளன. இசுலாமியர் பார்வையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் உடல்கூறு ரீதியாக வேறுபாடுகள் உள்ளன

என்பது மறுக்க முடியாத உண்மை. இவ்வேறுபாடுகளினால் ஆணும் பெண்ணும் பணிபுரியும் துறையும், இடமும் மாறுபடும். அவரவரின் பணியைச் செவ்வனே நிறைவேற்றுவதன் மூலம் ஒரு சாராரின் குறையை மற்றவர் நிறைவு செய்யும் நிலையும் வாய்ப்பும் உருவாகிறது.

இசுலாம் சமயத்தில் ஆண்களுக்கும் பெண்களுக்கும் எந்தவிதமான பாகுபாட்டையும் ஏற்படுத்தவில்லை. திருக்குர்ஆனின் அத்தியாயம் அந்நிஸாவின் முதல் வசனத்திலேயே இது தெளிவாக்கப்பட்டுள்ளது.

“நல்ல செயலைச் செய்தவர் - அவர் ஆணாக இருந்தாலும் சரி பெண்ணாக இருந்தாலும் சரியே. இறை நம்பிக்கை கொண்டவராக இருந்தால் அவர் தூய்மையான வாழ்க்கையை வாழச் செய்வோம். அவர்கள் செய்த சிறந்த செயல்களுக்கு ஏற்ப நிறைவான கூலியை மறுமையில் அவர்களுக்கு வழங்குவோம்”[27] என்று பெண்ணின் உயர்வுப் பற்றி அல்குர்ஆனில் கூறப்பட்டுள்ளது. ஒழுக்கக்கூறு ஆகட்டும்; ஆன்மீக நிகழ்வுகளாகட்டும் இரண்டிலும் ஆண்களுக்கும், பெண்களுக்கும் இடையே இசுலாம் எந்தவிதமான பாகுபாட்டையும் ஏற்படுத்தவில்லை என்பதை இவ்வசனங்கள் ஒருசேர நின்று நமக்கு உணர்த்துகின்றன. அவ்விதமே அவர்கள் செய்தாக வேண்டிய கடமைகளில் அவர்கள் மீது சுமத்தப்பட்டுள்ள பொறுப்புகளில் இசுலாம் எவ்விதப் பாகுபாட்டையும் வைக்கவில்லை. இறைவனை வணங்குவதும் (தொழுவதும்) நோன்பு நோற்பதும், ஜகாத் கொடுப்பதும் ஆண்களுக்குக் கடமையாக உள்ளதைப் போலவே பெண்களுக்கும் கடமையாக உள்ளது. இருப்பினும் பெண்களின் மாதவிடாய் காலங்களில் பெண்கள் தொழத் தேவையில்லை. அத்தொழுகைகள் பெண்கள் மீது கடமையாவதில்லை. அவ்வாறே மாதவிடாய், குழந்தைப்பேறு காலங்களிலும் ஆன்மீகக் கடமைகளில் இருந்து பெண்கள் விலக்கி வைக்கப்பட்டுள்ளனர்.

இசுலாம், சமூகத்தில் பெண்களுக்கு ஆன்மீக உரிமைகள், பொருளாதார உரிமைகள், சமூக உரிமைகள், கல்வி உரிமைகள், சட்ட உரிமைகள், அரசியல் உரிமைகள் என பல உரிமைகளை வழங்கியுள்ளது. சான்றாக நபி அவர்களின் மனைவி கதிஜா நாயகி அவர்கள் மக்கா மாநகரில் புகழ்பெற்ற வியாபாரப் பெண்மணியாக விளங்கினார்கள் என்று வரலாற்றுச் சான்றுகளில் கூறப்பட்டுள்ளது. குடும்பத்தில் பெண்ணுக்குரிய பொருளாதாரப் பாதுகாப்பை இசுலாம் வழங்கியுள்ளது.

மேலும் பெண் குழந்தையின் சிறப்பைப் பற்றி ஆபூதாவூர் என்னும் நூலில் கூறியதாக அப்துஸ் சமது கூறியுள்ளார்

பெற்ற பெண் குழந்தையை உயிரோடு புதைக்காமல், இழிவாக நடத்தாமல், ஆண் குழந்தைக்கு அவளைவிடச் சலுகைக் காட்டாமல் இருக்கும் மனிதனுக்கும் அல்லாஹ் சுவர்க்கத்தைப் பரிசாக வழங்குகிறான்"[28]. மேலும் "பெண் மக்கள் மூலம் அல்லாஹ்வினால் சோதிக்கப்படும் ஒரு மனிதன் (தான் பெற்ற) அப்பெண்களை நல்ல முறையில் நடத்தினால் அவனுடைய அச்செயல்கள் மூலம் அவன் நரக நெருப்பிலிருந்து காப்பாற்றப்படுவான்"[29] என்கிறார். சமூக உரிமைகளை முன்வைத்து நோக்கினால், இசுலாமில் ஆணுக்கும், பெண்ணுக்கும் எந்தவகையான பாகுபாடும் வேறுபாடும் கிடையாது. ஆனால் ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்களுக்கான சமஉரிமையை அளிக்க முன்வரவில்லை. பெண்களைத் தங்களின் வாழ்நாள் அடிமைகளாகவே நடத்திக் கொண்டிருக்கின்றனர் என்பதை "கணவன் தன்னை நோக்கும் போது மகிழ்ச்சியூட்டுபவள். அவனுக்குப் பணிவிடை செய்யும்போது அவன் விருப்பத்திற்கொப்ப நடந்து கொள்பவள், தன்னையும் தன் பொருளையும் அவனுக்கு அர்ப்பணித்துவிடுபவள் யாரோ அவளே சிறந்த பெண்மணி"[30] என்று நபி கூறியதாக அபூஹீரைரா (ரழி) அறிவித்துள்ளார்.

இறைவனால் படைக்கப்பட்ட பெண்களின் உடலமைப்பு அவர்களை ஆண்கள் அடக்கி ஒடுக்குவதற்குக் காரணமாக அமைந்துள்ளது. மேலும் பொறுமையின் இருப்பிடம், தியாகத்தின் பிறப்பிடம் இல்லாள், கற்புக்கரசி முதலான அழுகுமொழிகளால் பெண்களை அடையாளம் சூட்டிய ஆண் சமூகம்; தாம் விரும்பும் வகையில் பெண்களைச் சுதந்திரமாக வாழவிடாமல் அடக்கி வைத்தது. சமூகத்தின் அடித்தள அமைப்பில் பெண்களின் செயல்பாடுகள் சிறப்பிற்குரியனவாக இருந்தபோதும் சமூக அமைப்பில் அவளுக்குக் கொடுத்துள்ள இடம் அடிமைத்தனமாகும். சமூகத்தின் அடித்தளமான குடும்பத்தை நிர்வகிப்பது, குழந்தைகளை நன்முறையில் வளர்ப்பது போன்ற முக்கிய பொறுப்புகளைச் செய்பவர்கள் பெண்கள் ஆவார்கள். சமூக வளர்ச்சிக்குப் பெண்களின் உறுதுணையும், ஒத்துழைப்பும் முக்கியக் காரணங்களாக இருக்கின்றன. சமூகத்தையும் அதன் செயல்பாடுகளையும் ஆரம்பம் முதல் இன்று வரை ஆணாதிக்கச் சமூகத்தால் விதிக்கப்பட்ட கட்டுப்பாட்டிலிருந்தும்,

அடிமைத்தளத்திலிருந்தும் பெண் சமூகத்தை விடுவிப்பதற்காகச் சமூகச் சீர்திருத்தவாதிகள் போராடி வருகின்றனர். அவர்களின் போராட்டத்தின் பயனாக இன்றைய பெண் சமூகம் முழுச்சுதந்திரம் பெறவில்லை என்றாலும் சிறப்பான இடத்தைப் பெற்று வருகின்றது. இதன் பயனாகத் தோன்றிய கருத்தாக்கமே பெண்ணியம்.

## 3.6 இசுலாமிய வேதங்களுக்கு முற்பட்ட காலத்துப் பெண்கள்

வேதங்களுக்கு முற்பட்ட காலத்துச் சமுதாயத்தின் பெண்களின் உரிமைகள், கடமைகள் குறித்து இங்குச் சுட்டிக் காட்டுவது இன்றியமையாதது. ஏனெனில் திருக்குர்ஆன் அருளப்பட்டபின் இசுலாம் எந்த அளவிற்குப் பெண்கள் மேம்பாட்டிற்கு முயற்சிகள் மேற்கொண்டது என்ற உண்மைத்தன்மையை அப்போதுதான் உணர்ந்து கொள்ள முடியும்.

நபிபெருமானார் (ஸல்) அவர்கள் பிறந்தபோது அரபு நாட்டில் அஞ்ஞானம் மிகுந்திருந்தது. மதக் கொள்கைகளும், சமூக வாழ்வும் மூட நம்பிக்கைகளையே அடித்தளமாகக் கொண்டிருந்தன. பெண்களின் நிலை அன்றைய சூழலில் மிகப் பரிதாபகரமானதாக இருந்தது. பெண்களுக்குத் தனி உரிமை எதுமின்றி ஆண்களுக்குச் சுகம் தரும் போகப் பொருட்களாகக் கருதப்பட்டார்கள். அவர்கள் பிறப்பு முதல் இறப்பு வரை அடிமையாகவே வாழ்ந்தார்கள். ஒரு பெண் குழந்தைப் பருவத்தில் தந்தையையும், திருமணத்திற்குப் பின் கணவனையும், முதிய வயதில் தன் மகனையும் சார்ந்திருந்து அவர்களுக்குக் கட்டுப்பட்டு வெளியுலகம் தெரியாது. சுயமான விருப்பு வெறுப்புகளற்று சுதந்திரம் குறித்துத் தெரியாதவர்களாகவே வாழ்ந்து மடிந்தார்கள்.

ஓர் ஆடவன் தன் விருப்பம் போல் எத்தனை பெண்களை வேண்டுமானாலும் மணமுடித்துக் கொள்ளலாம். விருப்பம் இல்லாதபோதும் எவ்வித காரணமும் கூறாது திருமணபந்தத்திலிருந்து விலக்கிவிடவும் செய்யலாம். மொத்தத்தில் அடிமையாக நடத்தப்பட் பெண், திருமணம் தொடர்பாகவும் எவ்வித உரிமையும் பெற்றிருக்கவில்லை. தகப்பனுடைய மறுதார மனைவியைத் தகப்பனுக்கும் பின் மகன் மணந்தாக வேண்டிய சூழல் இருந்தது. தந்தையுடன் பிறந்த சகோதரியையும் மணந்து கொள்ளும் வழக்கமும் இருந்து வந்தது. திருமண பந்தத்தை முறித்துக்

கொள்ளும் உரிமை ஆணுக்கு இருந்தது. விதவைகள் மறுமணம் புரிய அனுமதியில்லை. ஆனால் செல்வந்தர்களுக்கு உடமைப் பொருளாக்கப்பட்டது.

எல்லாவற்றையும் விடப் பெரிய கொடுமை, பிறந்த குழந்தை பெண்ணாக இருந்தால் உயிருடன் புதைந்து விட்டனர். போர்க்களத்தில் பிடித்து வரும் பெண்களையும், குழந்தைகளையும் சிரச்சேதம் செய்தனர். ஆற்றில் புதுவெள்ளம் வரும்போது பருவம் எய்தவிருக்கும் பெண்ணை அலங்கரித்து அவ்வாற்றில் எறிந்துவிட்டால் பல்லாண்டு காலம்வரை ஆறு வற்றாது என்று நம்பினர். மது, பெண், சூதாட்டம் என்பன அக்கால ஆண்களின் அன்றாடத் தேவைகளாக இருந்தன. முகம்மது நபி (ஸல்) அவர்கள் காலத்தில் பெண்களுக்கான தடைகளை நீக்கி அவர்களுக்கு முழு உரிமையை அளித்தார். திருக்குர்ஆன் அருளப்பட்ட பிறகே பெண்கள் மனித உயிர்களாகக் கருதப்படலாயினர்.

### 3.7 தோப்பில் முகமது மீரானின் பெண் நிலைக் குறித்தச் சிந்தனைகள்

தமிழிப்புனைகதையானது ஒரு காலகட்டத்தில் அடித்தள மக்களின் வாழ்வியல் நிகழ்வுகளை, நடப்பியல் சார்ந்து பதிவு செய்து வந்தது. இவற்றிற்குச் சூழல்களும் படைப்பாளர்களின் உற்றுநோக்கலான பார்வையுமே காரணம் ஆகும். இப்போக்கிற்குப் படைப்பாளர்கள் முக்கியக் காரணமாக இருந்தனர். இவர்கள் தங்களைச் சமூகத்திடமிருந்து படைப்பாளன் என்ற முறையில் தனிமைப்படுத்திக் கொள்ளாது மக்களோடு மக்களாக வாழ்ந்து படைப்பாளர்களாக உருவாக்கம் பெற்றவர்கள். இவ்வுருவாக்கத்தோடு புனைகதைத் துறையில் நுழைந்தவர்கள் புதுமைப்பித்தன், சி.சு. செல்லப்பா, இந்திரா பார்த்தசாரதி, ஜெயகாந்தன், போன்ற பலராவர். இவர்களைப் போன்று புனைகதைத் துறைக்கு அடியெடுத்து வைத்தவர் தோப்பில் முகமது மீரான் ஆவார்.

இவர் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தின் இலக்கியக் கோட்பாடுகளை உள்வாங்கிக் கொண்டு உழைக்கும் மக்களின் வாழ்க்கைப் போராட்டங்களைப் பல்வேறு கோணங்களில் தம் படைப்பின் மூலம் படம் பிடித்துக் காட்டியிருக்கின்றார். இவரது படைப்பில் பெண்களை முக்கியப்படுத்தியிருக்கின்ற போக்கைக் காண முடிகிறது.

“பெண்ணினத்தை இழிவுபடுத்தும் எல்லாவிதமான பிற்போக்குத் தனங்களையும் சாடுதல் - மாதர் விடுதலைக்குப் பாடுபடுதல்”[31] என்றக் கருத்து பெண்மை பற்றி இவர் தனியாகக் கோட்பாட்டினைக் கொண்டிருக்கின்றார் என்பதைக் காட்டுகின்றது. பெண், ஆண் வர்க்கத்தினைத் தனக்குள் ஐக்கியப்படுத்திக் கொண்டு வழி நடத்திச் செல்பவள் ஆவாள். இது ஓர் அறிவியல்பூர்வமான உண்மை. மனித சமூகம் பெண்களிலிருந்து உற்பத்தியாகிறது அல்லது பிறப்பெடுக்கிறது. இந்த உற்பத்தியே தாய் வழச் சமூக உறவை நிர்ணயிக்கிறது. இந்த உறவில் பெண் முக்கியப்படுத்தப்படுகிறாள் என்பது மறுப்பதற்கில்லை. தோப்பில் முகமது மீரானின் படைப்புக்களில் பெண் முக்கியப்படுத்தப்படுகிறாள். இது இவரது தனிப்பட்ட கருத்தாக இருந்தபோதும் காலம் காலமாகப் பெண் சமூகத்திற்கு இழைக்கப்பட்டு வந்த கொடுமைகளும் இவரைப் பாதித்துள்ளது. இந்தப் பாதிப்பின் விளைவாகவே இவர் தம் படைப்புக்களில் பெண்களை முக்கியப்படுத்தியிருப்பதாகக் கூறுகிறார்.

மணவாழ்வு, குடும்பம், கற்புநிலை, ஆணின் தனித்தன்மை ஆகியவற்றைக் கூறி ஆண்மகன் பெண்ணைத் தனக்கு அடிமைப்படுத்தியிருக்கிறான். அவளைத் தன் இன்ப நுகர்வுப் பொருளாக, உடைமைப் பொருளகக் கொண்டிருக்கின்றான். பாலுறவு நிலையில் பெண்ணின் மீது செயற்கைப் பண்புகளைத் திணித்து அவளை அடக்கியாண்டும், தன் ஆதிக்கத்தைச் செலுத்தியும் வந்திருப்பதைக் காணமுடிகின்றது.

“ஆண் சமூகம் பெண் பிறவியையே இழிபிறவியாகக் கருதியது மட்டுமல்லாது ஓர் அஃறிணைப் பொருளாகவே கருதி நடத்தியிருக்கிறது. இதன் அடிப்படையிலேயே தொடக்கக் காலத்தில் பெண்களுக்கு வீடுபேறு இல்லை என்று சுட்டப்படுகிறது”[32]. இந்த நிலையிலிருந்து பெண்களை விடுவிக்கப் போராட்டங்களில் ஈடுபட்டனர் பலர். பெண்களின் பிரச்சினைகளைப் படைப்புக்களில் காட்டி அதன் மூலம் பெண்களின் நிலையைச் சமூகத்திற்குச் சுட்டிக்காட்டி அவர்களை விடுவிக்கும் வகையில் படைப்பிலக்கியத் துறையில் முனைப்புடன் ஈடுபட்ட படைப்பாளர்களுள் தோப்பில் முகமது மீரானும் ஒருவர். இவர்தம் படைப்புகளில் பெண்களின் செயல்பாடுகள் குறித்து வெளிப்படுத்தியிருக்கின்ற கருத்துக்களைக் காணலாம்.

“உறவுகளால் சூழப்படுவதே மனிதவாழ்வு. உறவுகள் இல்லாதவன் மனிதனே அல்ல! பக்திமையாயினும் துறவாயினும் உறவுகள் இல்லாமல் இறை மீது

கொள்ளும் தொடர்பும் உறவேயன்றோ? இந்நிலையில் இல்லற வாழ்வில் கணவனால் சூழப்படும் பெண்ணும் உறவுகளின் வளையங்கள் சூழல்வதுடன் சில நேரங்களில் அது அவள் கழுத்தை இறுக்கும் கயிறாகவே அமைந்து விடுகின்றது”[33]. தம் படைப்புகளில் உறவுகளினால் பெண்களுக்கு ஏற்படும் சிக்கல்களை அழகுற மொழிகிறார். கொடுமைகளை எதிர்த்தல், திருமணம் செய்து கொள்ளாத பெண்களின் சமுதாய மதிப்பு, வரதட்சணை, பெண்ணின் உணர்வுகள், பெற்றோர்களின் மனநிலை போன்ற பெண்ணியச் சிந்தனைகள் தோப்பில் முகமதுமீரான் படைப்புகளில் வெளிப்பட்டு நிற்பதைக் காணமுடிகிறது.

### 3.8 திருமண வாழ்வில் பெண்கள் சந்திக்கும் சிக்கல்கள்

மனித வாழ்வில் திருமணம் என்பது ஓர் ஆணுக்கும் ஒரு பெண்ணுக்கும் இடையிலுள்ள ஒரு புனிதமான சமூக ஒப்பந்தம். “ஆணும் பெண்ணும் கூடி மகிழ்ந்து இனம் பெருக்க மக்களைப் பெறுவது என்று இருந்த நிலையில் சமுதாயம் கட்டுக்கோப்பான நாகரிக மறுமலர்ச்சி எய்தியதும் திருமணங்கள் தோன்றின”[34] என்பர். இத்திருமண நிகழ்ச்சியின் மூலம் ஆணும் பெண்ணும் இணைந்து குடும்பம் என்ற அமைப்பை ஏற்படுத்திக் கொள்கின்றனர். இது இன்றைய சமூக அமைப்பின் மையமாகத் திகழ்கின்றது. “பண்டைக் காலத்தில் மக்கட் சமூகத்தில் தனிமணம் இருந்ததில்லை என்றும் ஒரு குழுவிலுள்ள எல்லாப் பெண்களுமே அக்குழுவின் ஆண்களுக்குப் பொதுவுடைமையாக இருந்தனர்”[35] என்றும் ரிவர்ஸ் மார்கன் என்ற மானிடவியலார் கூறுகிறார். இவ்வாறு குழு மணமாக இருந்த இந்தச் சமுதாய நிலை படிப்படியாக மாறிய விதத்தை ஏங்கல்ஸ் “காட்டுமிராண்டி நிலைக்கு அறிகுறியாக குழு மணமும் அநாகரிக நிலைக்கு அறிகுறியாக இணைக்குடும்பமும் இருந்தது போல் நாகரிக நிலைக்கு அறிகுறியாக ஒருதார மணமும் இருந்தது”[36] என்று குறிப்பிடுகின்றார்.

திருமணம் என்பது கணவனையும், மனைவியையும் ஈருடல் ஒருயிராகச் செய்யும் முக்கிய நிகழ்ச்சியாகும். திருமணச் சடங்குகளும், மந்திரங்களும், பெண்ணை முழு மனித வளர்ச்சி எய்தியவளாகக் காட்டுகின்றன. இதனால் பெற்றோர்கள் தம் மக்களின் திருமணத்தை வாழ்வில் மிக முக்கியமான ஒன்றாகக் கருதுகின்றனர். குறிப்பாகத் தம் பெண்ணிற்குத் திருமணம் செய்து அவளைக் கணவன் கையில் ஒப்படைத்துத் தங்கள் பொறுப்பை நிறைவேற்றி விட வேண்டும்

என்று எண்ணுகின்றனர். "இந்து சமுதாயத்தில் ஒரு பெண் கன்னியாக இருக்க உரிமை அனுமதியில்லை. அவள் கைம் பெண்ணாக இருக்கலாம். ஆனால் சரியான வயதில் திருமணமாகவிட்டால் ஒரு வாழை மரத்தைக் கணவனாக வரித்து மணமானவளாகத் தாலி தரித்துப் பின் மரத்தை வெட்டி விட்டுக் கைம்மைக் கோலம் பூண்டு வாழ தரும சாஸ்திரம் என்று சொல்லுமளவிற்கு குரு சந்நிதானங்கள் இங்கே பெண்களின் மதிப்பைப் பெற்று இருக்கின்றன"[37] என்று ஒரு பெண்ணுக்குத் திருமணம் மிக அவசியம் என்று சமூகம் கருதுவதை இராஜம் கிருஷ்ணன் குறிப்பிடுவார்.

இசுலாம் சமயத்திலும் திருமணம் கட்டாயப்படுத்தப்பட்டுள்ளது. துறவு வாழ்க்கை வாழ்வதற்கு இசுலாம் அனுமதிப்பதில்லை. ஒவ்வொரு ஆணும் பெண்ணும் திருமணம் என்னும் உறவுக்குள் பிணைக்கப்படும்போது மட்டுமே ஒரு நல்ல ஆரோக்கியமான சமூகம் வளர்ச்சியடையும் என்றும், கணவன்-மனைவிக்கு அன்பையும், அக்கறையையும், ஒருவருக்கொருவர் ஒத்துழைப்பையும் திருமணம் வளர்த்தெடுக்கிறது. முழு மனித குல முன்னேற்றத்திற்கும் வளர்ச்சிக்குமான பாதுகாப்பு உறுதியாக இல்லாவிடில் மனிதகுலம் முடங்கிவிடும் என்று இசுலாம் திருமணம் பற்றிக் கூறுகிறது. அறியாமைக் கால அரபியச் சமூகத்தில் ஆண் பெண் இணைந்து வாழ்வதற்குப் பல்வேறு நடைமுறைகள் காணப்பட்டன. அவை அனைத்தும் இழிவான பழக்கவழக்கங்களாகவே இருந்தன. இது குறித்து அன்னை ஆயிஷா (ரழி) அவர்கள் கூறியதாவது,

திருமணங்கள் அறியாமைக் காலத்தில் நான்கு வகைகளாக இருந்தது. அவை

**முதல்வகை**

இன்று மக்களிடையே நடைமுறையிலுள்ள திருமணத்தைப் போன்றதாகும். ஒருவர் மற்றொருவரின் பொறுப்பிலுள்ள ஒரு பெண்ணையோ அல்லது அவருடைய மகளையோ பெண் பேசி மஹர் (விவாகக் கொடை) கொடுத்து மணந்து கொள்வார்.

**இரண்டாம் வகை**

ஒருவர் தம் மனைவியிடம் "நீ உன் மாதவிடாயிலிருந்து தூய்மை அடைந்தவுடன் இன்ன நபருடன் படுக்கையைப் பகிர்ந்து கொள்" என்று கூறி அனுப்பிவிடுவார். அதன்பின் அந்த மனிதர் மூலம் கர்ப்பமானது தெரியும். அவர் தன் மனைவியுடன் சேராமல் விலகி இருப்பார். அந்த மனிதர் மூலம் அவள்

கர்ப்பமாகிவிட்டாளெனத் தெரியவந்தால் தன் விருப்பத்திற்கேற்ப கணவர் அவளுடன் சேர்ந்து கொள்வார். திடகாத்திரமாக்க குழந்தை பிறக்க வேண்டுமென்ற ஆர்வத்தினாலேயே இவ்வாறு செய்து வந்தனர். இந்தத் திருமணத்திற்கு 'நிக்கா இஸ்திப்பழாவு' என்று அரபியில் பெயர் கூறப்படும்.

**மூன்றாம் வகை**

பத்துப் பேருக்குக் குறைவான ஒரு குழுவினர் ஒன்றுகூடி அவர்கள் அனைவரும் ஒரே பெண்ணுடன் உறவு கொள்வார்கள். அவள் கர்ப்பமாகி குழந்தை பிரசவித்த சில நாட்களுக்குப் பின் அவர்கள் அனைவரையும் தன்னிடம் வரச் சொல்வாள். அவர்கள் அனைவரும் எவ்வித மறுப்புமின்றி அவளிடம் ஒன்று கூடுவார்கள். அவர்களிடம் அவள் நீங்கள் செய்தது உங்களுக்குத் தெரியாதே! (இப்போது) எனக்குக் குழந்தை பிறந்துவிட்டது என்று கூறிவிட்டு அவர்களில் ஒருவரை நோக்கி இது உன் குழந்தையே என தான் விரும்பியவரின் பெயரைக் குறிப்பிடுவாள். அக்குழந்தை அந்த நபரிடம் ஒப்படைக்கப்படும். அதை அனைவரும் ஏற்றுக் கொள்வார்கள்.

**நான்காம் வகை**

பலர் ஒரு பெண்ணுடன் உடலுறவு கொள்வர். தன்னிடம் வரும் யாரையும் அவள் தடுக்கமாட்டாள். இப்பெண்கள் விலை மாதர்கள் ஆவர். இவர்கள் தங்களது வீட்டு வாசலில் கொடியை நட்டு வைத்திருப்பார்கள். பலர் அங்கு வந்து போவார்கள். இதில் ஒருத்தி கர்ப்பமாகிக் குழந்தை பெற்றால் மக்கள் ஒன்று கூடி அங்க அடையாளங்களை வைத்து குழந்தையின் தந்தையைக் கண்டறியும் முகக்குழு நிபுணர்களை அழைத்து வருவார்கள். அந்த நிபுணர்கள் ஆராய்ந்து தந்தையை முடிவு செய்து அம்மனிதன் அந்தக் குழந்தையை இணைத்து விடுவார்கள். அவனிடம் அக்குழந்தை ஒப்படைக்கப்பட்டு அவனுடைய மகன் என்று பெயர் சொல்லி அழைக்கப்படும்"[38] என்று அறியாமைக் கால ஆண், பெண் திருமணங்கள் பற்றி 'அஷ்ஷைக் ஸ.ஃபிய்யுர் ரஹ்மான் முபாரக்பூரி' குறிப்பிடுகின்றார்.

இத்திருமணங்கள் முஹம்மது (ஸல்) அவர்களின் வருகைக்குப் பின் இன்று மக்களின் வழக்கிலுள்ள இசுலாமியத் திருமணத்தைத் தவிர அறியாமைக் காலத்திருமணங்கள் அனைத்தும் தகர்த்து எறியப்பட்டுவிட்டன.

“திருமணம்தான் பெண் குழந்தையின் இலக்கு. இந்தியப் பெண்கள் திருமணுத்திற்காகவே வளர்க்கப்படுகிறாள். திருமணம் தான் பெண்ணின் வாழ்க்கை முழுமையாகிறது. ஆண் துணையின்றிப் பெண் வாழ முடியாது”[39] என்பது சமுதாயத்தின் எழுதப்படாத விதியாக உள்ளது. இவ்வாறு பெண்ணிற்குத் திருமணம் அவசியம் எனக் கருதும் சமூகச் சூழல் திருமண வாழ்க்கை தான் பெண்ணை அடிமைநிலைக்கு உள்ளாக்குகிறது. பெண்கள் வாழ்வில் நிகழும் சிக்கல்களுக்கெல்லாம் மூலக் காரணமாக திகழ்வது வரதட்சணை. ஆணாதிக்கப் போக பலதார மணம் ஆகும். ஆகையால் திருமணம் என்ற பெயரால் பெண்ணை அடக்குமுறைக்கு உள்ளார்க்கும் தந்தை வழிச் சமுதாயத்தின் முலவேர்கள் அடியோடு களையப்பட வேண்டும் என்று பெண்ணியவாதிகள் கருத்துரைக்கின்றனர்.

### 3.9 வரதட்சணை

இன்று மனித குலத்தை அச்சுறுத்தி ஆட்டிப் படைக்கும் பிரச்சனை ஏராளம். வறுமை, பசி, நோய், ஊழல், பணத்தாசை, மொழிவெறி, இனவெறி, சமயவெறி என்று அடுக்கிக் கொண்டே போகலாம். இப்பிரச்சனைகளில் ஒன்று வரதட்சணைக் கொடுமை ஆகும். திருமணம் கூட சில நேரங்களில் பெண்களுக்குப் பெருங்கொடுமை என்னும் நிலையை ஏற்படுத்தி விடுகிறது. சொத்துடமை உருவாதல் அல்லது பாதுகாக்கும் விதத்தில் இன்றைக்குப் பெண்ணினத்திற்கும் இழைக்கப்பெறும் கொடுமைகளில் கொடியது வரதட்சணையாகும். சமுதாயச் சீரழிவுகளில் ஒன்றாக இருக்கிற இந்த வரதட்சணைக் கொடுக்கும் பழக்கம் பழங்காலம் தொட்டேயிருக்கிறது என்பதை இலக்கியங்கள் கூறுகின்றன.

“வரதட்சணை என்ற சொல் ‘வரன் + தட்சணை’ என்ற இரண்டு சொற்களின் சேர்க்கையாகும். ‘வரன்’ என்ற சொல்லுக்குக் கடவள் உயர்ந்தவர் என்ற பொருள்கள் கூறப்படுகின்றது”[40]. தட்சிணை என்பது மிகுந்த மரியாதை உணர்வுடன் கொடுக்கப்படும் காணிக்கை அல்லது அன்பளிப்பு. எனவே வரதட்சணை என்ற சொல், மிக உயர்ந்த மனிதன் அல்லது கடவுளுக்கு மரியாதையுடன் வழங்கப்படும் அன்பளிப்பு என்ற பொருளைத் தருகிறது. ஒரு பெண்ணின் வாழ்க்கைக்குரிய வழிகாட்டியாக, கலங்கரை விளக்கமாக அமைகின்றது. உயர்ந்த மனிதனுக்குக் கொடுக்கக் கூடிய அன்பளிப்பு வரதட்சிணை என்ற சொல்லாகக் குறிக்கப்பட்டது.

“வேதகாலத் திருமணச் சடங்குகளில் கன்னிகாதானம் என்ற சடங்கும் ஒன்றாகும். இந்துசமய வேத சாஸ்திரங்களின்படி கன்னிகாதானம் செய்யும் போது தானம் பெற்றுக் கொள்பவருக்குத் தட்சணை கொடுக்கப்பட்டால்தான் தானம் கொடுத்தது முழுமை பெறும் என்று நம்பினர்”[41]. “பெண்ணைப் பெற்றோர் மணமகனுக்குப் பெண்ணை மட்டும் தராமல், தங்கள் விருப்பத்திற்கும், தகுதிக்கும் ஏற்றவகையில் பொன்னையும், பொருளையும், மணமகனுக்குத் தந்தனர்”[42]. இவ்வாறு கொடுக்கப்படும் பொன்னும் பொருளும் ‘பந்தனம்’ அல்லது ‘சொத்து’ எனப்படும். இது பெண்ணுக்குச் சொந்தமானதாகும். இந்தச் சொத்தின்மேல் கணவனுக்கு உரிமை இல்லை. “திருமணத்திற்குப் பின் பெண் புகுந்த வீட்டில் பாகப்பிரினை ஏற்படும் காலத்தில் வரதட்சிணையாகக் கொடுக்கும் சொத்துக்கள் அனைத்தையும் எடுத்துக் கொள்ளப் பெண்ணுக்கு உரிமை உண்டு”[43]. இதே போன்று இசுலாத்தில் பெண்ணுக்குக் கொடுக்கும் திருமணக் கொடையை (மஹர்) அவர்கள் விட்டுக் கொடுத்தால் மட்டுமே ஆண்கள் அனுபவிக்க முடியும். இது காலப்போக்கில் மாறி வரதட்சணையாக உருப்பெற்றது. வரதட்சணைப் பழக்கம் பணக்காரர்களிடமும் அரச குடும்பத்திலும் மட்டுமே இருந்தது. சாதாரண மக்களிடம் வரதட்சணை வாங்கும் பழக்கம் அறியப்படாமலேயே இருந்தது. காலப்போக்கில் மதத்தின் சார்பில் நீதிபோதனைகள் செய்பவர்கள் பெண்ணின் திருமணத்தில் பெண்ணின் பெற்றோர்கள் தங்கள் தகுதிக்கு ஏற்ப ஆபரணங்கள் கொடுக்கலாம் என்று பரிந்துரை செய்து வந்தனர். அதே சமயத்தில் பெண்ணிற்குக் கொடுக்கக் கூடிய ஆபரணங்களின் எண்ணிக்கையும், மதிப்பீடும் வரையறுக்கப்படாமல் பெண்ணைப் பெற்ற தகப்பனாரின் விருப்பத்திற்கே விடப்பட்டன.

தமிழகத்தில் திருமணமுறையில் ‘பரியம்’ அல்லது ‘பரிசம்’ என்ற சொல்லாட்சி வழக்கத்தில் உள்ளது. பரிசம் என்றால் பெண்ணுக்கு ஆண் கொடுக்கும் திருமணப்பணம் என்பதாகும். வரதட்சணையும் பரிசமும் எதிரிடை நிலைகளில் செயல்படுத்தப்பட்டு வருகின்றன. இரண்டும் அன்பளிப்புக் கொடுக்கின்ற முறையுடன் தொடர்புடையவை. மணமகனுக்குப் பெண் வீட்டார் அன்பளிப்பு கொடுப்பது பரிசம். தமிழ்ச் சமுதாயத்தில் பரிசம் வழங்கும் முறைதான் பரிசம் இருந்து வந்தது. வரதட்சணைப் பழக்கம் தமிழர் சமுதாயத்தில் அறியப்பட்ட ஒன்றாகவே இருந்தது.

பரிசம், வரதட்சணை என்ற இரண்டு பழக்கவழக்கங்களுள் பரிசம் போடுதல் பின்தங்கிய இனங்களிலும், வரதட்சணை உயர்மட்ட இனங்களிலும் நடைமுறையில் இருந்தவந்தவை என்று சமூகவியலார் குறிப்பிடுகின்றனர்.

இசுலாத்தில் மஹர் மற்றும் சீதனம் (ஜஹ்ஹஸா) என்ற சொல்லாட்சிகள் இருந்தன. ‘மஹர்’ என்பது ஆண், பெண்ணுக்கு ஒரு தொகையைத் திருமணக் கொடையாக வழங்குவது. சீதனம் எனும் சொல் தேவையான சாமான்களைக் கொடுத்தல் என்று பொருள்படும். மஹர் என்பது அனைத்து ஆண்களும் கொடுக்கக் கூடியதாக இருக்கிறது. ஆனால் சீதனம் என்பது பெற்றோர்களின் விருப்பத்தின்படி வழங்குவதாக இருந்தது.

### 3.9.1 புராண காலம் முதல் இக்காலம் வரை வரதட்சணை

புராணக் காலத்தில் வரதட்சணை என்ற முறை வழக்கத்தில் இருந்து வந்தது. இந்து சமயக் கடவுளான “பார்வதி – பரமசிவன் திருமணத்தில் அடிமைகள். அரண்மனைகள், யானைகள், கால்நடைகள், இரதங்கள், தானிய வகைகள், ஆடை ஆபரணங்கள், தங்கப் பாத்திரங்கள் ஆகியவற்றை வரதட்சணையாகப் பரமசிவன் - பார்வதியின் பெற்றோர்களிடமிருந்து பெற்றதாகப் புராணம் கூறுகிறது”[44].

“சீதை - இராமர் திருமணத்தில் சீதையின் தந்தை ஜனகன் நூற்றுக்கணக்கான கால்நடைகளையும், பட்டு ஆடைகளையும் அலங்காரம் செய்யப்பட்ட பல ஆயிரம் யானைகளையும், தங்க ரதங்களையும் ஆண்-பெண் பணியாட்கள் பலரையும், தங்க நாணயங்களையும் சீதைக்கு அன்பளிப்பாக அளித்தான்”[45] என்று இராமாயணத்தில் சொல்லப்பட்டுள்ளது.

### 3.9.2 வேதகாலத்தில் வரதட்சணை

வேதகாலத்தில் ஆரம்பத்தில் வாழ்ந்த சூரியனின் மகள் சூரி தன்னுடைய திருமணத்தில் பூலோகத்தையும், சொர்க்கத்தையும் சீதனமாகப் பெற்றுக் கொண்டு கணவன் வீடு சென்றதாகக் கூறப்பட்டுள்ளது.

உரிய காலத்தில் பெண்ணைத் திருமணம் செய்விப்பது தந்தையின் கடமை. இக்கடமையில தவறியவனுக்குக் கடுந்தண்டனை உண்டு என்று பல சமய வேதங்கள் கூறுகின்றன. குழந்தை மணம், விதவையர் பெருக்கம் வரதட்சணைக்

கொடுமைகள் போன்ற பல சமூகத் தீமைகளுக்கு இச்செயல் காரணமாயிற்று. “வியாசர் யாம விஷ்ணு போன்றவர்கள் பெண் திருமணமாத்திற்காக வீட்டில் தங்கியிருந்தால் தந்தைக்கு இழுக்கு என்பதால் பெண்ணை விரைவாக மணம் செய்து கொடுக்க வரதட்சணையும் கொடுத்தனர். ரிக்வேதத்தில் ‘பஹுட்டு’ என்று வரதட்சணைப் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது”[46].

### 3.9.3 சங்க காலத்தில் வரதட்சணை

“ஆரிய மணமுறைகள் எட்டினுள் பிரம்ம என்பது கன்னிகளை அணிகலன் அணிவித்துத் தானமாக்க கொடுப்பது எனவும், ஆரியர் மணமுறையை பெண்ணுக்குப் பொருள் அணிகலன் அல்லது ஆளேறு வடிவில் அளித்துத் திருமணம் செய்து வைத்தனர் எனவும் தொல்காப்பிய உரையாசிரியர் குறிப்பிடுவர்”[47]. திருமணத்தில் அளிக்கப்படும் அன்பளிப்புகள் பற்றிய குறிப்புக்கள்தான் கூறப்படுகின்றனவே தவிர வரதட்சணைக் கொடுமையினால் விளைந்த குடும்ப, சமுதாயச் சிக்கல்களுக்கு இலக்கியங்களில் சான்றுகளைக் காணமுடியவில்லை.

## 3.10 மொகலாயர் காலத்தில் வரதட்சணை

“மொகலாயர் ஆட்சிக் காலத்தில் வரதட்சணை கொடுப்பது அதிகம் இருந்தது. ஜெய்ப்பூர் மன்னன் பகவான்தாஸ் தன் பெண் ஐதாபாயை ஜஹாங்கீருக்குத் திருமணம் செய்தபோது ஆயிரக்கணக்கான தங்கப் பாத்திரங்கள், விலையுயர்ந்த அணிகலன்கள், யானைகள், குதிரைகள் ஆகியவை ஊர்வலமாகக் கொண்டு செல்லப்பட்டு கொடுக்கப்பட்டன”[49] என்பர்.

“அக்பர் காலத்தில் பெண்ணுக்கு வரதட்சணைக் கொடுக்கும் வழக்கம் மிகவும் கடுமையாக இருந்தது. அதன் காரணமாகப் பல பெண்கள் திருமணம் ஆகாமல் கன்னியாக இருக்கக் கூடிய நிலை ஏற்பட்டது. அதனால் வயதிற்கு ஏற்றபடி வரதட்சணையை முதலாகக் கொடுத்தத் திருமணத்தைப் பெற்றோர்கள் முடித்து வைத்தனர். அந்தக் காலக்கட்டத்தில் மிகுதியான வரதட்சணைக்கு ஆசைப்பட்ட இளைஞர்கள் தங்களைவிட மூத்த வயதுடைய பெண்களைத் திருமணம் செய்ய ஆரம்பித்தார்கள். அக்பர் இந்த மணமுறை சரியில்லை என்று உணர்ந்து, தன்னை விட 12 வயதுக்கு மேல் மூத்த பெண்ணை இளைஞர்கள் எவரும் திருமணம் செய்யக்கூடாது என்று ஆணை பிறப்பித்தார்"[50].

“மொகலயார் காலத்தில் மணப்பெண்ணுடைய இளைய சகோதரி வரதட்சணைப் பொருட்களில் ஒன்றாகக் கருதப்பட்டாள்”[51]. மிகுதியான வரதட்சணை வாங்குவது தவறு என்று அக்பர் தன்னுடைய ‘அயினி அக்பரி’ என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார். மேலும் அதிகமான வரதட்சணை கொடுக்க வேண்டும் என்று மாப்பிள்ளை வீட்டர் கட்டாயப்படுத்துவது என்பது வெட்கப்பட வேண்டிய செயல் என்று அக்பர் குறிப்பிட்டுள்ளார்.

இசுலாம் சமயத்தில் நபி (ஸல்) அவர்கள் தங்களின் மகளார் ∴பாத்திமா (ரழி) அவர்களுக்குத் திருமணத்தின்போது படுக்கை விரிப்பு, தண்ணீர்ப்பை மற்றும் புல்லால் அடைக்கப்பட்ட ஒரு தோல் தலையணை போன்றவற்றைச் சீதனமாகக் கொடுத்துள்ளார்.

## 3.11 இக்காலத்தில் வரதட்சணை

இன்றைய சமூகத்தில் இல்லறம் என்பது பணத்தை முன்னிறுத்தி நடக்கிறது. அதில் வரதட்சணை சிறந்த முதலீடாக அமைகிறது. இன்றைய மணவாழ்வில் பணமே ஆட்சி செய்கிறது. இல்லத்தின் புழங்கு வெளி ஆண்களின் கையில் இருந்ததால் பெண்களை வரதட்சணை ஆயுதம் கொண்டு துரத்தினார்கள். அவ்வாறு துரத்தப்படும் பெண்களின் மன உணர்வுகளையும், அவர்கள் அனுபவிக்கும் கொடுமைகளையும் சமூகத்திற்குத் தனது படைப்பு மூலம் எடுத்துரைக்கின்றார் படைப்பாளர்.

ஆணின் அதிகமான படிப்பும் மிகுதியாகப் பொருளீட்டாக் கூடிய நிலையும் வரதட்சணைப் பழக்கத்தைத் தூண்டுகிறது. இன்றைய “வரதட்சணைப் பழக்கம்” என்ற ஆசையில் பெண்ணைப் பெற்றவர்கள் அதிகப்படியான வட்டிக்குக் கடன் வாங்கி ஆணின் பெற்றோர்களின் விருப்பத்தை நிறைவேற்றுகின்றனர். பெற்றோர்கள் தங்களுடைய வாழ்க்கையில் சம்பாதித்த அனைத்துச் சேமிப்புக்களையும் ஒரு மகளின் திருமணத்திலேயே செலவிடும் நிலையும் இன்று காணப்படுகின்றது. இதனால் அக்குடும்பத்தில் மற்ற பெண் வாழ்க்கை வெகுவாகப் பாதிக்கப்படுகின்றது.

இன்றைய நடப்புச் சூழலில் ஒவ்வொரு பெண்ணுக்கும் வரதட்சணை என்பது பெரும் சுமையாக இருக்கிறது. திருமணம் நிகழ்த்துவதற்காக பெண் பார்க்கும் படலம் முதல் எண்ணில் அடங்கா இன்னல்கள் இருப்பதைக் காணமுடிகிறது.

இவற்றில் வரதட்சணைக் கேட்பதே முன்னுரிமை பெறுகிறது. பட்டங்கள் பல பெற்றிருந்தாலும் அவள் வாழ்வைத் தீர்மானிப்பது வரதட்சணைதான்.

### 3.11.1 வரதட்சணையால் ஏற்படும் சமுதாயச் சீர்கேடுகள்

வரதட்சணை என்னும் நச்சுவட்டம் இன்றைய சமூகத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டது. இதைச் சமூகத்தளத்திலிருந்து அகற்றுவதற்காகப் பல்வேறான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவை அனைத்தும் ஏட்டுச் சுரக்காயாகப் போனதுதான் பரிதாபத்திற்குரியது. வரதட்சணைக் கொடுமைக்குப் பலியாகும் பெண்களின் மனஉணர்வுகளை ஆணாதிக்கச் சமூகம் ஒருபோதும் சிந்திப்பபதே இல்லை. திருமண வாழ்வில் அடியெடுத்து வைக்கும் பெண்களின் ஏமாற்ற வாழ்வைப் படைப்பாளர் தன் படைப்பின் வழி வெளிப்படுத்தியுள்ளார்.

பழங்காலத்தில் பெண்களுக்கும் ஆண்களைப் போல சமஉரிமை இருந்துள்ளது. பிற்காலத்தில் அவ்வுரிமை அழிந்துவிட்டது. ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்களின் உரிமைகளைப் பறித்ததோடு, அவர்களை அடிமைகளாக வீட்டுக்குள் அடைத்து வைத்தனர். இந்நிலையிலிருந்து சென்ற நூற்றாண்டில் பெண்கள் ஓரளவு உரிமை பெற்றனர் எனலாம். என்னதான் உரிமை பெற்றாலும் ஏதேனும் ஒரு கட்டுக்குள் அவள் அடங்கிப் போக வேண்டிய சூழல்தான் நிலவுகிறது. இவ்வடிப்படையில் வரதட்சணை என்கிற ஒன்றை மையமாக வைத்துப் பெண் சமூகத்தையே நசுக்குகின்றனர். வரதட்சணை என்னும் அரக்கனின் செயலில் இன்றைய சமூகம் சீரழிந்துக் கொண்டு இருக்கின்றது. அக்கொடுமை வசதி படைத்தவர்களால் மட்டுமே வழங்கப்பட்டு வந்தது. ஆனால் இன்று அனைவராலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட பெரு வழக்கமாக இருந்து வருகின்றது.

ஆணாதிக்கத்தால் பெண்ணுக்கு ஏற்படும் சிக்கல்களில் ஒன்றான வரதட்சணையால் சமுதாயச் சீர்கேடுகள் ஏற்படுவதைத் தோப்பில் முகமது மீரான் தனது படைப்புகள் வழி வெளிப்டுத்துகின்றார். அவை

1. பெண்களின் வாழ்க்கைப் பாதிப்பு
2. முதிர்கன்னியாக வாழ்தல்
3. பொருத்தமில்லா திருமணம்
4. பெண்ணிய உணர்வு வெளிப்படுதல்

5. பெண் குழந்தையைக் கொல்லுதல்
6. பெண்கள் தற்கொலை செய்தல்
7. பெற்றோரின் மனநிலை
8. சமூகத்தில் பெண்கள் மதிப்பு

ஆகியனவற்றை வரதட்சணையால் ஏற்படும் சமுதாயச் சீர்கேடுகளாகப் படைப்பாளர் கூறுகிறார்.

### 3.11.1.1 பெண்களின் வாழ்க்கைப் பாதிப்பு

பெண்களின் வாழ்வில் முக்கியமானதாகத் திருமணம் அமைந்துள்ளது. இத்திருமணம் சில நேரங்களில நடைபெறத் தடையாய் இருப்பது வரதட்சணையாகும். இன்று எல்லா சமய மக்களிடமும் வரதட்சணைப் பழக்கம் ஒரு முக்கியமான சடங்காகக் கருதப்பட்டு வருகின்றது. ஆண் உயர்ந்தவன், தட்சணையை ஏற்றுக் கொண்டு பெண்ணை வாழ வைக்க வேண்டியவன் என்று ஆணாதிக்கத்தை உயர்த்திப் பிடிக்கின்றனர். அதே வேளையில் பெண்ணடிமைத்தனத்துக்கும் துணைபோகின்றது இந்த சமூக அமைப்பு. இதனால் பெண்கள் பிறந்தாலே சுமையாகப் பார்க்க வேண்டிய அவலநிலைக்குப் பெற்றோர் தள்ளப்படுகிறார்கள்.

பெண்ணின் பெற்றோர் வரதட்சணைக் கொடுப்பதன் மூலம் பெண்ணின் மதிப்பீடு சமுதாய வணிகத்தில் சரிக் கட்டப்படுகிறது. பொன்னும் பொருளும் சரிவரக் கொடுக்க இயலாத பெற்றோர்கள் தங்களது மகளின் வாழ்க்கை பாதிக்கப்பட்டுச் சீரழிவதைக் காண்கிறார்கள். தோப்பில் முகமது மீரான் “கறவை தீர்ந்த மாடு” எனும் கதையின் வாயிலாக வரதட்சணைக் கொடுத்து வாழ்க்கையை அனுபவிக்கச் செல்லும் பீடி தொழிலாளி மகளின் வாழ்வில் ஏற்பட்ட துன்பநிகழ்வுகளையும் முதலிரவில் கூட தன் வியாபாரத் தன்மையை வெளிப்படுத்தும் மணமகனின் போக்கையும் பதிவு செய்துள்ளார்.

> “பீடி சுற்றுற கையைப் பார்ப்போம்
> கல்யாண இரவில் அவன் கேட்டான்
> வெட்கத்தோடு கையைக் காண்பித்தாள்.
> கையை எட்டிப் பிடித்தனர். அந்தக் கையில் முத்தமிட்டான்
> நீ பீடி சுற்ற வேண்டும்”[53]. (ப. 96-97)

முதலிரவில் தனது எண்ணக் கனவுகளுடன் வரும் பெண்ணை மனைவியாகப் பார்க்காமல் தன் பொருளாதாரப் பற்றாக்குறையைத் தீர்க்க வந்த அமுதசுரபியாக, வருவாய் ஈட்டித் தரும் அடிமையாக மைமூனின் கணவன் ஏற்றுக் கொண்டு கணவனைச் சார்ந்து வாழும் மனைவியை மனித உயிரியாக எண்ணாமல் எந்திரமாக எண்ணினான்.

சமூகம் பெண்களை ஆணின் போகப் பொருளாகத்தான் கட்டமைத்துள்ளது. ஆண், பெண்ணின் மன உணர்வையும் உடல் வலிமையையும் வலியையும் அறிந்து கொள்ளாமல் அவர்களை அடிமைகளாகவும், வருவாய் ஈட்டித் தரும் இயந்திரமாகவும் அணுகும் சமூகத்தின் அதிகாரப் போக்கைப் படைப்பாளர் வெளிக்காட்டுகின்றார்.

“உன்னைக் கல்யாணம் பண்ணித் தரும்போது நீ ஆயிரம் பீடி சுத்தவேன்னு சொன்னா. நீ முன்னூறு முன்னூத்தம்பது பீடி சுத்துனா நமக்கு ஒத்துவராது. நான் வேற பொண்ணு கட்டப்போறேன். “அவன் உடனே வீட்டை விட்டு இறங்கிப் போய்விட்டான். மறுநாள் சாயங்காலம் மைமூனின் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. அவள் கணவன் எழுதிய கடிதம், “உன்னை தலாக் சொல்லி இருக்கிறேன். தலாக்... தலாக்...தலாக்”[54]. (ப. 98)

தன் பொருளாதாரத் தேவையைப் பூர்த்தி செய்ய இயலாத பெண் தேவையில்லை என எண்ணி தன் மணவாழ்க்கையை முறித்துக் கொள்ளச் செல்லும் ஆணின் ஆணவத்தையும், மைமூனின் அவலத்தையும் படைப்பாளர் படைப்பின் மூலம் சுட்டிக் காட்டுகின்றார்.

பெரும்பாலான பெற்றோர்கள் தங்களின் மகள் நல்ல முறையில் வாழ வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் தமது தகுதிக்கு மீறிய நிலையில் வரதட்சணைக் கொடுத்துத் திருமணம் செய்து வைக்கின்றார்கள். இதனால் அதிகப் பாதிப்புக்குள்ளாவது மகள் என்பதைப் பெற்றொர் உணர்வதில்லை. அதிலும் அதிக வரதட்சணை கொடுத்த மூத்த மருமகள் முன்னாள் வரதட்சணை குறைவாகக் கொண்டு வந்த மருமகளின் நிலை இரங்கத்தக்கதாக உள்ளது என்பதை,

> “வாப்பா எப்படித்தான் மாளிகை வீட்டில் அக்காவைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தாரென்று தெரியவில்லை. அங்கு எப்படி மன நிம்மதியுடன் நாட்களை நகர்த்துகிறாள் என்று புரியவில்லை.... ஏன் மோளே கரையுதா? வாப்பா திகைத்துப் போய் புரியாமல் கேட்டார். மைனிமாரெல்லாம் குத்திக் குத்திப் பேசுதுவே. எக்கு மூக்குத்தியும் நெக்லஸீம் இல்லைனு”[55]. (பக்.450-451)

மணமான பெண் புகுந்த வீட்டில் துன்புறுத்தப்பட்டால் அவளுடைய பெற்றோர்கள் அவளைத் துன்பத்திலிருந்து விடுவித்துப் பாதுகாப்பான நிலைக்குக் கொண்டு வருவதை விட கணவன் வீட்டில் அவளுக்குரிய மரியாதையை ஏற்படுத்த வேண்டும் என்ற நோக்கத்தில் மேலும் அதிகமான பொருளைப் பெற்றோர்கள் தருகின்றனர்.

> “சுறாப்பீலி விற்று சிங்ப்பூரிலிருந்து உண்டியல் வந்ததும் தட்டான் நாகேந்திரன் சின்னய்யாவைக் கூப்பிட்டு ஏற்பாடு செய்திருந்த கல்வச்ச நெக்லஸும் மூக்குத்தியும் கிடைத்தது. மாளிகை வீட்டுக்கு ஏற்றபடி செய்திருக்கேன் சின்னய்யா என்றான்”[56]. (ப. 451)

இவ்வரிகளின் மூலம் பெண்ணை மணமுடித்துக் கொடுத்தப் பின்னும் பொன்னும் பொருள்களும் ஆசைப்பட்டுக் கணவன் துன்புறுத்துவதால் பெண்ணின் வாழ்க்கை பாதிக்கப்பட்டு விடுமே என்று எண்ணி தன் மகளின் வாழ்க்கையை நிலைநிறுத்துவதற்குப் பெற்றோர்கள் காலம் காலமாகப் போராடுவதையும் வரதட்சணையால் பெண்ணின் வாழ்க்கை பாழாகிப் போவதையும் “மாளிகை வீடு’ என்ற சிறுகதையின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

### 3.11.1.2 முதிர்கன்னியாக வாழ்தல்

பொருளாதாரத்தில் உயர்ந்த நிலையிலிருக்கும் குடும்பங்களில் பெண்ணைப் பெற்றவர்கள் அதிகமாக வரதட்சணையைக் கொடுத்து மணம் முடிக்கின்றனர். பொருளாதார வளம் இல்லாமல் வறுமையில் வாழும் குடும்பங்களில் வரதட்சணை கொடுக்க இயலாததால் பெண்கள் முதிர்கன்னியாக வாழ்கின்றனர். இவர்கள் பணம் எனும் கணவனை இழந்ததால் திருமணம் ஆகாமலேயே விதவைகள் ஆனார்கள். பொருளாதார ஏற்றத்தாழ்வு நிறம், கல்வி, உருவ அமைப்பு ஆகியவற்றைக் காரணம் காட்டிப் பெண்ணின் மனத்தைப் புரிந்து கொள்ளாமல் அவர்களை முதிர்கன்னிகள்

என்ற பட்டத்திற்கு உள்ளாக்கும் மனித நேயமற்றோர் இச்சமூகத்தில் உலவிக் கொண்டுதான் இருக்கின்றனர்.

திருமணங்கள் வணிகமாகிப் போனதால் சில பெண்கள் விலை போக முடியாமல் முதிர்கன்னியாகவே இருந்துவருவதை

> “முப்பதும் முப்பதஞ்சும் வயசானாலும் கெட்டிக் கொடுக்கு வழியில்லாம எவ்வளவோ பொம்பிள்ளையோ வீட்டிலே இருக்காங்கே”[57].
> (ப.122)

மேற்குறித்த வரிகளின் வாயிலாக வரதட்சணைக் கொடுமையால் முதிர்கன்னி பல காலமாக வீட்டுச் சிறையில் கட்டுண்டு கிடப்பதை “ஒரு சூரியன் எரிகிறது” எனும் கதையில் பதிவு செய்கிறார்.

வரதட்சணை தரமுடியாத நிலையில் உள்ள பெண்கள் திருமணம் வயதைக் கடந்தும் முதிர்கன்னியாக வாழும் நிலை இன்றைய சமூகதில் மிகுதியாக உள்ளது. திருமணமே பெண்ணின் வாழ்க்கை இலக்கு என்ற சமூகக் கண்ணோட்டத்தை ஆணாதிக்கச் சமூகம் நிர்ணயித்துள்ளது. எனவே சமூகரீதியாகவும், கலாச்சார ரீதியாகவும் பெண்களின் இருப்பு இரண்டாம் நிலையாகவே உள்ளது. ஆணுக்குச் சரிநிகராக வளர்ந்து நிற்கும் பெண்ணினம் சமூகதளத்தில் பல தடைகளைத் தாண்டி ஒவ்வொரு படியாக உயர்ந்துள்ளன. எனவே உலகில் பெண் பிறப்பதில்லை. உருவாக்கப்படுகிறாள் என்பதை உணரமுடிகிறது. அதன் அடிப்படையில் ஒவ்வொரு பெண்ணும் தன் வாழ்நாளில் பல்வேறான துன்பங்களை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. குறிப்பாக முதிர்கன்னியாக வாழும் சூழல்களை அவர் மனபுலம்பலைப் படைப்பாளர் தன்னிலைச் சார்பாக பவர்க்காரி, மொட்டைக் கடிதம், அப்துல்லா இன்னு அபூபக்கர், தஜ்ஜால் மேல் விழுந்த மலை போன் சிறுகதைகளில் வெளிப்படுத்துகின்றார்.

> “நான் நிர்ப்பாக்கியவதி, சபிக்கப்பட்டவள், மிதித்து வெளியே தள்ளப்பட்டவள். இருந்தாலும் வாழ்க்கையின் சுட்டுப் பழுத்த சங்கிலியால் கட்டப்பட்ட நான், அதன் வேதனையில், அதன் எரிச்சலில்

> துடிக்கின்ற நான், என் துர்விதியை நினைத்துச் சிந்துகின்ற கண்ணீரினூடே”[58] (ப. 46)

எனக் கூறுவதன் மூலம் இன்றைய பெண்கள் வரதட்சணைக் கொடுமையால் முதிர்கன்னியாக இருக்கும்போது, அவர்களின் மனநிலையானது எவ்வாறு வேதனை அடையும் என்பதையும், பெண்கள் இக்காலச் சூழலில் எதிர்கொள்ளும் அவலத்தால் அவர்களின் மன அழுத்தம் அதிகரிப்பதையும், ‘பவர்க்காரி’ சிறுகதையின் மூலமாக வெளிப்படுத்துகிறார்.

> “பூக்களிலே நானுமொரு
> பூவாய்த்தான் பிறப்பெடுத்தேன்
> பூவாகப் பிறந்தாலும்
> பொன் விரல்கள் தீண்டலையே!
> பொன் விரல்கள் தீண்டலையே – நான்
> பூமாலை யாகலையே!”[59] (கண்ணீர் பூக்கள், ப. 41)

என்று திருமணமாகாமல் முதிர்கன்னியாக வாழும் பெண்களின் மன உளைச்சலைப் பற்றிக் கவிஞர் மு. மேத்தா கூறுவதும் நினைவு கூரத்தக்கது.

இசுலாம் திருமணம் என்ற நிலையில் ஒருவருக்கொருவர் உதவி செய்து வாழ வலியுறுத்துகிறது. இதனை

> “உங்களில் வாழ்க்கைத் துணையின்றி இருப்பவர்களுக்கு உங்களில் ஆண்-பெண் அடிமைகளில் நல்லவர்களுக்கும் திருமணம் செய்து வையுங்கள். அவர்கள் வறியவர்களாய் இருந்தால் அல்லாஹ் தன் அருளால் அவர்களைச் செல்வந்தவர்களாய் ஆக்குவான். திருமணத்திற்குரிய வசதி வாய்ப்பைப் பெறாதவர்கள் அல்லாஹ் தன்னுடைய அருளால் அவர்களுக்கு அந்த வாய்ப்பை வழங்கும் வரை ஒழுக்கத் தூய்மையை மேற்கொள்ளப்படும்”[60]. (திருக்குர்ஆன். 24:32-33)

என்ற குர்ஆனின் வரிகள் மூலம் பொருளாதாரத்தில் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் வசதி இல்லாதவர்களுக்கு உதவி செய்து சகோதரத்துவத்துடன் வாழ வலியுறுத்துகிறது. மக்கள் இன்றைய சமூகத்தில் சுயநலத்தோடு வாழ்கின்றனர்.

இதனை முகமது மீரான் தஜ்ஜால் மேல் விழுந்த மலை எனும் சிறுகதையில் வரும் முஹல்லா என்னும் கதை மாந்தர் வழி தன்னுடைய மகளுக்கு மட்டும் லட்சத்துக்கு மேல் செலவு செய்யும் அளவிற்குச் செல்வ செழிப்புடைய மனிதர் பிற மனிதர்க்கு உதவவேண்டும் என்ற எண்ணமற்ற நிலையில் வாழுவதை இயல்பாக உணர்த்துகின்றார். இத்தகைய மனிதநேயமற்றவர்களால் தான் முதிர்கன்னிகள் எண்ணிக்கை பெருகி கொண்டு வருகின்றது.

### 3.11.1.3 பொருத்தமில்லா திருமணங்கள்

வரதட்சணை கொடுக்க இயலாத நிலையில் தன் மகளுக்கு எப்படியாவது திருமணம் செய்து வைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் வரதட்சணை வாங்காத ஆண்கள் யாராக இருந்தாலும் சிந்திக்காமல் பெண்ணுக்கு மணம் முடித்துவிடுவார்கள். பெரும்பாலும் வயது முதிர்ந்தவர்கள் இரண்டாம் மனைவியாக வரதட்சணை வாங்காமல் திருமணம் செய்கின்றனர். இதனால் நற்பண்புகள் வாய்க்கப் பெற்ற பெண் சில நேரங்களில் கயவனின் கையில் சிக்க நேரிடுகிறது. இளம் வயதுடைய பெண் தன்னைவிடப் பல் வயது மூத்த ஆண் கிழவனைத் திருமணம் செய்யும் நிலை சில நேரங்களில் உருவாகிறது. பொருத்தமில்லா திருமணத்தால் பெண்ணின் உணர்வுகள் உருக்குலைந்து போவதைத் தோப்பில் முகமது மீரான் ‘பவர்க்காரி’ எனும் கதையின் மூலம் படம் பிடித்துக் காட்டுகின்றார்.

> “இன்று மூன்று தினங்களாகின்றன. என்னுடைய திருமணம் நடந்து அதைத் திருமணம் என்று சொல்வது சரியல்ல. ஒரு புருஷனை என் துணைக்காக நானே ஏற்றுக் கொண்ட ஓர் ஏற்பாடு அது.... என் புது வரனுக்கு வயது அறுபது....”[61] (ப.51)

தந்தையை இழந்து வறுமையின் காரணமாகத் திருமணமாகாமல் இளமை என்னும் வட்டத்தில் சிக்கித் தவிக்கும் பெண்ணின் மன உணர்வையும், திருமணச் சடங்கு கட்டாயமானதால். காலச் சுழற்சிக்கு ஏற்ப பெண் தன் உடலை மட்டுமின்றி தன் விருப்பு, வெறுப்புகள் எண்ணங்கள் என் எல்லாவற்றையும் ஆணின் ஆதிக்கச் சமூகத்தின் விருப்பப்படி தகவமைத்துக் கொண்டாள் என்பதைப் படைப்பில் புலப்படுத்துகிறார்.

பொருளாதார நிலையில் பின்தங்கிய சூழலின் காரணமாகத் திருமணம் தடைப்படும் நிலை ஏற்படுகின்றது. பெண்ணைப் பெற்று, வளர்த்துத் திருமணம் செய்து வைப்பதில் பெற்றோர்களின் நிலை மிகுந்த சிரமத்தை உடையதாகிவிடுகிறது. குறிப்பாக, பொருளாதாரத்தில் மிகுந்த பின்னடைவுடைய குடும்பங்கள் பெண் பிள்ளைகளைப் பெரும்பாராமாகவே கருதப்படும் அளவிற்கு மாறிவிடுகிறது. இத்தகு நிலையில் அமைந்த குடும்பச் சூழல் இசுலாம் முதலான சமயங்களில் அதிகமாகக் காணப்படுகிறது. இதன் காரணமாக வயது முதியவராக இருந்தாலும் வரதட்சணையைக் கொடுத்துத் தன் மகளுக்குத் திருமணம் செய்து வைக்கப் பெற்றோர்கள் முயலுவதை

> "ஆண்டுகள் பத்துபோல் உருண்டன. நெட்டோகாலியின் கண்கள் குழிக்குள் விழுந்தன. கண்களுக்குச் சுற்றுமாகச் சுருக்கங்கள் பரந்தன. தலையை வழுக்கை நக்கி எடுத்தது. வழுக்கை போக மீதி இடத்தில் வெள்ளிக் கம்பிகள் குத்தி நிற்கும்.... பத்து பவுனுக்கு நகை, பத்தாயிரம் கையில் பதிமூன்று சென்று காலி மனை"[62]. (ப.201)

எனச் சுட்டியுள்ளார். மணமகன் வயது மூத்த நிலையில் இருந்தாலும், பெண் திருமணம் என்னும் பந்தத்திற்குள் நுழைவதற்கு நகையும், பணமும், காலி மனையும் கொடுத்துத் திருமணம் செய்யும் பழக்கத்தைத் தன் படைப்பில் பதிவு செய்துள்ளார்.

வரதட்சணை என்னும் வியாபாரச் சந்தையில் விலை போகாமல் உரிய பருவத்தில் மணமாகாமல் முதிர்கன்னியாக பெண்கள் வாழ்வதைப் போல, அதிக வரதட்சணைப் பெற்றுத்தான் திருமணம் முடிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் பருவ வயதைக் கடந்து வாழும் ஆண்களின் நிலையை

> சீதனம்
>
> அம்பது பவுனுக்கு நகை, இருபத்தாய்யாயிரம் கையிலெ. பின்ன வஸ்து
>
> 'வஸ்து எம்புடு?'
>
> 'ரண்டேக்கர் தெங்கன் தோப்பஷு'.

> ‘நக நூறு பவுன் வேணும். அம்பதாயிரம் கையிலை தரணும் வஸ்து போதும்
>
> எம்புடு தேங்கா வெட்டும்....’
>
> பத்து ரண்டாயிரம் தேங்கா வெட்டும்.
>
> நா சொன்னபடி சீதனம் உண்டானா பேசுான மதி”[63]. (ப.199)

என வயது முதிர்ந்தாலும் பரவாயில்லை. அதிக வரதட்சணை வாங்கித்தான் திருமணம் முடிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் வாழும் ஆண்களின் பண்பு பற்றி ‘நெட்டோகாலி’ என்ற நூறில் ஹஸன் சிறுகதையின் வாயிலாக வெளிப்படுத்துகின்றாா். இந்நிலை தொல்காப்பியா் காலத்தில் தொடங்கி இன்றும் நீடித்து வருகின்ற சமூக அவலம். இன்றையக் காலக்கட்டத்தில் திருமண அமைப்பில் பெண்ணிற்கு எதிர்ப்பாா்க்கப்படும் தகுதிகளில் முதன்மையானது வரதட்சணை. ஆணிற்கு எதிர்பாா்க்கப்படும் தகுதிகள் ‘ஆண் மகன்’ என்பது மட்டும்தான் என்று படைப்பின் வழி பறைசாற்றுகின்றாா்.

இசுலாம் சமயத்தில் பெண்ணிற்கு எதிர்பாா்க்கப்படும் தகுதிகள் பற்றி நபிகள் நாயகம் (ஸல) அவா்கள் மணமகனுக்கு கூறுவதாவது

> “பெண்களை அவா்களின் அழகுக்காகத் திருமணம் முடிக்காதீா்கள். அவா்களுடைய அழகு அவா்களை அழித்துவிடக் கூடும். பெண்களைச் செல்வந்தவா்கள் என்பதற்காக மணம் முடிக்காதீா்கள். அவா்களுடன் செல்வம் வரம்பு மீறுவதிலும் அடங்காப்பிடாரித்தனத்திலும் அவா் ஆழ்த்திவிடக்கூடும். மாறாக, மாா்க்கப் பற்றின் அடிப்படையில் அவா் மணம் முடித்துக் கொள்ளுங்கள்.”[64]

என்று வரதட்சணைக்காகப் பெண்ணைத் திருமணம் செய்வது தவறு என்று நபி (ஸல்) கூறுவதாக ஹபீப் முஹம்மது வரதட்சணை எனும் அவமானம் நூலில் கூறியுள்ளாா்.

### 3.11.1.4 பெண்ணிய உணா்வு வெளிப்படுதல்

வறுமையாலும், வரதட்சணையாலும் திருமணம் தடைப்படும் சூழலில் அங்குப் பாதிக்கப்படுவது பெற்றோா்களாயினும் நேரடியாக அந்தப் பாதிப்பை உணா்வதும்,

அனுபவிப்பதும் பெண்களே! என்பதை முகமது மீரான் அவர்கள் பவர்க்காரி, மொட்டைக்கடிதம், அஸ்தமனம், அப்துல் இப்னு அபுபக்கர் போன்ற சிறுகதையின் வழி மிக எதார்த்தமாகக் காட்டுகின்றார்.

பெண் என்பவள் என்றும் ஆணுக்கு இணையானவள் அல்ல. எனவே, பெண்களால் தங்களது மன உணர்வுகளை அகவாழ்வில் வெளிப்படுத்த முடியாது. அதனால் அவர்கள் தங்கள் மனதுக்குள் முணுமுணுத்துக் கொள்வார்கள். பெண்கள் பருவமடைந்தது முதல் பல்வேறு நிலைகளில் கட்டுப்படுகிறாள். பெண் தனது குடும்பத்திற்காகவும், சமூகத்திற்காகவும் தனது உடல் சார்ந்த மனம் சார்ந்த உணர்வுகளைக் கட்டுப்படுத்துகிறாள். அவ்வாறு ஆணாதிக்கச் சமூகத்திற்காகக் கட்டுப்படும் பெண்களின் உடல், மனம் சார்ந்த உணர்வுகளை

> “வெளியில் நைலான் சேலை விரித்து நிற்கின்ற நிலா. பாதி இரவுப் பணியில் பௌடர் பூசி அழகு சமைத்து நிற்கும் சந்திரனின் ஒளிச் சிரிப்பு. அந்தப் பால் சிரிப்பு என்னைக் கிளர்ச்சியடையச் செய்கின்றது. என்னை உணர்ச்சிவசப்படுத்துகிறது.......................ஜன்னலினூடே ஒழுகி வரும் குளிர்க்காற்று என்னைப் புல்லரிக்கச் செய்கின்றது. என் நரம்புகளினூடே மனிதப் பரம்பரை நிலைப்பதற்கான கூட்டுறவின் ஆசையைக் கிளர்ந்தெழச் செய்கின்றது”[65]. (ப. 46)

குறிப்பிட்ட வயதை அடைந்தும் திருமணமாகாத நிலையில் பெண்களின் உணர்வு கிளர்ந்தெழும் நிலையைப் படைப்பாளர் வெளிக்காட்டுகின்றார்.

ஹமீதா என்ற பாத்திரம் தனது பெண்ணிய உணர்வுகளையும், பாலின தூண்டுதலையும் வெளிப்படுத்துவது ஒட்டுமொத்தமான வரதட்சணைக்கு இறையாகும் முதிர்கன்னிகள் என்ற நிலையை அடைந்த பெண்களின் வெளிப்பாடு ஆகும்.

பெண்ணின் அகஉணர்வு ஒரு காலக்கட்டத்தில் தன்னையும் அறியாமல் வெளிப்பட்டு விடுகிறது. திருமணப் பந்தத்தில் அகப்பட்டுக் கொள்ள எண்ணிய பெண்களின் எதிர்பார்ப்புகள் எல்லாம் ஆண்களின் புழங்குவெளியில் பொய்யாக மாற்றப்படுவதுதான் பரிதாபத்திற்குரியது.

> “எனது இளமையின் தூண்டுதலால் நான் அதற்கு ஒப்புக் கொண்டேன். கல்யாண நாள் நிச்சயிக்கப்பட்டது. அந்த நாளுக்காக அந்த நாளின் இரவுக்காக நான் நிமிடங்களை எண்ணி இருக்கும்போது ஒரு இடி விழுந்தது”[66]. (ப.142)

இளமையின் அகஉணர்வு என்பது கட்டுக்கடங்காத நிலையில் வெளிப்படுவதை ‘மொட்டைக்கடிதம்’ கதையின் வழி எடுத்துக்காட்டுகின்றார். இக்கதையில் வரும் ‘பாத்தும்மா’ போன்று எத்தனையே முதிர்கன்னிகள் இந்நிலையில் உள்ளுக்குள்ளே வாழ்வதைச் சிறுகதையில் ஆங்காங்கே படம்பிடித்துக் காட்டுகிறார் படைப்பாளர்.

ஆண்களின் சமூகத்தில் போகப் பொருளாக மாறி பெண்கள் தங்களது வாழ்வைப் பாழாக்கும் நிலையையும், ஆணாதிக்கச் சமூகத்தில் ஆண்களின் சபலப் பார்வைக்கு உட்படுவதையும் “அப்துல் இப்னு அபுபக்கர்” கதையில் வெளிக்காட்டுகிறார். அரேபியர்கள் வாணிக நிமித்தமாக இந்தியா வரும்போது இங்குள்ள பெண்களின் மீது மோகம் கொண்டு அவர்களிடம் ஆசை வார்த்தைகளைக் கூறி பெண்களைக் காமப் பார்வைக்கு இரையாக்கியுள்ளனர். இக்கொடுமைக்கு ஆட்பட்ட பெண்கள் தனிமைத் தூயர் வாட்டும் பொழுது தலைவன் இல்லாதநிலையில் மனக்கவலைக்கு ஆட்படும்பொழுது அகமனத்தில் ஏற்படும் உணர்வை

> “இனம் தெரியாததாக வறட்சியில் நரம்புகளுக்கு சூடு ஏறியது. ஓர் ஆடவனின் சூடான மூச்சு காற்று முகத்தில் தட்ட வேண்டும் போலிருந்தது. அப்படியே உறங்கிவிட்ட அவளை, பழக்கமான ஒரு குரல் எழுப்பியது. குரல் கேட்ட திசையை நோக்கி நடந்தாள். சென்றது கடற்கரைக்கு. ஒரு கப்பல் கரை ஒதுங்கி விட்டிருந்தது. அவளைக் கண்டதும் அப்துல் இப்னு அபூபக்கர் இறங்கி வந்தார். அவர் நீட்டிய கைக்குள், இவள் குழைந்து ஒடுங்கினாள். அவர் இவளைப் பிசைந்தெடுத்த இன்ப லகரியில் போதையேறி நின்றாள். அடுத்த தடவை வரும்போது உன்னைக் கப்பலில் ஏற்றி கொண்டு போவேன். நீ எனக்காகக் காத்திரு”[67]. (ப.582)

என்பதில் பெண்களின் மனோபாவம் என்பது கண்களில் கனவையும், நெஞ்சத்தின் காதலையும் சுமந்து கொண்டிருந்தாலும், நினைத்த எதிர்பார்ப்புகள் ஏமாற்றம் அடையும்போது உண்டாகும் மன உளைச்சலையும், திருமண வாழ்வை எண்ணிக் கனவு கண்ட கன்னிகளின் மனஉணர்வுகளையும் அவர் மனக்குமுறல்களையும், ஆழ்மன உணர்வுகளையும், பெண்கள் அனுபவிக்கும் துயர்வெளிகளையும் “அப்துல் இப்னு அபூபக்கர்” கதையில் வரும் “நூருன்னிசா” எனும் கதைமாந்தர் வழி எடுத்தியம்புகிறார்.

### 3.11.1.5 பெண் குழந்தையைக் கொல்ல முயற்சித்தல்

ஆண்களால் உருவாக்கப்பட்ட இச்சமூகத்தில் பெண் தன்னை முன்னிலைப்படுத்திக் கொள்வதற்காகப் பல்வேறு நிலையிலும் போராட வேண்டியுள்ளது. இப்போராட்டம் சங்ககாலம் முதல் இக்காலம் வரை தொடர்ந்து கொண்டேதான் இருக்கிறது. பெண் கல்வி, பொருளாதாரம் ஆகியவற்றில் முன்னிலைப் பெற்றிருந்தாலும் திருமணம் என்னும் பந்தத்திற்குள் வரும்போது வரதட்சணை என்னும் ஒரு கட்டுப்பாட்டைப் பெண்கள் மீது ஆண்கள் திணிக்கின்றனர்.

இக்கட்டுப்பாட்டை உடைத்தெறிய முடியாமல் பெண்கள் சிக்கித் தவிக்கின்றனர். சமூகத்தைப் பொறுத்தவரை பெண் குழந்தை என்றவுடன் நிலைகுலைந்து போகின்றனர் பெற்றோர்கள். அவர்கள் முகத்தில அன்று படர்ந்திருந்த கருமை கடைசி வரை அகல்வதே இல்லை. பெண்ணுக்குத் திருமணமாகிற வரை பெற்றோர்கள் நடைபிணங்களாகவே நடமாடுகின்றனர். தாம் பெற்ற பெண்களைச் சுமையாகவும், இழிவாகவும் பார்க்கின்றனர். பெண் குழந்தையைப் பெற்று வளர்த்து வரதட்சணைக் கொடுத்து ஆண் ஆதிக்கத்திற்குள் உட்படுத்தி காலங்காலமாக அவதிப்படுவதை விட கொன்றுவிடுவதே சிறந்தது என்று கருதுகின்றனர். இதனை “கறவை தீர்த்த மாடுகள்” எனம் சிறுகதையில்,

> “அவள் சென்றாள். கத்தியை எடுத்தாள். கத்திக்குக் கூர்மை இருக்கிறதா என்று பார்த்தாள்.
>
> நல்ல கூர்மை:

> ‘ஆண்டவனே, நான் செய்யும் இந்தப் பாவத்தை நீ பொறுக்க வேண்டும்’. அவள் மனம் வேண்டிக் கொண்டது. என் விதி என் வயிற்றில் இந்த பெண் மக்களுக்கு இனி உண்டாக கூடாது. அந்தக் கைகள் இனி பீடி சுற்றக் கூடாது. அவள் ஆயிரம் பீடி சுற்றுவாள் என்று சொல்லி அவளை மணமுடித்துக் கொடுக்கக் கல்யாண இரவில் பீடி சுற்றும் அந்தக் கைகளை கணவன் முத்தமிடக் கூடாது”[68].

தன்னைப் போன்று தன் மகளும் வரதட்சணைக் கொடுமைக்கு ஆளாகி தன் வாழ்வை இழந்து வறுமையில் வாடுவதை விட ஊனமாகத் திரிவதே நல்லது என்று எண்ணி கொல்ல முயற்சிக்கும் தாயின் மனநிலையை இன்றைய “சமூக நிகழ்வுகளோடு ஒப்பிட்டுப் படைத்துள்ளார்”.

அறியாமைக் கால அரேபியர்கள் பிறந்த பெண் குழந்தைகளை உயிரோடு புதைத்தனர். நவீன காலத்தில் வரதட்சணைக்குப் பயந்து வயிற்றில் உள்ள கரு பெண் என்று தெரிந்தால் கலைத்து விடுகின்றனர். இதையும் மீறி பிறக்கும் பெண் சிசுக்களுக்குக் கள்ளிப்பாலும், நெல்மணியும் தாய்ப்பாலாகிறது.

இசுலாம் சமயத்தில் கருசிதைவு செய்வதும், பெண் குழந்தையைக் கொல்லுதலும் பாவம் என்று கூறப்பட்டுள்ளது. இதனை,

> “வறுமைக்கு அஞ்சி உங்கள் குழந்தைகளைக் கொலை செய்யாதீர்கள். நாம்தாம் அவர்களுக்கு உணவளிக்கிறோம்: உங்களுக்கும் உணவளிக்கிறோம். உண்மையில் அவர்களைக் கொலை செய்வது பெரும் பாவமாகும்”[69]. (குர்.ஆன்.17:31)

எல்லா சமயத்தவரிடமும் பெண் குழந்தையைக் கொலை செய்தல் பாவமாகவே கருதப்படுகிறது. இச்சமூக அமைப்புகளுள் சில ஆண்களின் ஆதிக்கப் போக்குத் தான் பெண் கொலைக்குக் காரணமாக அமைகின்றது என்பதைத் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதையில் பதிவு செய்துள்ளார். பௌத்தம், சமணம் ஆகிய சமயங்கள் பெண்களைச் சமயத்திற்குத் தடை எனக் கருதின. “பிறப்பாலே மகளிா இழிவுடையவர்கள், மாசுடையவர்கள்”[70] என்று சமணர் பறைசாற்றி மகளிர் வாழ்வை இருளடையச் செய்தனர்.

### 3.11.1.6 பெண்கள் தற்கொலை செய்தல்

இன்பமும், துன்பமும் கலந்தது தான் வாழ்க்கை. சில பெண்கள் வாழ்க்கை இன்பமாக இருக்கும். சில பெண்களது வாழ்க்கையில் வறுமையுடன் துன்பமும் சுழன்று தாக்க வாழ்க்கையே சோகமாகிச் சுட்டெரிக்கும் பாலைவனமாக மாறிவிடுகிறது. பெற்றோர் வறுமையின் காரணமாக வரதட்சணை கொடுத்துத் தங்களின் திருமணத்தை முடித்து வைக்க இயலாத நிலையைக் கண்டு வருந்தி, தங்கள் சோகங்களையும், ஏக்கங்களையும், துன்பங்களையும் ஆசைகளையும் மனதில் தேக்கி வைத்துக் கொண்டு பெற்றோர்களுக்குப் பாரமாக இருக்க விரும்பாமலும், முதிர்கன்னியாக வாழ முடியாமலும் பெரும்பாலான பெண்கள் தற்கொலை செய்து கொள்கிறார்கள்.

இருபதாம் நூற்றாண்டில் தமிழ்ச் சமூகத்தில் பண்பாடும், நாகரிகமும் மேலோங்கித் திகழ்ந்தாலும் இன்று திருமணம் என்பது அதன் புனிதத் தன்மையை இழந்துவிட்டது என்பதில் ஐயமில்லை. அக்கொடிய நோய்க்குப் பலியான பெண்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே இருக்கிறது. இச்சமூகக் கொடுமையை

> “இதை எல்லாம் கேட்டபோது கிணற்றுவாளியின் நீண்ட கயிற்றின் முனையில் அதன் வளையத்தில் என் மரணத்தை நான் கண்டேன். இது எனது இரண்டாவது தற்கொலை முயற்சி. கழுத்தில் கயிற்றின் கண்ணி சுருங்கும்போது வேறுபடுகின்ற உயிரைத் திரும்பிப் பெற்ற வீணாய்த் துடித்துத் துடித்து அடங்கித் தொங்கி நிற்பது கோழைத்தனம்”[71]. (ப.50)

என்று முதிர்கன்னியாக வாழும் ஹமீதா என்ற பாத்திரத்தின் வாயிலாகப் பெண்களின் மனக்குமுறல்களைப் படைப்பில் வெளிப்படுத்துகின்றார்.

தற்கொலை தொடர்பான பண்பாட்டுப் பார்வைகள் பலவாறாக உள்ளன. இசுலாமிய மதத்தில் தற்கொலையை மரியாதையற்றதாகவும், இறைவனுக்கு எதிரான செயலாகவும் கருதப்படுகிறது. யப்பானிய சாமுராய் மரபில் ஒருவர் தோற்பதை விடத் தற்கொலை செய்வது ஏற்றுக் கொள்ளப்படுகிறது. சங்க காலத்தில் உடன்கட்டை

ஏறும் பழக்கத்தில் கணவனை இழந்த பெண்கள் கணவனது சிதையில் தற்கொலை செய்து கொள்ளும் வழக்கம் இருந்தது.

> “எவர் மலையிலிருந்து குதித்து தற்கொலை செய்து கொண்டாரோ அவர் நரகத்தில் எப்பொழுதும் உயரமான இடத்திலிருந்து விழுந்து கொண்டே இருப்பார். எவர் விஷம் அருந்தி தற்கொலை செய்து கொண்டாரோ அவர் கையில் விஷம் இருக்கும். அதை நரகத்தில் எப்போதும் குடித்துக் கொண்டே இருப்பார்”[72]

என்று தற்கொலை செய்வதனால் ஏற்படும் விளைவுகள் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றனர். மனிதனாகப் பிறந்துவிட்டால் அவர்கள் வாழ்வில் பல்வேறு வழிகளில் இறைவன் சோதனை செய்வான் என்பதை இசுலாம் உணர்த்துகிறது. உயிர் என்பது இறைவனின் உடைமை. ஒரு மனிதனை எப்படி அவன் உருவாவதற்கு உயிரூட்டினானோ அதுபோல அவ்வுயிரை எடுக்கும் உரிமையும் அவனுக்கே உண்டு. இறைவனின் உடைமையைத் தனதாக்கிக் கொள்ள மனிதனுக்கு எவ்வித உரிமையும் இல்லை. அவ்வாறு செய்பவர்களுக்குச் சுவர்க்கம் விலக்கப்பட்டுள்ளது என்று தற்கொலை செய்வதை வன்மையாக இசுலாம் கண்டிக்கிறது.

சமயங்கள் தற்கொலை பாவம் என்று கூறினாலும் இந்த வரதட்சணை என்னும் கொடுமையிலிருந்தும் சமூக அவலத்திலிருந்தும் விடுபட வேண்டும் என்ற மனவேதனையில் தற்கொலையைப் பெண்கள் நாடுகின்றனர். திருமண வாழ்வில் அடியெடுத்து வைக்கும் முன் மரணப்படுக்கையைத் தழுவும் பெண்களின் ஏமாற்ற வாழ்வை “மொட்டைக் கடிதம்” என்னும் சிறுகதையின் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

> “ஒரு அநாதையான எனக்குத் துரோகம் செய்த அந்த மனிதன் வாழும் சமூகத்தோடு ஒட்டி வாழ நான் விரும்பவில்லை. இந்த உடலில் துடிக்கும் உயிருக்கும் நான் சொந்தக்காரி அல்ல என்பது எனக்குத் தெரியும். இருந்தும் செய்திருக்கக் கூடாததைச் செய்துவிட்டேன். ஒரு இளம் பெண்ணின் ஒரு ஆசை ஒரு இளைஞனின் அன்பு அரவணைப்பின் சூடு. அது எனக்குக் கொடுத்து வைக்கவில்லை.

> அந்தக் கொல்லாமாவின் கிளையில் தாவணியைக் கட்டி அதில் தூங்கினேன்"[73]. (ப.143)

ஆண் ஆதிக்கச் சமூகத்தின் அவலத்தால் முதிர்கன்னியாக வாழ்வதை விரும்பாத சூழ்நிலையில் மனவேதனையோடும் மரணக் கதவைத் தட்டுகிறார்கள் என்று பெண்களின் தலைவிதியே மாறிப்போகும் அவலத்தைப் படைப்பாளர் படைப்பில் வழி உணர்த்துகின்றார்.

### 3.11.1.7 பெற்றோரின் மனநிலை

பெண் குழந்தையைப் பெற்று வளர்த்து அப்பிள்ளைகளைத் திருமணம் செய்து வைப்பதில் பெற்றோர்களின் நிலைமிகுந்த சிரமத்தை உடையதாக்கி விடுகிறது. குறிப்பாக பொருளாதாரத்தில் மிகுந்த பின்னடைவுடைய குடும்பங்கள் பெண் பிள்ளைகள் பெரும்பாரமாக கருதப்படும் அளவிற்கு மாறிவிடுகிறது. இந்நிலையில் அமைந்த குடும்பச்சூழல் என்பது இசுலாம் சமூகத்தில் அதிகமாக காணப்படுகிறது. இதனைத் தாக்கமாகப் பெற்றமைந்த விளக்கு, தஜ்ஜால் மேல் விழுந்த மலை, ஒரு சூரியன் எரிகிறது. ஓர் இரங்கல் பா, தவம் போன்ற சிறுகதைகளைத் தோப்பில் முகமது மீரான் படைத்துள்ளார்.

'விளக்கு' என்ற சிறுகதையில் வரும் 'மம்மாலிசம் பிள்ளை' சிந்தனையில் மூழ்கியவாறே வருகிறார். அந்த முகத்திலும் துக்கம் கூடு கட்டியிருந்தது. தன் வயது வந்த பெண்ணுக்குத் திருமணம் செய்து வைக்க முடியாத நிலையை எண்ணித் துன்பப்படுவதைத் தனது படைப்பின் வாயிலாகச் சுட்டிக் காட்டுகிறார்.

> "கல்புக்க வேதனையை ஆருட்ட சொல்ல, மண்ணுட்ட சொல்லுயேன்? என்ன சங்கதி?
>
> பெண்ணைப் பெத்தவங்களுக்கு வேதனைக்குக் காரணம் வேறே சொல்லணுமா?"[74] (ப.14)

தன்னுடைய வேதனையை வெளிபடுத்த முடியாத சூழலில் 'மம்மாலிசம் பிள்ளை' தவிக்கும் நிலை இங்கு முழுமையாக உணர்த்தப்படுகிறது. எத்தனையோ பெற்றோர்கள் தங்களது வறுமை நிலையோடு திருமணம் என்ற பாரமும் தங்களை

மூச்சுத்திணற வைப்பதை எண்ணி உயிரற்று வாழும் நிலை இச்சமூகத்தில் நிலவுகின்றது.

இசுலாமியத் திருமணம் என்பது (மஹர்) திருமணக் கொடையை மையமாக வைத்துதான் நடைபெற வேண்டும். இதனை,

> "நீங்கள் (மனம்புரியும்) பெண்களுக்கு அவர்களுடைய மஹர் (திருமணக் கொடை) மகிழ்வோடு கொடுத்துவிடுங்கள். அதிலிருந்து ஏதெனும் ஒன்றை மனமொப்பி அவர்கள் உங்களுக்குக் கொடுத்து அதை தாராளமாக மகிழ்வுடன் புசியுங்கள்"[75]. (அல்குர்ஆன்.)

மேலும்,

> "மணம் முடிக்கும் பெண்ணுக்கு ஒரு பொற்குவியலையே மஹராக கொடுத்த போதிலும் அதிலிருந்து எதனையும் (திரும்ப) எடுத்து கொள்ளாதீர்கள்"[76]. (அல்குர்ஆன். 4:20)

ஆண்கள்-பெண்களுக்குக் கட்டாயமாகக் கொடுக்க வேண்டிய பணம் மஹர் ஆகும். இசுலாம் சமயத்தில் வரதட்சணைக்கு இடமில்லை. இதற்குப் பதிலாக மணமகன்தான் பெண்ணின் பாதுகாப்பிற்கான ஒரு தொகையையோ, பொருளையோ கொடுத்துத் திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்பதே இசுலாம் சட்டம். மஹர் கொடுக்காதத் திருமணம் செல்லுபடியாகாது என்றும் கூறுகிறது. இந்நிலை மாறி வரதட்சணை என்ற பெயரால் கொடுமைகள் அரங்கேறுகிறது. எத்தனையோ பெற்றோர் தங்களது பெண்களின் நிலையை எண்ணி வருத்துமுற்று நிற்கின்றனர். இத்தகு நிலையை "தஜ்ஜால் மேல் விழுந்த மலை" எனும் கதை பெண்களைப் பெற்றவர்களின் மனநிலையைப் பிரதிபலிக்கும் நிலையில் அமைந்துள்ளது.

சமூக நிலையில் சற்றுக் குறைவான வருமானம் வரக்கூடிய தொழில் என்பது மோதினார் பணியாகும். இறைவணக்கம் செய்யக்கூடிய பணியாயினும் இப்பணிக்கு என்று வரும் வருமானத்தின் நிலை குறைவாகும், 'தஜ்ஜால் மேல் விழுந்த மலை' எனும் சிறுகதையில் ஸனபா, ருக்கைய்யா, பாத்திமா என்ற மூன்று பெண்களுக்குத் திருமணம் செய்து கொடுக்க வேண்டும். ஆனால் அதற்குத் தகுந்த பொருளாதார ஏற்பாடு என்பது இல்லாத தந்தையின் மனநிலையை,

"மலைபோல் மூன்று குமரிகள்! தாங்கமுடியாத பளு! ஒன்றை இறக்கி வைக்கணும்! கைப்பிடிப்பார் யாருமில்லை கொழுத்த பணக்காரர்கள் இருக்கும் மஹல்லா! தம் மகளுக்கு லட்சத்துக்கு மேல் கொடுத்துக் காரியத்தை முடித்தார். முத்தவல்லி நீளாக் கைகள்! ஈவிரக்கமற்ற இதயங்கள்![77] (ப. 36)

என்று மலைபோன்று பாரம் தரக்கூடிய பெண்களை இறக்கி வைக்கக் கூடிய அதாவது திருமணத்திற்கு உதவாத இச்சமூகத்தின் நிலையையும் நல்ல பொருளாதார நிலையில் உள்ள மனிதர்களின் கொடுத்து உதவாத சுயநலம் மிகுந்த 'தான்' என்ற உணர்வை மட்டும் மேலோங்கி நிற்கும் மன உணர்வைப் பெற்ற மனிதர்களின் நிலையையும் வெளிப்படுத்துகின்றார்.

பெண்களைப் பெற்று அவர்களை வளர்த்துத் தகுந்த ஒருவனுக்குத் திருமணம் செய்து கொடுக்கும்வரை அவர்கள் படும்பாட்டை இயல்பாக மீரானின் சிறுகதைகள் வெளிக்காட்டுகின்றன.

"மஹல்லாக்காரங்களைக் கண்டீங்களா? ஏதாவது சொன்னாங்களா? இஷாவுக்குப் பின் வீட்டுக்குப் போனவுடன் அவர் மனைவியின் குழி விழுந்த கண்களிலிருந்து வழிந்து கன்னத்தின் மேடு பள்ளங்களில் ஓடிவந்த கண்ணீர்த் துளியோடு வாயிலிருந்து வெளிவரும் சொற்கள், மோதினாரின் கண்கள் நனைந்து போகும்"[78]. (ப. 36)

மோதினாரின் குடும்பம் வறுமையின் காரணமாகத் துன்பம் அடையும் நிலையையும், பெண்களைப் பெற்றவர்களின் உள்ளக் குமுறல்களையும் வேதனைகளையும் இறக்குவதற்குப் பொருளாதாரத்தில் உயர்ந்த நிலையில் உள்ளவர்கள் கூட தயாராக இல்லை என்பதைச் சிறுகதையின் மூலம் எடுத்துரைக்கின்றார்.

இந்திய மண்ணிற்குரிய பாரம்பரிய வழிபாடாக மாறிய தர்ஹா வழிபாட்டின் மூலம் வாழ்க்கையைக் கழிப்பதற்கான ஜீவனாம்சமாகக் கொள்ள மனிதர்கள் இசுலாம் சமூகத்தில் பலர் உள்ளனர். அம்மனிதர்களின் அன்றாட அடிப்படைத் தேவைகள், வாழ்வியலுக்கான ஆதாரங்கள் இத்தர்ஹாவைச் சுற்றியே

அமைந்துள்ளன. படைப்பாளர் மீரான் அவர்கள் ‘ஓர் இரங்கல்பா’ எனும் சிறுகதையில் ‘அத்றாமான்’ என்ற பாத்திரம் தனது வாழ்க்கையைத் தர்காவின் வழி கிடைக்கும் ஏழு ரூபாய் நாற்பத்து ஐந்து பைசா “ஆதாயத்தை மையமாகக் கொண்டு வாழும் நிலையில் தன் மூன்று மகளின் திருமணத்தை எவ்வாறு நடத்துவது என்று புரியாமல் வேதனையோடு வலம் வரும் நிலையை

> “கல்யாணப் பருவத்தை எட்டிப் பார்க்கும் மூன்று பெண் குழந்தை பள்ளிக்கு சென்று கொண்டிருக்கும் ஐந்து குழந்தைகள்.... சங்கிலி போல் நீண்டு நீண்டு போகும் செலவினங்கள்”[79]. (ப.14)

அடிப்படை வசதிகளைக் கூட சரிவர நிறைவேற்றிக்கொள்ள இயலாத சூழலில் தான் பெற்ற பெண்பிள்ளைகள் உரிய வயதை அடைந்தும் திருமணத்திற்கு எந்த ஏற்பாடும் செய்ய இயலாத பெற்றோர்களின் மனநிலையைச் சமூக நிலைக்கு ஏற்பத் தனது சிறுகதைகள் முழுவதும் பறைசாற்றுகின்றனர்.

### 3.11.1.8 சமூகத்தில் பெண்கள் மதிப்பு

சமூகம் பெண் என்பவள் இப்படித்தான் இருக்க வேண்டும் எனப் பல நெறிமுறைகளை வகுத்துக் கொண்டது. ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்களுக்கான சம உரிமையை அளிக்காததோடு அவர்களைத் தங்களின் அடிமைகளாக நடத்தினார்கள். வெளி உலகில் பெண்களை ரசிக்கும் ஆண் வர்க்கத்திற்கு இல்லறம் நடத்த மட்டும் பெண்கள் வரதட்சணையோடு வர வேண்டும் என்று எதிர்ப்பார்ப்பதனால் காட்சிப் பொருளாக மாறிய முதிர்கன்னிகள் பற்றிச் சமூகம் கொண்டுள்ள மதிப்பைத் தோப்பில் முகமது மீரான் தனது படைப்பின் மூலம் புலப்படுத்துகின்றார்.

> “என் அடுத்த வீட்டில் காதர் மைதீனுடைய இளைய மகளை பதினாலாவது வயதில் கட்டிக் கொடுத்தார்கள். கல்யாணம் தொலைவிலுள்ள ஒரு பந்துவின் வீட்டில் வைத்து நடந்தது. சொந்த வீட்டில் வைத்துக் கல்யாணம் நடத்தினால் என்ன என்று எல்லாரும் கேட்டார்கள். அதற்கு அவள் உம்மா என்ன சொன்னாள் தெரியுமா? அடுத்த வீட்டில் ஒண்ணு மூத்து நரைத்திருக்கிறது. அது பெருமூச்சு

> விடும். இம்மாதிரிப்பட்டவளிடம் ஏக்கப் பெருமூச்சில் என் மகளின் வாழ்க்கை நாசமாகப் போய்விடும். அதனால்தான்"[80]. (ப.49)

சமூகத்தில் பெண்ணிற்கு ஏற்ற வயதில் திருமணம் செய்து வைக்காவிட்டால் அப்பெண்ணிற்கு எத்தகு அவப்பெயர் ஏற்படும் என்பதையும், இதன் காரணமாகச் சுற்றத்தார் அப்பெண்ணைப் பற்றி எந்த அளவிற்கு மோசமாகப் பழி சுமத்துவர் என்பதையும் இவ்வரிகள் உணர்த்துகின்றன.

இசுலாம் ஆண்-பெண் என்ற வேறுபாடற்ற சரிநிகரான எவ்வித ஏற்றத்தாழ்வையும் தராத சமயமாகும் என்பர்.

> "ஒருவன் தன் பெண்குழந்தைகளை உயிருடன் புதைக்காமல், இழிவாக நடத்தாமல், ஆண் குழந்தைகள் அவளைவிடச் சலுகைக் காட்டாமல் இருக்கும் மனிதனுக்கு அல்லாஹ் சுவர்க்கத்தைப் பரிசாக வழங்குகின்றன"[81]. (ப.78)

என்று அபூதாவூத் நூலில் கூறியதாக அப்துல் ஸமத் கூறுகிறார். இசுலாம் பெண்களுக்கு மிகுந்த முக்கியம் தருகின்ற சமயமாகத் திகழ்கின்றது. இத்தக சமயத்தில் பெண்கள் சரிநிகராக நடத்தப்படுத்துவது கிடையாது. பெண்கள் அடக்குமுறைக்கு உட்படுத்தப்படுகின்றார்கள் என்று பல குற்றச்சாட்டுகள் முன்மொழியப்படுகின்றது. இந்நிலை ஏற்படக் காரணம் சமயத்தளம் அல்ல. சமூகத்தளம் ஆகும் என்பதைப் படைப்பாளர் மீரான் தன் படைப்பில் காட்டுகின்றார். இசுலாமிய பெண்கள் குறிப்பிட்ட பருவத்தை அடைந்ததும் அவர்களுக்கு வெளியுலகம் பூட்டு போடப்பட்டு வீடு என்னும் சிறையில் அடைக்கப்படுவதைக் தனது சிறுகதை வழியாக வெளிப்படுத்துகின்றார்.

'தலைப்பெருநாள்' என்ற சிறுகதையில் 'ஆபிதல்' எனும் பாத்திரம் தனது 'தாய் வியாத்தும்மாவிடம் தங்களது குடும்பத்தினர் வறுமையை நீக்குவதற்கு நல்ல துணியை வாங்கி உடுத்துவதற்கும்தான் மில்லுக்கு வேலைக்குச் செல்லப் போவதாகவும் அதற்கு அனுமதி தரும்படியும் கேட்கின்றாள்.

> “சுப்ஹானல்லாஹ்! ‘வீயாத்துமா தன் மகளிடமிருந்து இப்படி ஒரு கேள்வியை எதிர்பார்க்கவேயில்லை. ‘உன்னெ நான் மில்லுக்கு அனுப்பினா, அடுத்த வீட்டுக்காரருவ என்ன நெனப்பாங்க?”[82]. (ப.19)

வீயாத்தும்மா என்ற பாத்திரத்தின் வெளிப்பாடு இச்சமூகத்தில் பெண்ணைப் பெற்ற ஒவ்வொரு பெற்றோர்களின் வெளிப்பாடு ஆகும். பெண்களை வெளியே அனுப்பி பக்கத்து வீட்டுக்காரர்களும், அடுத்த வீட்டுக்காரர்களும் என்ன கூறுவார்களோ என்ற பயத்துடன் வாழும் நிலையைச் சமூக நிலைக்கு ஏற்ப பிரதிபலித்துக் காட்டுகின்றார் படைப்பாளர்.

பெண்கள் வெளியே சென்று வேலை பார்ப்பது என்பது இசுலாம் சமூகத்திற்கு விரோதமானது. இதனால் தம்மைப் பற்றி என்ன நினைப்பார்கள் என்று எண்ணுவது ஒவ்வொருவரின் உள்ளத்தில் நிறைந்து உள்ள மடமையான எண்ணமாகும். ஒருபுறம் பெண்ணடிமைத்தனம், ஆணாதிக்கச் சமூகம் என்று தனது சிறுகதையில் கூறியிருந்தாலும் இவற்றிற்கு எதிர்மறையாக பெண் உரிமையை வெளிப்படுத்தும் விதமாக ஆபிதா எனும் பாத்திரத்தைப் படைப்பாளர் காட்டுகின்றார்.

> “இனிமே பட்டினி கிடக்க முடியாது! வயிறு என்னுடையது என் உம்மாவுடையது. பக்கத்து வீட்டுக்குப் பயந்து உம்மா உதைக்குமாம் உதைக்கட்டும்”[83]. (ப.20)

தன்னுடைய நிலையையும் தனது தாயினுடைய நிலையையும் உணர்ந்து இதற்கு மாற்றுவழி வேலைக்குச் செல்வதே. இதனால்தான், தங்கள் பசி, பட்டினி என்ற நிலை ஒழியும். இதற்கு வேலைக்குச் செல்வது தவறல்ல என்ற தீர்க்கமான முடிவை அபிதா எடுப்பதின் வாயிலாகத் தடைகளைத் தகர்கின்றார். பக்கத்து வீட்டிற்குப் பயந்து வாழும் தாய் தன்னை அடித்தாலும் பரவாயில்லை. வேலைக்குச் சென்றே தீர வேண்டும் என்ற ‘வைரதீன்’ பாத்திரத்தை மிக இயல்பாக வெளிப்படுத்துகின்றார் படைப்பாளர்.

> “பத்து வயதான குட்டியெ துலுக்கச்சியோ வெளியே விட மாட்டாங்களே. இந்தப் பெண்ணைப் போய் வேலைக்கு

அனுப்பியிருக்கியாளுவோ, இவளெ வச்சுக் காப்பாத்த கதியில்லையா? இன்னொருத்தி முணுமுணுத்தாள்”[84]. (ப.20)

பெண்ணுக்குத் திருமண வயது பத்து என்று இசுலாம் சமூகம் வரையறுத்துள்ளது. இப்பெண்கள் திருமணமாகும் காலம் வரை அவர்களது வீடே அவர்களுக்கு உலகம் என்ற நிலையை இதன்வழி உணர்த்தப்படுகிறது. வறுமையைப் போக்குவதற்கு உழைப்பதில் எவ்விதமான தவறும் கிடையாது. மற்றவர்க்காக வாழ்வது மூடத்தனம். நமக்கமாக நாம் வாழ வேண்டும் என்ற எண்ணமே மூலதனம் என்ற சிந்தனையை விதைக்கின்றார்.

தங்களது பசியைப் போக்க முன்வராத சமூகத்தார் கூறுவதைப் பொருட்டாக எண்ணாமல் வேலைக்குச் செல்கிறாள் ஆபிதா. தன் தாய் வீயாத்துமாவிடம்,

“என்னெ அடிக்காதே. பசி தாங்குமெத்தான் நான் வேலைக்குப் போனேன்”[85]. (ப.21)

வறுமையே பெண்ணை வேலைக்குச் செல்லும் நிலைக்குத் தள்ளியதையும், இசுலாமிய பெண்களின் கட்டுப்பாட்டையும் பெண்களின் நிலையையும் படைப்பில் வெளிக்காட்டுகிறார். மேலும் இந்நிலை மாற வேண்டும் என்ற நியதியை ஆபிதா எனும் பாத்திரத்தின் வழி காட்டுகின்றார்.

“ஆபிதா! நாளை முதல் நீ மில்லுக்குப் போய் வேலெ செய்
வேலே செஞ்சு பிழைப்பது ஆண்டவனுக்கு விரோதமில்லே”[86]. (ப.22)

என்று வியாத்தும்மா என்ற பாத்திரத்தின் வழி தனது முற்போக்கான சிந்தனையைப் படைப்பாளர் மீரான் வெளிப்படுத்துகின்றார். இசுலாம் பெண் ஆணுக்குச் சரிநிகரானாவள்; எந்தப் பாகுபாடு இல்லை என்று கூறுகிறது. சமயத்தளத்தில் சரியான விகிதத்தில் உள்ள நிலையில் சமூகத் தளத்தில் பெண்களைக் கட்டுப்படுத்தி அடிமை ஆக்குவதை தனது முற்போக்கான கருத்தக்கள் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

படைப்பாளர் தனது சிறுகதையில் எவ்வளவுதான் முற்போக்கான சிந்தனைகளை வெளிப்படுத்தினாலும், ஆணாதிக்கம் மேலோங்கிய இச்சமூகம்

பெண்களை வீட்டிற்குள்ளும், சமூக வெளியிலும் கட்டுப்படுத்துகிறது. இச்சமூகத்தின் சரிபாதியான பெண்கள் அகப்புற போராட்டத்தைக் கருப்பையிலிருந்து தொடங்க வேண்டியுள்ளது. இச்சமூகத்தில் போராடிக் கொண்டிருக்கும் பெண்களின் அவலங்களை அடக்கிக் கொண்டே செல்லும்போது முதுமையில் பெண்களின் நிலையையும், விதவையையும் சமூகத்தேடல் கொண்ட தோப்பில் முகமது மீரான் தனது படைப்பில் வெளிப்படுத்தும் பாங்கை அறியலாம்.

### 3.11.1.8.1 விதவை நிலை

நம் சமூகம் பெண் என்பவர் ஆடவனைச் சார்ந்த ஒரு சார்புப் பொருள் என வரையறுத்துள்ளது. ஆனால் எந்த ஆணும் எந்தப் பெண்ணையும் சார்ந்தோ அல்லது எந்தப் பெண்ணின் உதவியுடனோ காலந்தள்ள வேண்டியுள்ளவனாக வரையறுக்கப்படுவதில்லை. ஆடவனைச் சார்ந்து வாழ்வதும் ஆடவனுக்குத் தொண்டு செய்வதுமான வாழ்க்கை பெண்ணுக்கே உரியது என மனுசாஸ்திரம் கூறுகின்றது. இச்சமூகத்தளத்தில் கணவனை இழந்த பெண்ணை விதவை கைம்பெண் என்பர். இத்தகு விதவைகளின் மனமானது இன்றைய சூழ்நிலையில் அனுபவிக்கும் துயரங்களைப் பற்றியும் விதவைப் பெண்களின் மனஉணர்வைப் பெண்களே உணராத நிலையைப் பற்றியும் படைப்பாளர் எடுத்துரைக்கின்றார்.

கணவனை இழந்து குடும்பப் பொறுப்புக்களைச் சுமக்கும் பெண்கள் சமுதாயச் சிக்கல்களுக்கு ஆளாகின்றனர் என்பதை ‘இறக்கை இழந்த பறவைகள், கொலுசு அணிந்த பாதங்கள், தங்கராசு, பேரன், அஸ்தமனம் போன்ற சிறுகதைகள் குறிப்பிடுகின்றன.

‘இறக்கை இழந்த பறவைகள்’ என்ற சிறுகதையில் ஸபியா என்பவள் கணவனை இழந்த நிலையில் வறுமையின் காரணமாகத் தன் குழந்தையின் பசியைப் போக்குவதற்காக வேறு வழியின்றி வெளியே செல்கிறார். ஆனால் இச்சமூகம் அவளைப் பழிதூற்றுகிறது.

“நீ மஹ்மூது சம்சாரம்தானே?

ஸபியா ஆமாம் என்ற பொருளில் தலையசைத்தாள். பெருவிரலால்

> மொசைக் தரையில் சுரண்டினாள். அவன் மவுத்தாகி ஆறுமாதம் தானே ஆச்சு. அதுக்குள்ள பெட்டியைத் தூக்கிட்டு இறங்கிட்டியே வெட்கம்தான் இல்லையா?"[87] (ப.103)

இசுலாம் சமயத்தில் கணவனை இழந்த பெண்களுக்கு 'இத்தா' என்ற முறை உள்ளது. "இத்தாவில் உள்ள பெண்கள் குறைந்தது ஒரு வருடமாவது வெளியே செல்லக்கூடாது. ஆனால் வறுமையின் காரணமாக ஸபியா வெளியே செல்கிறாள். இசுலாம் சமயத்தால் வரையறுக்கப்பட்ட 'இததர்' (தனிமைப்படுத்துதல்) நாற்பது நாள் அல்லது மூன்று மாதம் மட்டும் தான் காரணம் பெண் கருவுற்றிருக்கிறாளா? இல்லையா? என்பதை அறிந்துக் கொள்வதற்கு கருற்றிருந்தால் குழந்தைப் பெற்ற பின்பு மறுமணம் செய்து வைக்க இசுலாம் வலியுறுத்துகிறது. ஆனால் ஒரு வருடம் என்பது சமூகத்தால் வரையறுக்கப்பட்டதாகும். "விதவைப் பெண்களுக்குச் சமூகம் விதிக்கும் கட்டுப்பாடுகள் பலவாகும். அவர்கள் நகை அணிதல் கூடாது. எளிய உடைதான் உடுத்த வேண்டும். தலைவன் மொட்டை அடித்துக் கொள்ள வேண்டும் என்பன மரபு வழி வந்துள்ள கொடுமையான திட்டங்களாகும்"[88] என ச. சிதம்பர சுப்பிரமணியன் விதவைகள் நிலைகள் பற்றிக் கூறுகிறார்.

"பேரன் என்ற சிறுகதையில் குட்டிம்மாவில் தன் கணவனை இரண்டு குழந்தைகளை வைத்துக் கொண்டு தனக்கு உதவ யாரும் முன்வராத நிலையில் துன்பப்படுகிறாள். இறுதியில் தன் பிள்ளைகளும் மனைவி மக்களோடு தனியாக சென்றுவிட்டதால் கவனிக்க யாருமில்லாமல் தனிமையில் வாழுவதை

> "சாதுவான குட்டிம்மா கணவனை இழக்கும்போது பிள்ளைகள் இரண்டும் சிறுவர்கள். சிற்றறுதலியான குட்டிம்மா. ரொம்பவும் செல்லம் கொடுத்துப் பிள்ளைகளைக் கெடுத்துவிட்டாள் என்ற ஊர்வாய் முணுமுணுத்தது. இப்போது படுக்கையில் முடங்கிவிட்ட அவளைக் கவனிக்க அவர்கள் இல்லை. அவனவன் பாட்டுக்கு மனைவி மக்களோடு எங்கெங்கேயோ? பிள்ளைகள் பற்றிக் கேட்டால், "செத்தணுவோ' என்று பல்லை நெரிப்பாள்"[89]. (ப.363)

கணவனை இழந்த துயரம் ஒருபுறம் இருக்க தான் பெற்ற பிள்ளைகளும் தன்னைக் கவனிக்காமல் விட்டுவிட்டுப் பேனதை எண்ணி மனவேதனையோடு முதுமையைக்

கடத்திக் கொண்டிருக்கும் குட்டிம்மாவின் அவலத்தைத் தன் சிறுகதையின் வாயிலான எடுத்துக்காட்டுகின்றார். இச்சமூகத்தின் ஆதிக்கத்தின் சாத்திரங்களின் ஆதிக்கமும் மக்களைக் கட்டுப்படுத்தத் தொடங்கியதனால் பெண்களுக்குக் கைம்பெண் நோன்பு என்ற துயரம் எழுந்தது. இந்த இருபதாம் நூற்றாண்டிலேயே பெண்களுக்கு இந்த நிலை என்றால் பழங்காலத்தில் பெண்களின் நிலை எவ்வாறு இருந்திருக்கும் என்பதை ஊகிக்க முடிகிறது.

சமூகம் விதவைப் பெண்ணுக்குக் கட்டுப்பாடுகள் பல விதித்தாலும் அவளுக்குள்ள மனஉணர்வு யாராலும் அறியமுடியவில்லை. தனக்குத்தானே கட்டுப்பாடுகளை விதித்துக் கொண்ட பெண்ணின் உணர்வுகள் தன்னை அறியாமல் வெளிப்படுகிறது. இதனை ‘அஸ்தமனம்’ என்ற சிறுகதையில்

> “அவளுக்கும் ஓர் ஆடவனுடைய வேர்வை நாற்றம் முகர ஆசை தோன்றியதில் தவறு இருப்பதாக எனக்குப் படவில்லை. எனக்கும் மிருது மாமிசத்தில் கையைப் படரவிடத் தாகம் இருக்கத்தான் செய்தது”[90]. (ப.498)

விதவை என்ற நிலையில் சமூகக் கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொண்டாலும் அவளுடைய, மனஉணர்வு வெளிப்பட்டுவதைப் படைப்பில் படைத்துள்ளார். கணவன், மனைவி இருவருள்ளம் எவரேனும் ஒருவர் முந்தியும், மற்றொருவர் பிந்தியும் இறப்பது இயல்பான நிகழ்வாகும். மனைவியை இழந்த ஆடவனை மணமகனாக்கிப் பார்க்கும் இச்சமூகம். கணவனை இழந்த பெண்ணை அலங்கோலமாகச் செய்து பார்க்கும் சமூகக் கொடுமையைச் சிறுகதைகளில் ஆங்காங்கே படைப்பாளி வெளிப்படுத்துகின்றார். இக்கொடுமையை

> “செம்பொற் சிலை இக்காலே
> கைம் பெண்ணாய்ப் போனதாலே
> திலகமோ குழலில் மலர்களோ அணியின்
> உலகமே வசைகள் - பலவுமே புகலும்....
> தரையிற் படுத்தல் வேண்டும்
> சாதம் குறைத்தல் வேண்டும்
> தாலியற்றவள் - மேலழுந்திடும்
> மேலின் அக்ரமம் - ஞாலம் ஒப்புமோர்”[91]. (பாடல் 99, 100)

என பாரதிதாசன் கருத்தோடு ஒப்புநோக்கத்தக்க வகையில் மீரான் படைப்புகள் அமைந்துள்ளன. பகுத்தறிவு நோக்குடன் கைம்மைத்துயரை நீக்க வேண்டும் என்று பாடுகிறார். பெண்ணுக்குத் தனி நீதி காணும் இச்சமூகம் மாறவேண்டும் என்றும் கைம்பெண்களுக்கு மணமுடிக்க வேண்டும் என்றும் கூறுகிறார். இதனையே இசுலாம்,

"தர்மங்களில் தலைசிறந்தது எது தெரியுமா? விதவையாகி உன்னிடம் திரும்பி வந்த உன் மகள் அல்லது திருமண விலக்காகி, தன்னைப் பராமரிக்க உன்னைத் தவிர வேறு நாதியற்று உன்னிடம் (அடைக்கலம் நாடி) வந்த உன் மகள் (உதவி நாடி வந்த மகளுக்குச் செலவு செய்யும். பணம்தான் சிறந்த தானம்"[92] என்று விதவைப் பெண் நிலைப் பற்றி கூறுகிறது. விதவை என்று ஒதுக்காமல் அவளுடைய உணர்வுகளுக்கு மதிப்பளிக்க வேண்டும் என்று இசுலாம் கூறுகிறது.

### 3.11.1.8.2 முதுமை நிலை

பெண்ணாகப் பிறந்தது முதல் இறப்பு வரை பல்வேறு கொடுமைகளுக்கு ஆளாக நேரிடுகிறது. ஒருபுறம் ஆணாதிக்கத்திற்கு உட்பட்டு அடிமையாகவே வாழ்தல். மறுபுறம் முதுமையில யாரும் உதவாத நிலை. இப்படி பல்வேறு கொடுமைகளை அனுபவித்து இறுதியில் இறக்கக் கூடிய நிலையையும், வாழ்வின் எல்லா நிலைகளையும் கடந்து முதுமையில் வாழும் மனிதனின் நிலையையும் மீரான் தனது படைப்பின் வழியாக வெளிக்காட்டுகிறார்.

"கத்தச் சோறு" எனும் சிறுகதையில் 'சலீமா' என்னும் பாத்திரம் இறந்தவர்களுக்குச் செய்யும் சடங்குகளில் பரிமாறப்படும் கத்தச்சோறு என்னும் உணவை உண்பதற்காக எண்ணி இறந்துபோன மைதீன்பிள்ளை என்பவர் வீட்டிற்குச் செல்ல நினைத்து எவ்வளவோ முயன்றும் 'சலீமா' என்ற வயோதிகமான பெண்ணால் சொல்ல இயலாத நிலையை மிக எதார்த்தமாக வெளிப்படுத்துகினக்றார். முதுமை என்ற சுமையோடு கவனிப்பாள். சலீமை என்ற பாத்திரத்தின் இயலாமையையும்,

> "நேற்றுப் பகல் கிழங்குக்காரி – நாடாத்தி தந்து குடித்த கஞ்சியும் சுட்ட கருவாடும்தான் வயிற்றுக்குள் (ப.40)
>
> பசி நெருப்புக் குண்டம் வளர்ந்துக் கொண்டிருந்தது"[93]

என்ற வரியின் வழி பசிக்கொடுமையையும், உறவுகள் பராமரிக்காத நிலையில் உதவிக்கு யாருமற்ற அநாதையாய் சாலை ஓரக் குடிசையில் வாழும் இவ்வயோதிக நிலையில் உள்ள மனவேதனையின் வெளிப்பாட்டை

> "நாளைக்கு உங்களுக்கும் இதே நெலமதான் புள்ளகளே. உங்களையெல்லாம் விட நான் நலல தெம்பாக இருந்தவதான் இன்னைக்கு எல்லாம் போய் இந்தச் சாலையோரம் சாவை எதிர்பார்த்துக் கிடக்கியேன்"[94]. (ப.40)

என முதுமையில் சமூகத்தில் அநாதையாக விடப்பட்ட ஒரு பெண்ணின் மன உணர்வை சமூகத்தளத்தோடு பிரதிபலித்துக் காட்டுகிறார்.

முதுமைக் கோலம் என்பது எல்லோருக்கும் உரியது. அது எப்படியாயினும் வந்தே தீரும். இளமை என்பது நிலையான ஒன்றல்ல. உடல் திறன் என்பதும் நிலையானது அல்ல. ஒரு காலகட்டத்தில மிகுந்திருந்த உடல்திறனும் செயல்பாடுகளும் எனக்கு அடங்கியதுபோல நாளைக்கு இதே நிலைதான். உங்களுக்கும் என்று சலீமான் என்ற பாத்திரத்தின் வாயிலாக நிலையாமைக் கருத்தைப் படைப்பாளர் நிலைநாட்டுகின்றார். மேலும் 'கத்தச்சோறு' சிறுகதையை அடியொற்றியே 'ஒரு தெருவின் சுய சரித்திரத்திலிருந்து' எனும் சிறுகதையில் '∴பாரின் மைம்பாத்து' என்ற கதைமாந்தரின் வாயிலாக முதுமையில் வறுமையைப் போக்க வீடுகளுக்குத் தண்ணீர் எடுத்துக் கொடுத்து அதன் மூலம் தன் வாழ்க்கையைக் கழிப்பதை,

> "மைம்பாத்து நான்கைந்து வீடுகளுக்குத் தண்ணீர் எடுத்துக் கொடுப்பாள். அவள் கொடுக்கும் தண்ணீரை யாரும் குடிப்பதற்கோ, சமையலுக்கோ பயன்படுத்த மாட்டார்கள். பிற உபயோகங்களுக்குப் பயன்படுத்துவார்கள்"[95]. (ப.128)

முதுமையின் அலங்கோலம் காரணமாக அவள் எடுத்துக் கொடுக்கும் தண்ணீரைக் கூட பிற உபயோகங்களுக்குப் பயன்படுத்தும் மக்களின் மனநிலையைப் படைப்பில் பதிவு செய்கின்றார்.

காலம் இளமை எனும் சாயத்தை உறிஞ்சி முதுமை எனும் இருளைத் துப்பக் கூடிய வல்லமை உடையது. இம்முதுமை இருளில் தனக்கு உதவும் என்ற நிலையில் வளர்த்த பிள்ளைகளும் இறுதியில் குப்பைகளோடு குப்பையாகத் தெருவில வீசி எறிந்ததை ‘சன்னதியில்’ என்ற சிறுகதையில்,

> “மூன்றாவது மகனும் நாலாவது மகனும் கைவிட்ட நிலையில்...... சிந்தனைக் குழப்பத்தால் தூக்காம் வராத அன்றைய இரவில் இரண்டு பேர் தன்னைத் தூக்கி உயர்த்துவதாக உணர்ந்தார். பயந்து அலற நினைத்தார். ஒருவன் வாயைப் பொத்திப் பிடித்துக் கொண்டான். பள்ளிவாசல் சுற்றுச்சுவரில் ஏறிச் செல்லும் நுழைவாசல் ஓரத்தில் தன்னைக் குப்பையைப் போல் கொட்டும்போது கொட்டியவன் சொன்னதை மறக்கவில்லை. இஞ்செ கிடந்து செத்தொளியும்”[96].
>
> (ப.291)

முதுமையின் நிலையில் இருப்பவர்கள் தங்களுக்குச் சுமையாகிவிடுவார்கள் என்று எண்ணி வெறுத்து ஒதுக்கும் அவலத்தைத்தனது சிறுகதைகளான ‘அன்புக்கு முதுமை இல்லை’, துறைமுகம், சுருட்டுப்பா, வாரிசு, கடிகாரம், பண்டமாற்று, தங்கவயல் ஆகியவற்றில் எடுத்துரைக்கின்றார்.

## 3.9 ஆணாதிக்கப் போக்கு

குடும்பத்திலும் சமூகத்திலும் ஆண், பெண்ணைத் தன் ஆதிக்க உணர்வினால் அடக்கியாளும் குணம் கொண்டவனாக இருக்கிறான். ஆணின் ஆதிக்கப் போக்கினால் பெண் பல கொடுமைக்கு உள்ளாகி, அவளின் வாழ்க்கையையும் எதிர்கால கனவுகளையும் சிதைவுக்கு உள்ளாக்குகின்றன். பெண்ணுக்கும் மனம் உண்டு என்பதை மறந்து சுயநலமே பெரிதாக எண்ணிக் கொடுமைகளுக்கு உட்படுத்துகின்றான்.

> “ஆடவன் பெண்ணுரிமையைக் கடிந்ததற்குக் காரணம் ஆணுலுகின் தன்னலமே. பெண் காமப் பொருளாகவும், பணியாளாகவும் கொண்டவர்கள் தொட்டு பெண் வலிமை இழக்கலானாள். ஆண் கொடுமை மெலிய பெண்ணின் உரிமைகளைப் பரித்தால் செய்தன”[97]

என்று நாஞ்சில் ஆனந்தன் ஆணின் ஆதிக்கத்தை, பெண்ணின் கொடுமைகளைப் பற்றியும் கூறுகிறார். குடும்பத்தில் ஆணின் ஆதிக்க உணர்வை மேலோங்கும் போது பெண் துன்புறக் காரணமாக அமைகின்றது. மேலும், "ஆணாதிக்கச் சமூகம் இது. இதில் பெண்களுக்கு இடப்பட்ட கட்டுப்பாடுகள் நாளடைவில் இறுக்கமடைந்து பெண் தனது சகல உரிமைகளையும் இழந்தாள். ஆணின் உடைமைப் பொருளானால் பெண். தந்தை, கணவன், சகோதரன், மகன் எனப் பிறப்பு முதல் இறப்பு வரை ஆணின் அதிகாரத்திற்கு உட்பட்டவளானாள். பல நூற்றாண்டுகளாக இது தொடர்வதால் தன் சொந்த இன்பங்களைவிடக் குடும்பத்தின் மரபுக்கும் தந்தையின் போலித்தனமாக மானத்திற்கும் மடங்கிப் போனாள்"[98]. என்கின்றார் கி. மைதிலி. ஆணாதிக்கப் போக்கினால் பெண்கள் படும் துன்பத்தை முகமது மீரான் தமது கதைகளின் மூலம் கூறுகின்றார்.

'துறைமுகம்' என்ற சிறுகதையில் 'அலி' என்ற பாத்திரம் தன் தாயின் ஆசைக்காக கதீஜா என்ற பெண்ணைத் திருமணம் செய்து விட்டு விட்டுப் போனதை,

> "மாய்ந்து போன ஒரு இரவில், பெயர் மட்டும் நினைவுள்ள அவள் கழுத்தில் தாய் இறக்காமல் இருப்பதற்காகத் தாலி கட்டி உணர்ச்சி இல்லாத மெய் சிலிப்பில்லாத மூன்று இரவுகளை உந்தித் தள்ளிய நினைவுகள்"[99]. (ப.79)

ஆணின் ஆதிக்கப் போக்கினையும் பெண்களை இழிவுபடுத்தி அடிமைப்படுத்தும் தன்மையையும் திருமணம் என்ற பெயரில் பெண்களைச் சூறையாடும் சுயநலத்தையும் ஆசிரியர் சுட்டிக் காட்டுகின்றார்.

சமூகத்தில் இரண்டாம் பாலினமாகக் கருதப்படும் பெண்களை ஆண்கள் அபலைகளாக நிறுத்தும் கொடுமை காலந்தோறும் நடைபெற்று வருகிறது. கணவனின் சந்தேகங்களுக்கு ஆட்பட்டுத் தன் வாழ்க்கையை இழந்த ஒரு பெண்ணைப் பற்றி "தலையில் துண்டு கட்டும் பெண்" என்ற சிறுகதையில் வெளிக்காட்டுகின்றார்.

> "அந்தக் கண்டக்டரோட பேசிக்கிட்டு நின்னதைப் பார்த்தார்.
> அன்று முதல் எம்மேல சந்தேகம்

உனக்கும் அவனுக்கும் தொடர்புண்டா?
இல்ல சார்.
பின்னே எதுக்கு சந்தேகம்...?
அதுதான் தெரியல்ல. எதுக்கு அவனுட்ட பேசினயென்று
தெனமும் கொடுமைப்படுத்துவான்”[100]. (ப.623)

என பெண்களின் அழகெல்லாம் ஆண்களின் பார்வைக்காக உருவானதாகவும், ஆணாதிக்கச் சமூகத்தில் ஒரு பெண் தனியாக வாழமுடியாது என்பதாகவும் படைப்பாளர் தனது வரிகளில் கட்டமைத்துள்ளார். பெண் பாலியல் ரீதியிலும், கருத்தியல் ரீதியிலும் ஒடுக்கப்பட்டு வருகிறாள். பொருளாதார ரீதியில் பெண் ஒடுக்கப்பட்டாலும் சமூகரீதியில் பெண் இன்னும் அதிகமாக ஒடுக்கப்படுகின்றாள். ஆண் தலைமைச் சமூகத்தால் பெண் மிகப்பெரிய வன்முறைகளைச் சந்திக்க நேர்கின்றது. பெண் தன்னுடைய உரிமைகளையெல்லாம் இழந்த சூழலில் சமூக அமைப்பில் இரண்டாம் நிலையை அடைந்தாள். இதுவே பெண்களின் சமூக நிலையாக இருப்பதைப் படைப்பின் வழியாக எடுத்துரைக்கின்றார்.

இன்றைய சமூகத்தின் சாத்திரங்கள், சடங்குகள், சாதிகள், பொருளாதார அமைப்புகள் அனைத்தும் பெண்களுக்கு எதிரானதாகவே செயல்படுகின்றன. ஆணாதிக்கச் சமூகத்தில் பெண்களின் திறமைகள் மட்டுமல்ல அவர்களின் இளமைகளும் வீணாகிப் போவதை எண்ணிப் பெண் சமூகமே கொதித்தெழத் தொடங்கிவிட்டார்கள். இக்கொடுமையைக் கண்டு வெகுண்டெழும் பெண்களின் மன உணர்வாகப் படைப்பாளர் எண்ணம் வெளிப்படுவதைக் கீழ்வரும் வரிகள் சாட்சியளிக்கின்றன.

“அப்புறம் என்ன? குடி மயக்கிலெ கெடந்தான்; தூக்கமில்லாத அந்த ராத்திரி எனக்குச் சாதகமாக இருந்தது. இனி அவன் எந்தப் பெண் மேலயும் பழிப்போடப்படாதுன்னு நெனச்சேன்”[101]. (ப.344)

பெண் தன்னுடைய வாழ்வை நிலைநிறுத்திக் கொள்ள முடியாத நிலையில் ஆண் சமூகத்திற்கு எதிராக செயல்படுவதைச் சிறுகதையில் உணர்த்துகின்றார். தனக்கு ஏற்பட்ட கொடுமையைப் போன்று மற்றப் பெண்ணுகுக்கு ஏற்படக்கூடாது என்று

எண்ணி ஆதிக்கக் கணவனைக் கொலை செய்த பெண்ணைப் பற்றி ‘குட்டி ஆடு’ சிறுகதையில் வெளிப்படுத்துகின்றார்.

கணவன் கொடியனவாக இருந்தபோதிலும் கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் என்ற நம்பிக்கை நம் நாட்டுப் பெண்களிடத்தில் தொன்று தொட்டு இருந்து வந்துள்ளது. ஆண் எப்படிப்பட்டவனாயினும் அவனோடு இறுதிவரை வாழ்வதையே தமது கடமையாகக் கொண்டிருந்தனர். எனவே நம் பெண்களுக்குத் திருமணம் என்ற சமுதாய உறவு கழுத்தில் கட்டப்பட் சுருக்குக் கயிறாக அமைந்த போதிலும் அவர்களால் அதிலிருந்து விடுபடமுடியவில்லை. இவ்வாறு ஆண்களின் கைப்பாவைகளாக வாழும் பெண்களைப் பற்றி சிறுகதையில் வெளிப்படுத்துகின்றார்.

கணவனின் சந்தேகத்தால் தனித்துவிடப்பட்ட ஒரு பெண்ணின் அவலத்தையும் ஆணாதிக்கப் போக்கையும்

> “அவன் புள்ளையை வயிற்றில் தாங்கிக் கொண்டு அவனைத் தேடித் திரிந்தேன். திசையன்விளையில் ஓட்டல் வச்சிருக்கான். அங்கெ போனேன். அங்கதான் நாலாவது பொண்ணு பாத்து வச்சிருந்தான். அவனுட்டெ சண்டை போடல்ல. அன்பா பேசினேன். மனைவியாகக் கூட காட்டிக்கிடல்ல. எவ்வளவோ பேசி பார்த்தேன். மசியல. அவன் குழந்தையே இல்லேண்ணு மறுத்திட்டான். கருக்கலைச்சிட்டுப் போனா என்னையும் சேர்த்திக்கிடுவானாம்”[102]. (ப.344)

என்கிறார். கணவனின் கருவைச் சுமந்த நிலையில் தனிமையில் விடப்பட்ட பெண்ணின் மன குமுறல்களையும், பெண்கள் போகப் பொருளாக மட்டும் கருதப்படுகிறாள் என்பதையும். மீரான் தன் படைப்புகளில் அறிய முடிகிறது. பெண்களுக்குத் தனி உணர்ச்சி, சிந்திக்கும் திறன் போன்றவை இருப்பதாக ஆண்கள் உணருவதில்லை. இப்படி ஆண்களின் கைப்பாவைகளாக வாழும் பெண்கள் அண்களின் தன்னிலைப் போக்கும் ஆட்டுவிக்கும், மனப்பான்மையும் புரிந்திருந்தும் பெண்கள் தன் மனக்குமுறல்களை வெளியிட்டாலும் அது சிறு முனகலாக வெளிப்பட்டு ஆண்களின் ஆணவத்தால் நசுக்கப்பட்டுவிடுகிறது என்பதைத் தோப்பில் முகமது மீரான் தன் படைப்பில் ஆங்காங்கே உணர்துகிறார்.

### 3.10 பலதார மணம்

சமூகத்தில் பெண்களுக்கு ஏற்படும் கொடுமைகளுள் ஒன்று பலதார மணம். இன்றைய சமுதாயத்தில் ஆண்கள் மட்டுமே எல்லாவித உரிமையினையும், அதிகாரத்தையும் பயன்படுத்துகின்றனர். திருமணத்தின் பிறகு ஆண்தான் பெண்ணின் வீட்டிற்குச் சென்று அவளோடு குடும்பம் நடத்துவான் பெண் வீட்டில் பணிவிடைகள் செய்வாள். இந்த சூழலில் ஒடுங்கிய அவன் மனம் குரூரமாக சிந்திக்கத் தொடங்கியது. ஆண், பெண் என்ற வேறுபாடு வலுப்பெறத் தொடங்கிய தன்னுடைய இனத்தில் உள்ள ஒருவன் தலைவனாக இருந்தால்தான் தன்னுடைய ஆசைகளை, தேவைகளைச் சுதந்திரமாக செய்யமுடியும் என்ற எண்ணம் தோன்றியது முதல் பெண்ணின் சுதந்திரம் பறிக்கப்பட்டது.

அதற்குப்பின் வந்த காலக்கட்டங்களில் ஆண் எத்தனை பெண்ணை வேண்டுமானாலும் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்ளலாம். ஆனால் பெண் அவ்வாறு செய்ய இயலாது என்ற கட்டுப்பாடுகளை நடைமுறைப்படுத்திப் பெண் அடிமைப்படுத்தப்பட்டாள்.

புராணக்கதைகள், காப்பியங்கள், பிற இலக்கியங்கள் ஆகியவற்றில் பலதார மணம் பற்றிக் கூறப்பட்டுள்ளது. இராமனின் தந்தை தசரதனுக்கு அறுபதாயிரம் மனைவியர் இருந்ததாகக் கம்பராமாயணம் சுட்டுகின்றது. சீவகசிந்தாமணியில் சீவகன் எண்மரை மணந்து 'காமதிலகன்' என்ற பட்டத்தையும் பெறுகிறான். இங்குச் சீவகன் தன் மனைவியை விட்டு வேறு பெண்களை மணம்முடித்த போதும் அவனை எவரும் இழிவாகக் கருதவில்லை. மாறாக மன்னன் நிலையில் வைத்துப் போற்றுகின்றனர். இது பலதார மணம் சமூகத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்டிருந்ததைக் காட்டுகிறது. இத்தகைய போக்கு ஆணாதிக்கச் சமூகத்தையே காட்டுகிறது.

பலதார மணத்தால் அதிக துன்பத்திற்கு ஆளாவது பெண்கள் என்பதை 'உம்மாவின் ருஹ்'. சாயமுகங்கள், குட்டிஆடு, ஏணி போன்ற சிறுகதைகளின் மூலமாக இச்சமூக அவலத்தை எடுத்துக்காட்டுகிறார்.

> "உம்மாவும் மல்லுக்கட்டித்தான் வாழ்ந்திருக்கிறாள். ஒரே வீட்டில் ஒரு கணவனின் இரு மனைவிகளில் ஒருத்தியாக"[103] (ப.261)

ஆண் இனம் தனது இன்ப நுகர்வுக்காகப் பெண்களைப் போகப் பொருளாக மாற்றுகிறது. திருமணமான குடும்பப் பெண்களும் இத்தகைய கொடுமைகளில் இருந்து விலக்குப் பெறமுடியவில்லை. அதுவும் கணவன்மார்களாலேயே வல்லறவுக்கு ஆட்படுத்தும் அவலநிலை இருந்திருக்கின்றது என்பதையும் படைப்பாளர் தனது படைப்புகளில் காட்டியிருக்கின்றனர்.

ஆணுக்கு ஒரு நீதி, பெண்ணுக்கொரு நீதி என்று இச்சமூகம் வரையறுத்துள்ளது. விதவையின் மறுமணத்தை ஆதரிக்காத இச்சமூகம் ஆணின் பலதார மணத்தை அங்கீகாரம் செய்கிறது. பெண் இறந்துவிட்டால் அல்லது விவாகரத்துச் செய்தால் மறுகணம் மணமகனாக உருமாறுகிறான் ஆண். ஆனால் பெண் விதவை அல்லது வாழ்வை இழந்தவள் என்ற பெயரோடு வாழ வேண்டியுள்ளது.

> “நான்காவதாக மனைவி என்று சேர்த்துக் கொண்டவள் மவுத்தானது. இரண்டு ஆண்டுகளுக்கு முன், ஒரு நோம்பு முதல் மனைவி ஒரு பகட்டுக்காரி. வேறு ஒருவனோடு ஓடிப்போனாள். இரண்டாவதாகச் சேர்த்துக் கொண்டவளை விரட்டி அடிக்க வேண்டியதாயிற்று.... தன்னுடைய ஆண்மையைக் கேள்வி கேட்பதாக இருந்தது. நாற்பத்து எட்டாவது வயதில் மூன்றாவதாகச் சேர்த்துக் கொண்டவள் ஒரு சின்னம் சிறு பொண்ணு”[104]. (ப.314)

மேற்குறித்த வரிகளில் ஆண் தனது நாற்பத்து எட்டாவது வயதில் மணமகனாக மாறியதையும், ஆணாதிக்கப் போக்கின் வெளிப்பாட்டையும் ‘சாயமுகங்கள்’ என்ற படைப்பின் வாயிலாக வெளிப்படுத்துகிறார்.

இசுலாம் பலதார மணத்தை ஆதரிக்கிறது. அதுபோல கிறித்தவர்களும், யூதர்களும் பெரிதும் போற்றும் தாவீது ராஜா, ஆப்ரகாம் யாக்கோபு மற்றும் ஏராளமான தீர்க்கத்தரிசகள் பல மனைவியருடன் வாழ்ந்ததாகப் பைபிளிலும் யூத வேதங்களிலும் கூறப்பட்டுள்ளது.

## 3.11 தொகுப்புரை

வரலாற்று முறையில் ஆணாதிக்கத்தையும், அதற்கு எதிரான போராட்டத்தையும் கண்டறிய வேண்டுமாயின் பெண்களின் பண்பாடு. நாகரிகம், வழக்காறு போன்றவற்றையும் ஆராய வேண்டும். அப்பொழுதுதான் எவ்விதமான போலித்தனமுமின்றி எதார்த்தத்தைக் காணமுடியும்.

குடும்ப நிலைகளில் மட்டுமல்லாமல் சமுதாய நிலைகளிலும் பெண் பலவிதச் சிக்கல்களுக்கு உள்ளாகின்றாள். உறவுமுறைகளால் பெண் பல சிக்கல்களுக்கு ஆளாகின்றார்கள். ஆணிற்குரிய திருமணத் தகுதிகளாகக் சிறந்த ஆண்மகன், ஊதியம், கல்வி போன்றவையும் பெண்ணிற்குரிய தகுதிகளாக வரதட்சணையும் எதிர்பார்க்கப்படுகின்றன. ஆணின் திருமண எதிர்பார்ப்பு நிறைவேறுகின்றது. பெண்ணின் எதிர்ப்பார்ப்புகள் ஏமாற்றமடைகின்றன.

பெண்ணியம் என்றால் ஆண்களை எதிர்ப்பது என்ற எண்ணம் சமூகத்தில பரவலாக உள்ளது. உண்மையில் பெண்ணியத்தின் நோக்கம் ஆணாதிக்கத்தால் உரிமையிழந்து அடிமையகளாக வாழும் பெண்ணினத்திற்கு விழிப்புணர்வூட்டி ஆண்களுக்கு நிகரான உரிமைகளைப் பெற்றுத்தருவதாகும்.

ஆரம்பத்தில் மணவாழ்வு, குடும்பம், கற்புநிலை ஆணின் தனித்தன்மை ஆகியவற்றைக் கூறி பெண்ணை அடிமைப்படுத்தி வைத்திருந்தனர். பெண்ணைத் தன் இன்பநுகர்வுப் பொருளாகவும், உடைமைப் பொருளாகவும் கொண்டிருந்தனர். ஆண்கள் பாலுறவு நிலையில் பெண்களின் மீது செயற்கைப் பண்புகளைத் திணித்து அவளை அடக்கியாண்டும், தன் ஆதிக்கத்தைச் செலுத்தியும் வந்திருக்கின்றனர். அந்நிலையில் இருந்து பெண் சமூகத்தை விடுவிக்கும் நோக்கில் போராட்டக்குரல் கொடுத்தவர்களுள் தோப்பில் முகமது மீரானும் ஒருவர். இவர் இசுலாமிய பெண்களின் அவலங்களைத் தனது படைப்பில் வெளிக்காட்டி அதன் மூலம் சமூகத்திற்கு எடுத்துரைக்க முயன்றுள்ளார்.

சமூக இயக்கத்தளத்திற்குப் பெண்களின் பங்களிப்பு இன்றியமையாதது என்ற போதிலும், பெண்களின் நிலை என்பது ஆணாதிக்கச் சமூகத்தில் அடக்கி ஆளப்படும் அவலமே மேலோங்கி நிற்கிறது. அடக்கப்படும் பெண் சமூகம் வரதட்சணை, முதிர்கன்னிகள், திருமண வாழ்க்கைப் பாதிப்பு, விதவை நிலை,

முதுமை நிலை, பொருத்தமில்லா திருமணம், தற்கொலை, பலதார மணம், ஆணாதிக்கப் போக்கு போன்ற பல்வேறு நிலையில் அவலத்தை அனுபவிக்கின்றனர். இக்கொடுமைகளுக்கு ஆளாகும் பெண்களின் மன உணர்வுகளையும் படைப்புகளில் வெளிப்படுத்துகின்றார்.

பெண்ணினம் அடிமைப்பட பெண்களும் ஒரு வகையில் காரணம். தங்கள் சுதந்திரம் பறிக்கப்படுகிறது என்ற உண்மையை அறிய ஆவலில்லாமல் தாங்கள் அடிமைகளாய் உள்ளோம் என்ற நிலையையும் உணர்ந்து கொள்ளாமல் வாழ்கின்றனர். இது ஆண்டாண்டு காலமாய் எழுதிவைக்கப்பட்ட விதி என்று தன் சக்திகளைத் தனக்குள்ளே பூட்டிக் கொள்ளும் பெண்களின் அறியாமையைக் காட்டுகின்றது. இத்தகைய பெரிய உலகம் இருப்பதை மறந்துவிட்டு கணவனின் முதுகையே தனது உலகம் என எண்ணி அதில் ஒழிந்து கொள்ளும் அவலத்தையும், ‘அடக்கம்’ என்ற சொல் தமக்காகவே உருவானது என நம்பி அச்சொல் ‘அடிமை’ என மாற்றம் பெற்றதைக் கூட உணராத நிலையும், தங்கள் மனதிற்கு வேலி போட்டுக் கொள்ளும் மாபெரும் கொடுமை பெண் இனத்தில் மட்டுமே உண்டு என்பதையும் படைப்பாளர் தனது படைப்பில் படைத்திருப்பதைக் காணலாம்.

காலந்தோறும் பெண்கள் இச்சமூகத்தில் அபலைகளாக உருவாக்கப்படுகிறார்கள். இக்கொடுமையை அகற்றுவதற்காகப் பல்வேறு நிலையில் படைப்பாளர்களும் சமூகச் சீர்திருத்தவாதிகளும் போராடிக் கொண்டிருக்கின்றனர். சாதி, சமயப் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண்பது எவ்வாறு இயலாத ஒன்றாகுமோ, அதுபோன்று பெண்கள் தொடர்பான பிரச்சனைகளுக்குத் தீர்வு என்பது அவ்வளவு எளிதாகக் கிடைக்கக் கூடியதல்ல. சமூகத்தில் பெண் தனக்குரிய உரிமையைப் பெற போராட வேண்டிய அவலம்தான் தலைந்திருக்கிறது என்பதை அறியமுடிகிறது.

பெண்ணின் அவலத்தையும், ஆணாதிக்கப் போக்கையும் தன் படைப்புகளில் படைத்திருந்தாலும், பெண் சார்ந்த முற்போக்கான கருத்துக்களையும் பதிவு செய்துள்ளார். ஆணாதிக்கத்தை உடைத்தெறியும் பணிக்குச் செல்வதற்குச் சமயம் ஒரு தடையல்ல என்று முன்மொழிந்த எழுத்தாளர்களில் குறிப்பித்தக்கவராகத் திகழ்பவர் தோப்பில் முகமது மீரான்.

**சான்றெண் விளக்கம்**

1. திரு.வி.க. **பெண்ணின் பெருமை,** ப.189.
2. ச. முத்துச் சிதம்பரம், **பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்,** ப.9
3. ஜெயக்குமார், அ. **பெண்களும் சமூகமும்,** ப.9
4. தமிழ்வாணன், **மணிமேகலைத் தமிழ் - தமிழ் அகராதி,** ப.49811
5. ம. கோபாலகிருஷ்ணன், (ப.ஆ), **கழகத் தமிழ் அகராதி,** ப.703.
6. J.A. Simpon and Esc Weiner (Ed), **Teh Oxford English Dictionary,** Vol. IV, p.152.
7. P. Chenna Reddy, **Gender Peternity and Folks Songs,** p.179.
8. Madras University English Tamil Dictionary, p.140.
9. William, P. Scoot, **Dictionary Of Sociology,** p.154**.**
10. தேவதத்தா, **பெண்ணியச் சிறப்பிதழ்,** மே 1991, எண். 10ஈ ப.1
11. இரா. பிரேமா, **பெண்ணியம் அணுகுமுறைகள்,** ப.31.
12. மேலது., ப.65.
13. மேலது., ப.65.
14. அபர்ணா மகந்தா, **மார்க்சியமும் பெண்ணிலை வாதமும், முன்னுரை,** ப.
15. கௌரி (க.ஆ) **காலந்தோறும் பெண்கள்,** ப.25.
16. இந்திரா பார்த்தசாரதி, நா. **1973ஆம் நூற்றாண்டில் சிறுகதை ஒரு மதிப்பீடு தீபம்,** ப.37.
17. புலியூர்கேசிகன் (உ.ஆ) **புறம்,** ப.324.
18. மேலது., ப.325.
19. மயிலை சீனிவேங்கடசாமி, **சமணமும் தமிழும்,** ப.185.
20. இளங்கோவடிகள், **சிலப்பதிகாரம், வேங்கடசாமி நாட்டார் உரை,** ப.235.
21. புலியூர்கேசிகன் (உ.ஆ) **மணிமேகலை,** பக்.35-36.
22. புலியூர்கேசிகன் (உ.ஆ) **சிலப்பதிகாரம் ஊர்சூழ்,** ப.24.
23. புலியூர்கேசிகன் (உ.ஆ) **திருக்குற்றால குறவஞ்சி,** ப.31.
24. தமிழண்ணல் (உ.ஆ), **தொல்காப்பியம், பொருளதிகாரம், களவி,** நூ.எ. 7
25. மேலது., கிளவி, நூ.8
26. மேலது., கற்பு, நூ.11
27. அல்குர்ஆன் அத்தியாயம், 16:97.

28. Er.H. அப்துஸ் ஸமது (தமிழில்) **இசுலாமிய ஷரியத்தில் பெண்கள் நிலை,** ப. 17.
29. மேலது., ப.17.
30. மேலது., ப.15.
31. சிகரங்களை நோக்கி, த.மு.எ.ச. அறிக்கை, ப.8.
32. தட்சிணாமூர்த்தி, அ.கி., **தமிழர் நாகரிகம் பண்பாடு,** ப.15.
33. Prithivinath Thikoo, **Indian Woman A Brief Scoail Cultural Survey,** p.51.
34. இராஜம் கிருஷ்ணன், **காலந்தோறும் பெண்கள்,** ப.138
35. கலைக் களஞ்சியம், ப.65.
36. ஏங்கல்ஸ், **குடும்பம் தனிச்சொத்து அரசு ஆகியவற்றின் தோற்றம்,** ப.59.
37. இராஜம் கிருஷ்ணன், **காலந்தோறும் பெண்கள்,** ப.72.
38. அஷ்ஷைக் ஸ.ஃபிய்யுர் ரஹ்மான் முபாரகாக்பூரி, **அர்ரஹிக் அல்மக்தூம்,** ப.59.
39. இரா. பிரேமா, **பெண் மரபிலும் - இலக்கியத்திலும்,** ப.135.
40. கழகத் தமிழ் கையகராதி, ப.288.
41. Rupa Kulkarani, **Social Welfare,** Vol. 1, April 1984.
42. ஜே. இவஞ்சிலினா கிரேஸ, **வரதட்சிணை மாறிவரும் மங்கையர் உலகம்,** ப.76.
43. மேலது., ப. 77
44. The Ramayana of Tulsidas Rendered itno English verse by A.G. at Kigns Vol. 1, Childhood and Youth Marriage of Sira and Parvathi, p.36.
45. The Ramayana of Valmiki- translated by Hariprasad Shahstri, Vol.1, pp.139-140.
46. Indra, Statues of Women in Ancient India, p.93.
47. தொல்காப்பியம பொருள் இளம் உரை, பக்.149-150.
48. ஜே. இவாஞ்சிலனா கிரேஸ், **வரதட்சிணை மாறிவரும் மங்கையர் உலகம்,** ப.71.
49. The Tabaoati – I Akbari of Khawajay NIzamuddin Ahemda translated by B.Dc. p.598.

50. C. Karthikeyan, **Opinion Study of the Dowry System among the Brahmin Community in Madurai City,** p.
51. Jamila Varghese, **Her Gold and Her Body,** p.100.
52. Ambikha Bhattacharya, **Moulding Man's attitude for Women's Progress in India,** No.11, Social Welfare, Vol. xxiii, February 1977.
53. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** பக்.96-97.
54. மேலது., ப.98.
55. மேலது., பக்.450-451.
56. மேலது., ப.451.
57. மேலது., ப.122.
58. மேலது., ப.46.
59. மு. மேத்தா, **கண்ணீர் பூக்கள்,** ப. 41.
60. அல்குர்ஆன் அத்தியாயம், 24:32:33
61. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.51.
62. மேலது., ப.51
63. மேலது., ப.199.
64. ஹபீப் முகமது, **வரதட்சிணை எனும் அவமானம்,** ப.14.
65. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.46.
66. மேலது., ப.142.
67. மேலது., ப.582.
68. மேலது., ப.99.
69. அல்குர்ஆன் அத்தியாயம், 17:31.
70. அல்குர்ஆன் அத்தியாயம், 17:31.
71. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.50.
72. இணையதளம் nuruaislam.org.
73. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.142.
74. மேலது., ப.14.
75. அல்குர்ஆன் அத்தியாயம், 4:4.
76. மேலது., ப.20.
77. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.36.

78. மேலது., ப.36.
79. மேலது., ப.14.
80. மேலது., ப.49.
81. H. அப்துஸ் ஸமத், **இசுலாமிய ஷரியத்தில் பெண்கள் நிலை,** ப.78.
82. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.19.
83. மேலது., ப.20.
84. மேலது., ப.20.
85. மேலது., ப.21.
86. மேலது., ப.22.
87. மேலது., ப.103.
88. சிதம்பர சுப்பிரமணியன், **தமிழ் நாவல்களில் பெண் கதைமாந்தர்கள்,** ப.302.
89. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.363.
90. மேலது., ப.498.
91. பாரதிதாசன், **கவிதைகளில் தொகுதி – 1.** பக்.99-100.
92. H. அப்துஸ் ஸமத், **இசுலாமிய ஷரியத்தில் பெண்கள் நிலை,** ப.81
93. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.40.
94. மேலது., ப.40.
95. மேலது., ப.128.
96. மேலது., ப.291.
97. நாஞ்சில் ஆனந்தன், **சங்க இலக்கியத்தில் மனித உரிமைகள்**, ப.30.
98. மைதிலி, **பெண்ணியமும் தமிழும்,** ப.45.
99. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.79.
100. மேலது., ப.623.
101. மேலது., ப.344.
102. மேலது., ப.344.
103. மேலது., ப.261.
104. மேலது., ப.314.

# இயல் - 4

## சிறுகதைகள் உணர்த்தும் இசுலாமிய அறம்

### முன்னுரை

உலகில் மனித இனம் வளர்ச்சிப் பெறத் தொடங்கிய காலத்திலிருந்து சமயமும், இலக்கியங்களும் வளர்ந்து வந்தன. சமயம் என்றும் மனிதனைப் பண்படுத்தும் நோக்கில் உள்ளதாகும். அதைப்போல இலக்கியங்களும் ஒவ்வொரு காலக்கட்டத்தில் வாழ்ந்த மனிதர்களின் வாழ்க்கை நெறியை எடுத்துரைக்கின்றன. இதன்மூலம் அவ்வவ் காலகட்டத்தில் வாழ்ந்த மனிதர்களிடம் சமயமும் இலக்கியங்களும் ஒன்றுடன் ஒன்று இரண்டறக் கலந்து காணப்பட்டுள்ளன. தன் மனம் போல போக்கில் வாழும் மனிதனைப் பண்படுத்துவன சமயமும் அற இலக்கியங்களும். ஒரு மனிதன் சமூகத்தில் தன்னைத் தானே உணர்ந்து கொள்வதற்கும், சமூகத்தை அறிந்து கொள்வதற்கும் துணையாக நிற்பவை சமயத்தின் அறக்கருத்துக்கள். உலகிலுள்ள அனைத்துச் சமயங்களும் அறநெறியை வலியுறுத்துகின்றன. உலகச் சமயங்களில் ஒன்றான இசுலாம் சமயமும் அறத்தைப் பின்பற்றுவதாய் அமைந்துள்ளது.

மனிதனது வாழ்க்கை நெறியினை மேம்படுத்த கூடியதாய் அமைந்திருப்பது அறம். இத்தகைய அறமானது இன்றையக் காலக்கட்டத்தில் தனிமனிதன், சமூகம், சமயம் என எல்லா நிலைகளிலும் முதன்மைப் பெறுகிறது. அறம் பெரும்பான்மை மாறாத தன்மை உடையதாகும். அதனைப் பற்றிய கருத்தாக்கம் சூழ்நிலைக்கேற்ப மாறுபடுகிறது. அறத்திலும் பொதுத் தரக்கூறுகள், சூழல்சார்ந்த கூறுகள் என இரண்டு வகையாக உள்ளன. இசுலாம் என்பதை ஒரு மதம் என்று கூறுவதை விட வாழ்க்கை நெறிமுறைகளை வகுத்துக் காட்டும் மார்க்கம் என்று கூறலாம். இசுலாம் என்னும் அரபுச்சொல் எந்த ஒரு தனிநபரின் பெயரையோ அல்லது ஒரு குறிப்பிட்ட சமுதாயத்திற்கு மட்டுமோ குறிப்பிட்ட நாட்டினருக்கு மட்டுமோ, உரியது அல்ல. இசுலாம் எனும் சொல்லுக்குச் சாந்தி, சமாதானம் என்று பொருள் கூறுவர். இத்தகைய சாந்தியும், சமாதானனும் இசுலாம் சமயத்தில் அறநெறி அடிப்படையில் அமைந்ததாகக் காணப்படுகின்றன. இசுலாம் தனிமனித வாழ்வையும் அதன் அடிப்படையில் அமையும் சமூக ஒழுங்கையும் நிலைநிறுத்துவதற்கன

வழிமுறைகளை எடுத்துரைக்கிறது. ஒரு தனிமனிதனின் குடும்பவாழ்வு, பொருளாதாரம் மற்றும் சமூகப் பிரச்சனைகளுக்குகான தீர்வுகள் வேத நூல்களின் மூலம் விளக்கப்பட்டுள்ளன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு தோப்பில் முகமது மீரான் சிறுகதை உணர்த்தும் இசுலாமிய அறம் பற்றிக் கண்டறிவது ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

## 4.1 அறம் - சொற்பொருள் விளக்கம்

இன்றைய மானிட சமுதாயமானது அதிவேக வளர்ச்சியை நோக்கிச் சென்று கொண்டு இருக்கின்றது. மனித வாழ்க்கையானது படிப்படியாக முன்னெறி தேவையான மாற்றங்களைப் பெற்று வளர்ந்து வருகின்றது. ஆதி மக்களின் வாழ்வில் அறப்பண்பைக் காணமுடியாது. இந்நிலவுலக வாழ்வில் மக்கள் எல்லோரும் அடைவதற்குரிய உறுதிப்பொருள்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இவை உலத்தோடும் சமயத்தோடும், பாகுபடுத்திக் கூறுவதைப் பண்டையக் காலத்தில் காணமுடிகிறது. “மனித குலத்திற்குச் சிறப்புக் குணமாக விளங்குவது அறம் என்பதும் அதன் மூலத் தத்துவங்கள் மனித வரலாற்றின் முதல் நிலையிலே தோன்றின என்பதும் கருத்திற் கொள்ளத்தக்கனவாகும்” என்பவை கலைக் களஞ்சியம் வழி அறியலாகும் கருத்துக்களாகும்.

மக்கள் கூட்டமாக வாழத் தொடங்கிய போது நன்மைப் பயக்கத்தக்கச் செயல்களின் ஒழுகலாறுகள் ‘அறம்’ என புலவர்களால் போற்றப்பட்டன. இத்தகைய அறமானது “எல்லா உயிர்களிடத்திலும் எல்லா மக்களிடத்தும் நெகிழ்ந்த அன்பு கொண்டு எவ்வுயிர்க்கும் தீங்கு நேராத முறையிலும் மற்றவர்களுக்கு உதவுவதன் மூலம் ஏற்படும் பெயர், புகழை எண்ணாமல் அறம் செய்வதே செய்வோர்க்கும் பிறருக்கும் உண்மையில் பயன்படுவதாக அமைகின்றது. இத்தகைய அறமானது இலக்கியத்தின் பாடுபொருளாக இருந்தன. மேலும் மனித வரலாற்றில் சமயங்களின் தோற்றம் அறநெறியின் அடிப்படையில் அமைந்துள்ளதைச் சமயக் கொள்கைகள் தெளிவுப்படுத்துவதன் மூலம் அறியலாம். உலகில் தனிமனிதன், சமுதாயம், சமயம் ஆகியவற்றை ஆராய்ந்து பார்த்தால் அவற்றில் அறமே முதலிடம் பெறுகின்றது. ஒருவரின் ஆசைகளும், உணர்ச்சிகளும் அறிவுக்குட்பட்டிருந்தால் அதுவே அறமாகும். அறத்தின் குறிக்கோளாவது மனிதன் முழுமை அடைய வேண்டும்” என்று பிராட்லி

என்னும் மேலை நாட்டு அறிஞர் கூறுகிறார். அறமானது தனிமனிதனுடனும், சமயத்துடனும் தொடர்பு கொண்டுள்ளதை அறிய முடிகின்றது.

## 4.2 வரையறை

அறம் எனும் சொல் அறு எனும் முதனிலை அடியாகப் பிறந்து தீவினையை அறுப்பதெனப் பொருள்படும். அத்தகைய மூலப் பொருளினைக் கொண்டு "மணத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறன்" என்ற அடியானது அறத்தின் தன்மையைப் புலப்படுத்துகிறது. "அறியாமையால் விளைவது தீவினை ஆகும். அறியாமை என்பது இருளைக் குறிக்கும். அவ்விருளை அகற்றுவதே அறத்தின் பயனாகும்"[1] என்பதை அறியலாம். அறு என்னும் பகுதியின் அடியாக அறம், அறவு, அறுதல், அறவை, அறுதி, அறுத்தல், அறும்பு, அறுப்பு, அறுகால், அறை, அற்றம், ஆறு, அற்றை என பல சொற்கள் அறம் என்னும் சொல்லில் இருந்து பிறந்தனவாகும்.

அறம் எனும் சொல்லிற்கு 1. நல்வினை 2. ஐயம் (பிச்சை) 3. ஏழைகளுக்கு மருந்தீகை 4. நலம் 5. இன்பம் (சுகம்) 6. தகுதியானது 7. கற்பு 8. நோன்பு 9. அறப்பயன் 10. சமயம் 11. ஒதி (ஞானம்)12. அறச்சாலை 13. அறத்தின் பயன் 14. நடுநிலையறம் பேணும் கூற்றுவன் எனப் பல பொருள்களைப் பேரகராதி தருகின்றது.

'அறு' என்பது அறமாயிற்று. 'அம்' என்பது தொழிற்பெயர். ஈறு பண்புப் பெயர். ஈறு என்று குறிப்பிடப்படுகின்றது"[2]. அறு என்னும் அடிச்சொல்லானது அறுத்துச் செல், வழியை உண்டாக்கு, உருவாக்கு, துன்புறுத்தல், வேறுபடுத்து என்று பலவகைப் பொருள்களில் வழங்கி வரப்பட்டுள்ளது. அம் என்னும் தொழிற்பெயர் விகுதி அறத்தலாகிய தொழிலை உணர்த்துகின்றது. "மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்க முறைகளின் தொகுதியும் முழுநிறையின் வடிவமே அறம்"[3] என்று க.த. திருநாவுக்கரசு கூறியுள்ளார்.

அறம் என்னும் சொல்லானது நடுநிலையோடு நின்று ஆராய்ந்து கூறும் நீதி என்னும் பொருளில் இலக்கண, இலக்கியத்தில் இடம் பெற்றுள்ளது. இதனை,

"அறக்கழி வுடையன பொருட்பயன் வரினே
அறநனி சிறக்க" (ஐங்.நூ. 7:2)

என்பன போன்ற அடிகள் மூலம் அறியலாம். அறத்திற்கு விளக்கமாக,

"அறமெனப்படுவ தியா தெனக் கேட்பின்
மறவா திதுகேள் மண்ணுயிர்க் கெல்லாம்
உண்டியு உடையு முறையுளு மல்லது
கண்ட தில்" (மணி. 228-231)

என மணிமேகலை கூறுகிறது.

"அறமே அறிவு அறிவே அறம்" என கிரேக்க நாட்டுத் தத்துவ ஞானிகளான சாக்ரடீஸ், பிளேட்டோ போன்ற அறிஞர்கள் இவற்றை வரையறை செய்து மனிதனுக்குச் செயல்பாட்டு அறிவைத் தந்து அவனைச் செயலறப் பேணும் அறப்பேரறிஞனாக வாழத் துணையாக நிற்பது "அறவியல்" என விளக்கம் கூறுவது மரபு"[6] என வாழ்வியற் களஞ்சியம் கூறுகின்றது.

சமுதாயத்தில் வாழும் மனிதர்களின் நடத்தை சரியானதென்றோ, தவறானதென்றோ, நன்மைபயக்குமென்றோ, தீமைப்பயக்குமென்றோ கூறுவதும் இவை போன்று முடிவு கட்டுவதும் அல்லது தீர்மானிப்பதும் விஞ்ஞான வகையுள் அடங்கும்"[7]. ஒவ்வொரு விஞ்ஞான வகைக்குள்ளும் ஒரு எல்லை உண்டு. இதனையே தாவரவியல் (Botany) தாவரங்களைப் பற்றியும் உளநூல் (Psychology) உள்ளங்களைப் பற்றியும் கூறுகின்றன. இவற்றைப் போல அறநூலும் மனிதர்களின் நடத்தைகளையும், செயலையும் குறிக்கும். மனிதனை நன்னெறியில் நடக்கச் செய்வதும் குறிக்கோள் நிறைந்த ஒழுக்கமுடைய வாழ்க்கையை வாழ வைப்பதும், அறவியல் என்பதை இக்கருத்துக்கள் மூலம் அறியலாம்.

அறம் என்பது நல்வினையைக் குறிப்பதாகும். எல்லா உயிர்களிடத்தும், எல்லா மக்களிடத்தும் நெகிழ்ந்த அன்பு கொண்டு, எவ்வுயிர்க்கும், எவர்க்கும் தீங்கு நேராத முறையில் பெயர், புகழை வேண்டாது அறம் செய்வதே செய்வோர்க்கும் பிறருக்கும் உண்மையில் பயன்படுவதாகும். இத்தகையச் செயலைச் செய்வதற்கு மனம், மொழி, மெய் ஆகிய மூன்றையும் ஒருமனிதன் தூய்மையாக வைத்திருந்து

வாழவேண்டும். உண்மை, மெய்ம்மை, வாய்மை இம்மூன்றும் அறத்தின் அடிப்படைகளாகும்.

“உள்ளத்தாற் பொய்யா தொழுகில் உலகத்தார்
உள்ளத்து ளெல்லாம் உளன்”[8]. (குறள். 294)

என்ற குறள் மூலம் ஒரு மனிதன் தன் மனத்தினால் பொய்யை நினைக்காமல் வாழ்ந்தால் அவன் உலகில் உள்ளவர்கள் மனத்தில் எல்லாம் நிறைந்திருப்பான் என்று உள்ளத்தில் நிறைந்திருக்கும் நிலையை வள்ளுவர் கூறுகிறார்.

## 4.3 இலக்கிய நோக்கில் அறம்

எந்த ஒரு இலக்கியப் படைப்பும் ஏதாவது ஒரு நிலையில் அறத்துடன் தொடர்புடையதாகவே அமைந்திருக்கும். அறநெறியைப் போற்றி வாழ்ந்த பண்டைத் தமிழர் தம் வாழ்வியல் சிறப்புக்களை எடுத்துக்கூறும் இயல்புகளைக் கொண்டது சங்க இலக்கிய நூல்கள். சங்க இலக்கியங்களில் அறநெறிக் கருத்துக்கள் விரவிக் காணப்படுகின்றன. இவ்விலக்கியப் பாடல்கள் அகம், புறம் எனப் பகுக்கப்பட்டுள்ளன. “சங்கப் பாடல்களின் தொகை 2381. அவற்றுள் 1862 அகப்பாடல்களும், 519 புறப்பாடல்களும் உள்ளன. இவற்றில் 140 அகப்பாடல்களிலும் 75 புறப்பாடல்களிலும் அறச்செய்திகள் காணப்படுகின்றன”[9]. என இரா. சாரங்கபாணி கூறுகிறார். இயற்கையுடன் வாழ்ந்த மனித வாழ்க்கைக்குரிய நெறிமுறைகளையும், ஒழுக்கமுறைகளையும் சங்க இலக்கியத்தின் மூலம் அறிய முடியும்.

சங்க இலக்கியப் பாடல்கள் அகம், புறம் என இரண்டையும் பாடுபொருளாகக் கொண்டவை. புறத்தின் ஒரு கூறான அறத்தையும், பொருளையும் புற இலக்கியத்திலும், இன்பத்தை அகஇலக்கியத்திலும் எடுத்து உரைக்கப்பட்டுள்ளன. சங்க காலத்தில் புறத்தின் ஒரு கூறாக விளங்கிய அறம் நீதி நூல்களின் காலத்தில தனிச்சிறப்புப் பெற்றுக் காணப்பட்டது. அன்றைய காலகட்டத்திற்கு ஏற்ப அறம், சமயச் சார்புடைய அறம் என இருவகைகளுடன் ஆசார முறைகளும் அறங்களாகக் கொள்ளப்பட்டன.

சங்க காலத்தில் மன்னன் மக்களின் உயிராக விளங்கினான். நெல்லும், நீரும் உயிரை வளர்க்கும் உணவுப் பொருள்களாகும். இவை மக்களின் வாழ்க்கைக்கு

இன்றியமையாததாகும். மன்னன் மக்களுக்கு உயிர் என்பதை உணர்ந்து செயல்படுவது மன்னர்க்குரிய அறமாகும். "பண்டைய அரசு அறநெறியின் மீது அமைக்கப்பட்ட அரசாகத் திகழ்ந்தது"[10] என்பர். ஆண் முலையறுத்தல், கருச்சிதைத்தல், பார்ப்பனருக்குக் கொடுமை செய்தல் போன்றவை அறமற்ற செயலாகக் கூறப்பட்டன. மேலும் அறமற்ற செயலாகக் கருதப்பட்டது யாதெனில் ஒருவர் செய்த நன்மையை மறத்தலாகும். அவ்வாறு செய்தோருக்கு இவ்வுலகில் உய்தி இல்லை என்பதை,

> "நிலம்புடை பெயர்வதாயினும் மொருவன்
> செய்தி கொன்றோர்க் குய்தி யில்லென
> அறம் பாடிற்றே"[11] (புறம். 34:4-5)

என்ற புறநானூற்றுப் பாடல் உணர்த்துகின்றது. ஒருவர் தமக்கு உதவி செய்தால் அவருக்கு அவ்வகையிலும் கைமாறு செய்திட வாய்ப்பு கிடைத்தால் அதைப் பெருமையாகக் கருதினர். இதனை,

> "முன்னொன்று தமக்காற்றி முயன்றவர் இறுதிக்கண்
> பின்னொன்று பெயர்த்தாற்றும் பீடுடையாளர்"[12] (கலி. 34:4-5)

என்ற கலித்தொகை அடிகள் விளக்குகின்றன. இப்படி அறம் ஒவ்வொரு இலக்கியத்திலும் பதிவுகளைப் பெற்றுள்ளதை அறிய முடிகிறது

## 4.4 இசுலாம் சமயம் கூறும் அறமும் அறவாழ்வு முறைகளும்

மனிதன் சமயத்தினை அடிப்படையாகவும், நம்பிக்கையாகவும் கொண்டு வாழ்கின்றான். ஆன்மீக வாழ்க்கையானது மனிதனை மேம்பாடு அடைவதற்கான வழியாக; அறத்தைக் கடைப்பிடிப்பதன் வாயிலாக முழுமையடைகிறது. அறவாழ்வு அமைப்புமுறை என்பது எந்த ஒரு சமூக அமைப்பிற்கும் இன்றியமையாதது ஆகும். மனித சமூக வரலாற்றை அணுகும்போது காலந்தோறும் அறவாழ்வு முறையில் கடைப்பிடிக்கப்பட்ட சில ஒழுக்கப் பண்புகள் என்றும் மாறாமல் போற்றப்பட்டு வந்துள்ளன. ஒழுக்கப் பண்புகளைப் பண்படுத்துவதன் பொருட்டுக் காலந்தோறும் தோன்றிய சமயங்கள் அறவாழ்வு முறையை அந்தந்த சமயங்கள் மட்டுமின்றி

நீதிநூல்களும் உணர்த்தி வந்துள்ளன. இந்து சமய அறவியல், மறுப்பிறப்பு நம்பிக்கை அல்லது பிறவிச் சூழ்நிலையும் தருமக் கொள்கைகளையும், ஆழமாகக் கொண்டது. செய்கின்ற நல்வினை தீவினைக்கேற்ப ஒவ்வொரு ஆன்மாவும் வீடு அல்லது நரகம் பெறுவர் என்பது நம்பிக்கை. "மனிதன் கடவுள் இல்லாமல் இருக்கலாம்; மோட்சம் இல்லாமல் இருக்கலாம். ஆயின், ஒழுக்கம் இல்லாமல் எப்படி இருக்க முடியும். விலங்கினின்றும் மனிதனை வேறுபடுத்துவது ஒழுக்கமே"[13] என வினா எழுப்பி விடையும் அளிக்கின்றது இலக்கியத் தத்துவக் களஞ்சியம்.

கிறித்துவ திருமறையான விவிலியத்தில் இடம் பெறும் கருத்துக்கள் சிறுசிறு கதைகள், உவமைகள் அனைத்தும் மக்களை ஒழுக்கநெறி நிற்கச் செய்யும் நோக்கிலேயே அமைந்துள்ளன. இயேசு பெருமான் அன்றைய காலத்திலேயே சீரிய ஒழுக்கமுள்ள சமுதாயத்தை உருவாக்கத் தன்னாலியன்ற முயற்சிகளைச் செய்திருக்கின்றார். அதற்காக ஒரு போதகராக அயராது பாடுபட்டிருக்கின்றார். இறைத் தூதர்கள் மானிட சமுதாயத்தில் இறைநம்பிக்கையை வளர்த்து அதன் மூலம் அறநெறிகளைப் பின்பற்றும் மனப்பான்மையை உருவாக்க ஓய்வின்றி உழைத்திருக்கின்றார்கள்.

திருக்குர்ஆன் பிற சமயங்களை விடச் சற்று மேலே போய் ஒரு நாளைக்கு ஐந்துமுறை தொழுகையைக் கட்டாயமாக்குகின்றது. அதன் மூலம் மனிதனை ஒழுக்கநெறிக்குக் கொண்டுவர முடியும் என்று கருதியதால் ஓதுதலை அதாவது மறைநூல வசனங்களைக் கற்றலைக் கட்டாயமாக்கியுள்ளது. ஒவ்வொரு மனிதனும் இறைவேதத்தில் அமைந்துள்ள அறவுரைகளை, சட்டதிட்டங்களை உணர்ந்து, தெளிந்து விசுவாசித்து பின்பற்றி நடக்க வேண்டும். அதன்வழி சமுதாயம் சீர்பட வேண்டும் என்பதுதான் இசுலாத்தின் நோக்கமாக உள்ளது. இத்தன்மை வாய்ந்த அறவாழ்வு அமைப்பு முறைகள் மனிதனை மனிதனாக வாழச் செய்ய வழிமுறைகளைச் சமூகத்திற்கு உணர்த்துகின்றன. உலகியல் நடைமுறைகளை அடிப்படையாகக் கொண்டு சமூக அமைப்பு முறையை உணர்த்தும் இசுலாம், அறவாழ்வு முறையினையே வலியுறுத்துகின்றது. இசுலாம் காட்டும் அறவாழ்வு முறைகளைப் பின்வருமாறு உணர்த்தலாம். அவையாவன,

1. இசுலாம் கண்ணோட்டத்தில் அறவாழ்வின் அடிப்படைகள்
2. இசுலாமிய அறவாழ்வின் சிறப்புக்கள்
3. இசுலாமிய ஒழுக்கவியல்

### 4.4.1 இசுலாமிய கண்ணோட்டத்தில் அறவாழ்வின் அடிப்படைகள்

உலகிலுள்ள மனிதர்கள் அனைவரும் ஒரே மாதிரியான உணர்வுகளையோ அல்லது அறநெறிகளையோ பின்பற்றுவதில்லை. இவை மனிதனுக்கு மனிதன் வேறுபட்டுள்ளன என்பதை,

> "தனக்கு விரும்புவதையே தனது சகோதரனுக்கு விரும்பாதவரை ஒருவன் இறைநம்பிக்கையாளனாக மாட்டான்"[13]. (ப.139)

என இசுலாமிய வேதநூல் மனித மன இயல்பை எடுத்துக் கூறுகிறது. மேலும் மனிதர்களின் செயல்பாடுகளை அவர்களை மூன்றுவிதமாக பிரித்துக் காட்டுகிறது.

- இயற்கையாகவே எந்தவிதமான கெட்ட இயல்புகளும் இன்றி நற்காரியங்களில் மட்டுமே நாட்டம் கொண்டு இறைவனுக்கு அஞ்சி செயல்படுவார்கள். இவர்கள் 'மனிதருள் வானவர்' என அழைக்கத்தக்க சிறப்பு உடையவர்கள். இத்தகைய மனிதர்களுக்கு வழிகாட்டுவதற்கென்று எவ்விதமான அறக்கோட்பாடுகளும் அவசியப்படுவதில்லை.
- இரண்டாம் வகையினரது சிந்தனை, செயல் என எப்போதும் தீயொழுக்கம் சார்ந்ததாகவே இருக்கும். இவர்கள் இறைவனிடம் இறையச்சம் கொள்வதில்லை. சமூகத்தில் எப்போதும் மூன்றாம் தர மனிதர்களாக மதிக்கப்படும் இவர்கள் 'மனிதருள் சைத்தான்' என்று அழைக்கப்படுவர்.
- மூன்றாம் பிரிவினர் மனிதருள் வானவராக நற்பழக்கம், நற்சிந்தனையுள்ள மானிடருக்கும், தீய சிந்தனையுள்ள மானிடருக்கும் இடைப்பட்டவர்கள். இவர்கள் பிறப்பால் நல்லவர்களாகவோ, தீயவர்களாகவோ இருப்பதில்லை. இத்தகைய மனிதர்களிடம் மனதில் இறையச்சம் இருந்தாலும் தீய ஒழுக்கங்களில் ஈடுபடுவர். எனினும் இத்தகைய செயலைக் கண்டு அஞ்சவும் செய்வர். இத்தகைய மனிதப் பிரிவினர் 'மனிதருள் மாந்தர்' என்று அழைக்கப்படுவர். மானுட சமூகத்தில் உள்ள பெரும்பான்மையோர் இத்தன்மை வாய்ந்தவர்கள் என இசுலாம் எடுத்துரைக்கிறது.

உலக வாழ்வில் ஆரம்ப காலம் முதல் இன்று வரையில் ஏற்றுக் கொள்ளத்தக்க அறநெறி முறைகளை மனிதர்கள் அறிந்து வைத்துள்ளனர். நன்மை,

தீமைகளைப் பிரித்தறியும் ஆற்றலை மனிதனின் பிறப்பிலே அல்லாஹ் வழங்கியுள்ளார். இதன் மூலம் அறவாழ்வு முறைகள் காலந்தோறும் மாற்றத்தைப் பெறாமல் மனித சமூகத்தவர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்ட வாழ்க்கை அமைப்பாக வழங்கி வருகிறது. அறவாழ்வு அடிப்படையில் மனிதனின் செயல்களுக்கு முக்கியத்துவம் தரப்படுகிறது. அவரவரின் செயல்களுக்கும், அந்தந்த செயல்களுக்குரிய நோக்கத்தின் அடிப்படையிலும்தான் பிரதிபலன்கள் வழங்கப்படும் என்பது இசுலாம் சமயத்தின் அறவாழ்வின் அடிப்படையாக உள்ளது.

'இசுலாத்தில் தெய்வீக அம்சம்' என்பது அறவாழ்வின் அடித்தளமாக உள்ளது. இதனை இறையச்சம் என்று இசுலாம் கூறுகிறது. இறையச்சத்தை மனத்தில் கொண்டு ஒரு மனிதன் செயல்படும்போது அறம்பிறழாதவனாக இருப்பான். மனிதனின் செயல்கள் இறை உவப்பு என்ற அடிப்படையில் அமைதல் வேண்டும். உலக வாழ்வில் நன்மை தீமைகளைப் பொறுத்து மனிதனின் செயல்கள் அமையுமானால் அதுவே அறநெறி என்று இசுலாம் சமயம் நம்பிக்கை கொண்டுள்ளது. இறை உவப்பு என்பது எப்போதும் சமூகத்தினை மையப்படுத்தியதாகவும் எந்த ஒரு சமூகத்திற்கும் நன்மை பயப்பதாகவும் இருக்கும். மனிதனுக்கு மனிதன் இழிவாகக் கருதுவதை இசுலாம் அறவாழ்வு நெறிக்கு முரணாண கோட்பாடாகக் கொள்கிறது.

### 4.4.2 இசுலாமிய அறவாழ்வின் சிறப்புக்கள்

மனித சக்திக்குட்பட்ட எளிய வாழ்வியல் நெறிகள் அறவாழ்வு அமைப்பின் எல்லைகளாக உள்ளன. சமய நம்பிக்கையை ஊட்டி வளர்ப்பதுதான் ஒரு சமயத்தின் கடமை என்று இசுலாம் கருதாமல் மனித வாழ்விற்கு உகந்த நேர்த்தியான நல்ல அறக்கருத்துக்களை எளிமையான எடுத்துரைப்பதில் தனிக்கவனம் செலுத்துகிறது. நடைமுறை வாழ்விற்கனெ அறநெறிக் கோட்பாடுகளின் உந்து சக்தியாக இருப்பதும் இசுலாத்தில் இறுதித் தீர்ப்பு நாள் என்பது அறவாழ்வின் தன்மையைக் கூறும் விதமாகவும் அமைகின்றது. இவ்வுலக வாழ்வின் செயல்பாடுகள் இத்துடன் முடிவதில்லை. உலகில் நடைபெறும் செயல்களுக்குரிய பலன் இறுதித் தீர்ப்பு நாளின்போது அவை மறு உலக வாழ்விலும் தொடரும் என்பது இசுலாமியர்களின் கருத்து. உலகில் எத்தகைய துன்பங்கள் நேர்ந்தாலும் நெறிப்பிறழாமல் வாழவேண்டும் என்ற அறக்கோட்பாட்டை இசுலாம் வலியுறுத்துகிறது.

மறு உலக வாழ்வின் மீது நம்பிக்கை கொள்ளும் போது ஒழுக்கத்தை ஒவ்வொருவரும் பின்பற்ற வேண்டும என இசுலாம் கூறுகிறது. இவ்வுலகில் நல்ல செயல்கள் நன்மை தருவதையும், தீய செயல்கள் தீமை தருவதையும் சுட்டிக் காட்டித் தடுப்பதில் இசுலாமிய அறவாழ்வு சிறப்புப் பெற்றுக் காணப்படுகிறது. அத்தகைய நெறிகளாகிய அறத்தைப் பின்பற்றும் வாழ்வின் சிறப்புத் தன்மைகள் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இசுலாமிய மார்க்கத்தைப் பின்பற்றும் இசுலாமியர்கள் தங்கள் வாழ்க்கையில் பின்பற்றும் நெறிகளே அறம் எனப்படும். இசுலாமிய அறவாழ்வின் சிறப்புத் தன்மைகளாவன:

- சுற்றம் ஓம்பல் (அண்டை வீட்டாருடன அன்புடன் நடத்தல்)
- பிறர் நலம் விரும்புதல்
- விருந்து உபசரிக்கும் தன்மை
- ஜக்காத்தின் சிறப்பு

### 4.4.2.1 சுற்றம் ஓம்பல் (அண்டை வீட்டாருடன் அன்புடன் நடத்தல்)

ஒவ்வொரு முஸ்லீமும் அண்டை வீட்டாருடன் சிறப்பான உறவைக் கொண்டிருக்க வேண்டுமென இசுலாம் வலியுறுத்துகிறது. மேலும் அண்டை வீட்டாருக்கும் உபகாரம் செய்வதும் அவர்களுக்கு இடையூறு செய்யாமலிருப்பதும் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் (நம்பிக்கை) கொண்டதற்கான அடையாளமாகும். இதனை நபி (ஸல்) அவர்கள்,

> "எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொண்டாரோ அவர் அண்டை வீட்டாருடன் நல்லுறவை ஏற்படுத்திக் கொள்ளட்டும் எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொண்டாரே அவர் விருந்தினரைக் கண்ணியப்படுத்தட்டும். எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொண்டாரோ அவர் பேசினால் நல்லது பேசட்டும் அல்லது மௌனம் காக்கட்டும்"[17]

என்கிறார். அண்டை வீட்டாருடன் கொள்ளும் நட்புறவைப் பற்றி இசுலாம் கூறுகிறது. இக்கருத்தை அடியொற்றி தோப்பில் முகமது மீரான் தன் சிறுகதைகளைப் படைத்துள்ளார்.

உலகில் வாழும் மக்கள் தன் சகோதரனுடன் கொண்டிருக்கும் உறவைப் போன்று தன் அண்டை வீட்டாருடனும் உறவு கொள்ள வேண்டும். அவர்களின் இன்ப துன்பங்களில் பங்கேற்று உறுதுணையாக இருக்க வேண்டும் என்பதை,

> "முதலில் மனத்திற்குள் சேவையெண்ணம் ஆட்டுக்குட்டியைப் போல் துள்ளி விளையாடியது. இப்போது பாம்பைப் போல் படம் தாழ்த்திவிட்டது. இங்கு வந்திருக்கக் கூடாது என்று அப்போதுான் தோன்றியது. நான் அவருக்கு யார்? யாருமில்லை. செவியும் கண்ணும் மூடி நடந்திருக்கலாமே. அவர் முற்றத்தில் இறங்கினார். பின்னால் கைகட்டிக் கொண்டு கொஞ்ச நேரம் அங்குமிங்குமாக நடந்தார். திடீரென வீட்டை நோக்கிச் சென்றார். மனைவியின் கோணல் முகத்தையும் கனல் தெறிக்கும் பார்வையையும் எதிர்ப்பட மனவலிமை இல்லாமையால் தலையைக் குனிந்தவாறே வீட்டிற்குள் பிரவேசித்தார். மனைவியின் காதில் கிடக்கும் கம்மல்களை ஆதரவற்றவனைப் போலப் பார்த்தார்"[15]. (ப.170-171)

என அறத்தைக் கதையினூகச் சுட்டிச் செல்கிறார். ஒரு பெரும வியாபாரி இன்று அவரது சடலத்தை அடக்கம் செய்வதற்குக் கூட பணமில்லை. உறவினர்களும் இவரது உதவியைப் பெற்ற சகோதரர்களும் கூட முன்வராத சூழலில் பக்கத்து வீட்டுக்காரரான ஜிப்பாக்காரர் என்ற பாத்திரம் உதவ முன்வரும் நிலையைப் படைப்பாளர் இயல்பாகக் காட்டுகின்றார். முன்பின் தெரியாத ஒரு நபரை அடக்கம் செய்வதில் அக்கரை காட்டும் ஜிப்பாக்காரர் என்ற பாத்திரத்தின் மனஇயல்பை 'கருந்தேளின் கொடுக்குகள்' என்று சிறுகதையின் மூலம் வெளிப்படுத்துகின்றார் படைப்பாளர்.

அண்டை வீட்டார் மரணித்தால் மையித்துக்கான (சடலத்திற்கான) கடமைகளை நிறைவேற்றி அவருக்குப் பின் அவரது குடும்பத்தினருக்கு ஆறுதல் கூறவேண்டும். அண்டை வீட்டாரின் உணர்வுகளை அவரது குடும்பத்தாரின் உணர்வுகளை மதிப்பதில் ஒருபோதும் தவறிழைத்து விடக்கூடாது என்ற இசுலாமிய அறக்கருத்தைத் தனது சிறுகதையில் பதிவு செய்துள்ளார்.

ஒவ்வொரு நிலையிலும் தான் அண்டை வீட்டாருக்குச் செய்ய வேண்டிய கடமைகளை இசுலாமியர்கள் அறிந்து கொள்ள வேண்டும். அண்டை வீட்டார் சிரமப்படும்போது அவர்களுக்கு உதவுதல், அவரது வளமையில் மகிழ்வது, அவருக்கு" மகிழ்ச்சியளிக்கும் செயல்களில் தானும் மகிழ்ந்திருத்தல், தேவைப்பட்ட உதவிகளைச் செய்வது மற்றும் அவர் நோய்வாய்ப்பட்டால் நலன் விசாரித்து ஆறுதல் கூறி உற்சாகப்படுத்துவது போன்ற நற்குணங்களைக் கடைபிடிக்க வேண்டும். இதனை வேதநூலான திருக்குர்ஆனில்

> "அல்லாஹ் ஒருவனையே வணங்குங்கள். அவனுக்கு யாதொன்றையும் இணையாக்காதீர்கள். தாய் தந்தைக்கு நன்றி செய்யுங்கள். (அவ்வாறே) உறவினர்களுக்கும், அந்நிய அண்டை வீட்டாருக்கும் (எப்பொழுதும்) உங்களுடன் இருக்கக் கூடிய சிநேகிதர்களுக்கும், பிரயாணிகளுக்கும், உங்களிடமுள்ள அடிமைகளுக்கு (அன்புடன்) நன்றி செய்யுங்கள். எவன் கர்வம் கொண்டு பெருமையாக நடக்கின்றானோ அவனை நிச்சயமாக அல்லாஹ் நேசிப்பதில்லை"[16]. (திருக்குர் அன். 4:36)

என்று கூறப்பட்டுள்ளது.

உண்மையான இசுலாமியர் தனது அறிவுக் கண்ணை நன்கு திறந்து வைத்திருப்பார். மேலான மார்க்கத்தின் நேர்வழியைப் பெற்றவராகவும், மென்மையான உள்ளமும், மலர்ந்த சிந்தனையும் உடையவராகவும் திகழ்வார். தனது அண்டை வீட்டாரின் உணர்வுகளைப் புரிந்து அவரது மகிழ்ச்சியில் தானும் மகிழ்ந்து அவரது துன்பம் கண்டு வேதனையும் அடைவார் என்பதை 'மயானங்கள்' என்ற கதையின் வாயிலாகப் படைப்பாசிரியர் வெளிப்படுத்துகின்றார்.

> "தெற்குத் தெருவில் கால் வைத்தால் ஏகப்பட்ட விசாரிப்புகள். சுகமாயிருக்கிளா? இளைய செறுக்கனுக்குத் திடீரென டைபாய்டு காய்ச்சல் வந்தது அங்குத் தங்கிக் கொண்டிருக்கும் போதுதான். தெரிந்தது. நான் ஊரில் இல்லை. இவளுக்குக் கைகால் ஓடவில்லை தெருச் சனங்கள் வந்து கூடிவிட்டார்கள்.... மஸ்தான் ஓடிச் சென்றான் ஆட்டோ பிடிக்க அவனே முன்நின்ற அந்தக் கணமே பெரிய

> ஆஸ்பத்திரிக்குக் கொண்டு சென்றதால் செறுக்கன் பிழைத்துவிட்டான். மேலும், மனுசனுக்கு மனுசன் உதவாமல் இருந்தால், மனுசனா பிறந்து என்ன பயன்? அந்நேரம் நினைவுக்கு வந்தது, எழில்வண்ணனின் வரிகள் துப்புரக்கேடான தெருவில் வாழ்ந்தாலும் அங்கு வாழும் மக்களின் மனங்கள் குளிரருவிகள்"[17]. (ப.395)

என்று இசுலாமிய அறக்கருத்துக்களை மையப்படுத்தி சிறுகதையில் அண்டை வீட்டாருடன் கொள்ளும் உறவுகளைப் பற்றிப் படைப்பாளர் உணர்த்துவதை அறியலாம்.

### 4.4.2.2 பிறர் நலம் விரும்புதல்

ஓரிறைக் கொள்கையைப் பின்பற்றும் இசுலாம் சமயத்தவர்கள் இழிகுணங்களிலிருந்து விலகி இருப்பதுடன் சமூக மக்கள் அனைவரிடமும் நன்மையை நாடுவது போன்ற ஆக்கப்பூர்வமான பண்புகளால் தன்னை அலங்கரித்துக் கொள்வர். இசுலாமிய மார்க்கம் என்பது 'பிறர் நலம் பேணுவதாகும்' என்று நபி அவர்கள் கூறுகின்றார். "தனது பொறுப்பின் கீழ் உள்ளவர்கள் மீது முழுமையான நன்மையை நாடாதவன் சுவனத்தின் வாடையைக் கூட நுகரமாட்டார்கள் என்பதை நபி கூற்று மூலம் அறியலாம்.

ஸஹுஃஹ் என்னும் அறிவிப்பாது "நீங்கள் அனைவரும் பொறுப்பாளர்கள். உங்கள் பொறுப்பின் கீழ் உள்ளவர்கைப் பற்றி விசாரிக்கப்படுவீர்கள்" என்ற நபி மொழியானது சமூகத்தில் ஒவ்வொரு மனிதனும் கடமையைக் கொண்டவர்கள் என்பதை வலியுறுத்துவதன் மூலம் மனிதகுலம் உயர்வடையும், உலகில் நிம்மதியும் வளமும் பெருகும் என்பதை இசுலாமிய சமூக வரலாற்றின் மூலம் அறியமுடிகிறது.

மனிதன் தன்னுடைய நலத்தைப் பேணுவது போன்று மற்றவருடைய நலத்தையும் பேண வேண்டும் என்ற இசுலாமிய அறத்தை 'நரகம் பூமியில்' என்ற சிறுகதையில் வெளிப்படுத்தும் விதமாக அமைத்துள்ளர் மீரான்.

> "வா லைலா! பரிவுடன் கூப்பிட்டேன்
> 'வேண்டாங்க. நானிங்கேயே படுக்கிறேன்:
> 'காய்ச்சலுடன் மழையில் வேறு நனைந்தால் எப்படியம்மா?'

> தன்னையும் அன்புடன் சோதர பாசத்துடன் ஆதரவு கூற ஒருவன் இருக்கிறான் என்ற உணர்வால் அவள் கண்களில் மகிழ்ச்சி வழிந்தது................ வேண்டாம் அண்ணா. அந்த ஓலையைக் கொஞ்சம் நீக்கி வையுங்களேன். ஒழுகல் கொஞ்சம் நிற்கும். மிகுந்த உரிமையுடன் அவள் கேட்டாள்”[18]. (ப.30)

லைலா என்ற பாத்திரம் வீட்டு வேலை செய்து வாழ்பவள். அவளுக்கு உடல்நிலை சரியில்லாத நிலையைக் கண்டு முதலாளியின் மகன் உதவுவதை தன் விளக்க வெளிப்பாடாக ஆசிரியர் வெளிப்படுத்தியுள்ளார். யாருமில்லாமல் அநாதையாக வாழும் பெண்ணிடம் சகோதர பாசத்துடன் உதவி செய்வதைத் தனது படைப்பின் வழிக்காட்டுகின்றார்.

உயர்ந்தவர், தாழ்ந்தவர் என்றில்லாமல் அனைத்து மக்களும் நட்புறவுடன் ஒருவருக்கொருவர் நலம் விரும்புதல் வேண்டும். இதனைச் சுருட்டுப்பா, காலத்தின் ஆவர்த்தனம், நாராயண முதலித்தெரு 52ஆம் நம்பர்வீடு, சன்னதியில் போன்ற சிறுகதையின் வாயிலாக எடுத்துக்காட்டுகின்றார்.

> “மருமகனுக்குக் கல்லூரிப் படிப்புக்கு அவ்வப்போது பணம் கொடுத்தது, ஒவ்வொரு பெருநாளுக்கும் புத்தாடை வாங்கிக் கொடுத்தது, வேலையில்லாமல் அலைந்தபோது உதவி புரிந்தது. பஹ்ரைன் செல்ல அவனுக்கு என்.ஓ.சிக்கு ஏற்பாடு செய்து கொடுத்தது எல்லாம் நினைவில் குழுமின”[19]. (ப.279)

தன்னுடைய சகோதரியின் மகன் ரஷீத் வாழ்க்கையில் நல்ல நிலைக்கு வரவேண்டும் என்ற உணர்வுடன் தன்னால் இயன்ற உதவிகளைச் செய்து தன் உறவுகளின் நலம் விரும்பும் தன்மையை முகமது மீரான் அவர்கள் காலத்தின் ஆவர்த்தனம் என்ற சிறுகதையின் வழி கூறுகின்றனர்.

> “ஒரு அடியானை அல்லாஹ் சிலருக்கு அதிகாரியாக ஆக்கியிருந்தான். அவன் தனது அதிகாரத்தின் கீழ் இருந்தவர்களுக்கு மோசடி செய்த நிலையில் மரணமடைந்தால் அவனுக்கு அல்லாஹ் சுவனத்தை ஹராமாக்கி விடுகிறான்”[20]. (ப.160)

என பிறா் நலம் விரும்பாதவன் சுவனத்திற்குள் நுழைய முடியாது என்பதை நபி மொழியாக முன்மாதிரி முஸ்லீம் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. இசுலாம் பிறா் நலம் விரும்பும் மாா்க்கமாகத் திகழ்வதை இதன் வழி அறிய முடிகிறது.

### 4.4.2.3 விருந்து உபசரிக்கும் தன்மை

இது இல்லறத்தில் கணவனும் மனைவியும் இணைந்து செய்யும் செயலாகும். தன்னிடம் உள்ளதைப் பிறருக்குக் கொடுத்து வாழ்வது விருந்தோம்பலாகும். விருந்தோம்பல் என்ற பண்பே சமூகத்தின் அடிவேராக காணப்படுகிறது. இதுவே பகுத்துண்டு வாழும் பண்பிற்கு அடித்தளமாக அமைகிறது. நான் என்ற குறுகிய வட்டத்திற்குள் இல்லாமல் எல்லோரும் எல்லாம் பெற வேண்டும் என்ற கொள்கைக்கு அடிப்படையாக அமைவது விருந்தோம்பல் ஆகும். விருந்தோம்பல் என்பது சங்ககாலம் முதல் இக்காலம் வரை அனைத்துச் சமயத்தவரிடமும் காணப்படும் உயா்ந்தப் பண்பாகும். இவ்விருந்தோம்பல் பற்றி சங்க இலக்கியங்களும் நீதி இலக்கியங்களும் எடுத்துரைக்கின்றன. வள்ளுவா் ‘விருந்தோம்பல்’ என்ற அதிகாரத்தில் சிறந்த அறக்கருத்துக்களைக் கூறியுள்ளாா்.

இல்வாழ்க்கையின் வழித்தோன்றுகின்ற நல்வாழ்க்கையே அறத்திற்கு வித்தாகின்றது. இல்லம் நோக்கி வரும் விருந்தினா்களை இன்முகம் காட்டி, இன்சொல் கூறி, உண்டியும், உடையும் இயற்ற வேண்டிய கடமைகளாகக் கூறப்பட்டுள்ளது. இல்லறத்தில் வாழ்பவா்கள் செலவிருந்தோம்பி வருவிருந்து பாா்த்திருக்க வேண்டும் என்று வள்ளுவா் கூறுகிறாா்.

“இருந்தோம்பி இல்வாழ்வு தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற்கு பொருட்டு”[21]. (குறள். 81)

இந்தக் குறளானது விருந்தினா்களாக வந்தவா்களை வரவேற்று உபசரித்து உதவி செய்வதைப் பற்றி விளக்குகிறது.

“விருந்து என்பது வறியாரை மறப்பது. செல்பவரை ஓம்புவது, பசித்தவா் ஓம்புவா், திக்கற்றவா் முகம் ஆகியோரைக் கண்டு இன்முகத்துடன் வரவேற்று அன்புடன் போற்றி உதவுவதைக் கடமை என்று உணா்ந்து செய்யும் அறத்தையே உண்மையான விருந்து”[22] என்று கூறுவா். விருந்து என்னும் பண்பானது

தமிழர்களுக்கு உரியதாகும். இத்தகைய தன்மையினை இசுலாம் சமயமானது விருந்தோம்பல் என்ற பண்பு தர்மசிந்தனையுடைய இசுலாமியரிடம் ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் என்று கூறுகிறது.

விருந்தோம்பல் என்பது இசுலாமியர்களின் இயற்கைப் பண்பாகும். இல்லறத்திற்கு விருந்தினர் எவரேனும் வந்தால் விரைந்து சென்று அவர்களுக்குரிய ஏற்பாடுகளைச் செய்து கண்ணியப்படுத்துவது இசுலாமியரின் கட்டாயக் கடமையாகும். இத்தகைய பண்பினை,

> "இறைவன்பால் கொண்ட அன்பால் வீடு நோக்கி வந்த உற்றார், உறவினர், வழிபோக்கர் ஏழை, அநாதைகள், உபசரிப்பாயாக இதுவே புண்ணியமாகும்"[23] (திருக்குர் ஆன். 2-177)

என விருந்தோம்பல் பற்றி திருக்குர்ஆன் கூறுகிறது. இதனைத் தோப்பில் முகமது மீரான் 'ஓர் உஸ்தாதின் அகமியம்' என்று சிறுகதையில் சுட்டிக் காட்டியுள்ளார்.

> "டேய்! வாப்பா கூப்பிட்டார். நீ போய் அந்தக் கோழியைப் புடிச்சு அறுத்துட்டு வாடா. உஸ்தாதுக்கு ஒரு சாப்பாடு கொடுப்போம்..... வீட்டில் பின்பகுதியில் கொத்தி மேய்ந்து
>
> கொண்டிருந்த கோழியை நான் விரட்டிப் பிடித்தேன். இருகால்களையும் சேர்த்துக் கட்டுப்போட்டேன்"[24].
>
> (பக்.193-194)

விருந்தினரை உபசரிப்பது மக்களின் விருப்பமான செயலாகும் என்பதைத் தனது படைப்பில் எடுத்துக்காட்டியுள்ளார்.

விருந்தினரை வரவேற்பதில் மகிழ்ந்து அவர்களைச் சிறப்பிக்க ஆவல் கொள்ள வேண்டும் என்று நபி அவர்கள் கூற்றாகக் கூறப்படுகிறது.

> "எவர் அல்லாஹ்வையும் மறுமை நாளையும் ஈமான் கொண்டாரோ அவர் தனது விருந்தினரை கண்ணியப்படுத்தட்டும்"[25] (ப.269)

விருந்தினரைப் பெருமைப்படுத்துவது இசுலாமியருக்கு விருப்பமான உயரிய நற்செயலாகும். அதில் முஸ்லீம் நன்மையளிக்கப்படுகிறார். விருந்தோம்பலுக்கென இசுலாம் சில கட்டுப்பாடுகளையும், வரம்புகளையும் நிர்ணயித்துள்ளது. விருந்தின் அன்பளிப்புக் காலம் ஒரு நாளாகும் பிறகு கடமையான விருந்தோம்பல் மூன்று நாளாகும். அதற்கதிகமாக அளிக்கப்படும் நாட்கள் தர்மமாகி, விருந்தளித்தவரின் செயலேட்டில் நன்மைகளாக பதியப்படுகின்றன.

"விருந்தளிக்காதவனிடம் எந்த நன்மையும் இல்லை"[26] என (ப.270) நபி (ஸல்) அவர்கள் கூறுகிறார். முஸ்லீம் தனது சகோதரரிடம் விருந்தாளியாகச் செல்லும்போது அவரைச் சிரமப்படுத்துமளவு தங்குவது ஆகுமானதல்ல என நபி அவர்கள் தனது வேதக்கருத்துக்கள் மூலம் உணர்த்துகிறார். விருந்தோம்பலை இசுலாம் சமயம் ஒவ்வொரு முஸ்லீம்களுக்கும் கடமையாக்கி அது விருந்தினருக்கான உரிமை எனவும் பறை சாற்றுகிறது. அதைக் குறைவின்றி நிறைவேற்றுவது முஸ்லீமின் கடமையாகும். இது இசுலாம் சமயத்தின் அறப்பண்புகளாகக் கொள்ளப்படுகிறது. இக்கருத்தை அடியொற்றி அமைந்தது 'ஓர் உஸ்தாதின் அகமியம்' என்னும் சிறுகதையாகும்.

### 4.4.2.4 ஜக்காத்தின் சிறப்பு

செல்வம் என்பது மனித சமூகத்திற்கு அடிப்படையானதும் அவசியமானதும் என்பதை இசுலாம் ஏற்றுக் கொள்கிறது. 'ஜக்காத்' என்பது தூய்மைப்படுத்துதல், சுத்தப்படுத்துதல், ஈகை என்று பொருள்படும். ஒருவர் பெருகிக் கொண்டிருக்கும் தம்முடைய சொத்தில் ஒரு பகுதியைத் தூய்மைப்படுத்துவதற்காக ஏழைகளுக்கு வழங்க வேண்டும் என்பதன் மூலம் நட்புறவுப் பாலம் அமைவதை இசுலாம் வலியுறுத்துகிறது. இசுலாம் வேதத்தின்படி ஒரு மனிதன் மனித சமூகத்திற்கு உண்மையானவராக இருக்க வேண்டுமானால், தான் வாழும் சமூகத்தில் உள்ள வறியோருக்கும், ஏழைகளுக்கும் தருமம் செய்பவராக இருக்க வேண்டும்.

இசுலாம் மார்க்கத்தைப் பின்பற்றும் இசுலாமியர்கள் தன்னால் இயன்ற அளவு அண்டை வீட்டாருக்கு உதவியும் உபகாரமும் செய்வர். சிறிய பொருளாக இருந்தாலும் அண்டை வீட்டாருக்குக் கொடுத்து உதவ வேண்டும் என்பதைப் புலப்படுத்தும் பொருட்டு,

“ஜகாத் எனும் தான தருமங்கள் ஏழைகளுக்கும் வறியவர்களுக்கும் உரியதாகும்”[27]. (திருக்குர் ஆன். 9-60)

மேலும்,

“உம் இதயத்தை தான தர்மம் செய்யும் பொருட்டு விரிவாக்கினோம்”[28] (திருக்குர் ஆன். 94-1)

என்ற வேதத்தின் மூலம் ஜகாத்தின் தன்மையினை அறிய முடிகிறது. அறம் நிறைந்த இல்லற வாழ்க்கையில் ஜகாத் ஒரு சிறந்த கூறாகும். இல்லறத்தில் வாழும் அன்புடையவர்கள் பிறருடைய துன்பத்தைக் கண்டு பொறுத்துக் கொள்ளமாட்டார்கள். தம்மால் இயன்ற அளவு பிறரது துன்பத்தையும், வறுமையினையும் போக்குவதே இல்லறத்தாரின் கடமையாகும். இவ்வாறு செயல்படுவதும் ஜகாத் எனப்படும். ஜகாத் எனும் பெயரால் பொருளுடையவருக்கே மென்மேலும் கொடுத்து உதவுவதால் பயன் இல்லை. அ∴து ஜகாத் ஆகாது. இக்கருத்தை “ஒரு குட்டித் தீவின் வரைபடம்” எனும் சிறுகதையில்,

“செல்வந்தவர்களின் பணப்பெட்டிகள் திறப்பது நோன்பு பத்துக்குப் பிறகுதான் என்று. பத்துக்குப் பிறகு சக்காத்து வாங்க வருவோரை வீட்டு முற்றத்தில கூடச் செய்து சக்காத்து பணம் வழங்காத சுபாவம் வாப்பாவுடையது. இந்தச் சுபாவம் எனக்கு பிடிக்காது. எங்க வீட்டு முற்றத்தில் சக்காத்து வாங்க மக்கள் திரண்டு நிற்பது பார்க்கப் பெருமையாக இருக்கும். வீட்டை விட்டு வெளியே வராத ஏழைப் பெண்கள், வாய் திறந்து கேட்க வெட்கப்பட்டக் கூடிய மானிகள், விதவைகள், அவதிப்படும் நோயாளிகள் போன்றோர்களின் பெயர் அடங்கிய பட்டியல் வாப்பாவிடம் உண்டு. பட்டியலில் பெயர் உள்ள நபர்களுக்கு அவர்களது வீடு தேடிச் சென்று சக்காத்து கொண்டு கொடுப்பதுதான் போரிசை (நன்மை) யானது என்பார் வாப்பா”[29].

(ப.463)

வறுமையில் வாடி இரந்து வாழ்பவர்கள் கையேந்திக் கேக்காதபடி குறிப்பாலேயே அவர்களது தேவையை அறிந்து பொருள் கொடுத்து உதவவேண்டும் என்று தனது

படைப்பின் மூலமாகப் புலப்படுத்துகின்றார். ஜகாத்தின் சிறப்புப் பற்றி இசுலாம் மற்றுமல்லலாது ஏனைய சமயங்களும் வலியுறுத்துகின்றன.

ஜகாத்தினை ஆண்டுக்கொருமுறை தனது சேமிப்பில் இரண்டரைச் சதவீதம் என்ற கணக்கில் கொடுக்கப்பட வேண்டும். இந்த விகிதம் ரொக்கம், வங்கிச் சேமிப்பு, தங்கம், வெள்ளி நகைகள் ஆகியவற்றுக்குப் பொருந்தும் கால்நடைகளுக்கும் விவசாயம் உற்பத்திக்கும் ஜகாத் விகிதம் வேறுபடுகிறது. ஜகாத் என்பது கட்டாயமாகச் செலுத்த வேண்டிய ஒரு கடமை. தா்மமோ, வரியோ அல்ல. தா்மம் என்பது நமது சுயவிருப்பம், வரியோ எந்த நோக்கத்திற்காகவும் அரசால் பயன்படுத்தப்படக் கூடியது. ஆனால் ஜகாத் சில குறிப்பிட்ட காரணங்களுக்காக மட்டுமே பயன்படுத்தப்பட வேண்டும். ஏழைகளுக்கும், வறியவா்களுக்கும் உதவ ஜகாத் வசூலிப்பவா்களுக்கான கூலி, போா்க் கைதிகளையும் கடனாளிகளையும் விடுவிக்க, உள்ளவா்கள் இணக்கமாக்கப்பட்ட பயணத்திலிருக்கும் தேவையுடையோருக்காக இறைவழி செலவு செய்ய என அதன் பட்டியல் வகைப்படுத்தப்படுகிறது.

**ஜகாத் அட்டவணை**

| ஜகாத் கொடுக்க வேண்டிய செல்வம் | ஜகாத் வழங்கத் தீா்மானிக்கப்படும் பொருள்களின் மதிப்பு (நிஸாப்) (Nisab) | ஜகாத் விகிதம் |
|---|---|---|
| 1. வேளாண் உற்பத்தி | ஒவ்வொரு அறுவடையிலும் (653 Kg) | நீா்ப்பாசன நில உற்பத்திப் பொருள்களில் 5 சதவீதம். புன்செய் நில உற்பத்தியில் பத்து சதவீதம் |
| 2. தங்கம், வெள்ளி மற்றும் தங்க, வெளளி நகைகள் | 85 கிராம் தங்கம் 595 கிராம் வெள்ளி | 2.5 சதவீதம் |
| 3. பணம் கையிருப்பு அல்லது வங்கியிருப்பு | 595 கிராம் வெள்ளியின் கிரயம் | 2.5 சதவீதத் தொகை |

| | | |
|---|---|---|
| 4. வியாபாரப் பொருட்கள் | 595 கிராம் வெள்ளியின் கிரயம் | 2.5 சதவீத தொகை மதிப்புள்ள பொருட்கள் |
| 5. பசு, எருமைகள் | முப்பது எண்ணிக்கை | ஒவ்வொரு முப்பது மாடுகளுக்கும் ஒரு வயது மாடு ஒன்று.<br>ஒவ்வொரு நாற்பது மாடுகளுக்கும் இரண்டு வயது மாடு |
| 6. வெள்ளாடு, செம்மறியாடு | நாற்பது எண்ணிக்கை | ஒன்று முதல் நாற்பது ஆடுகளுக்கு ஒன்று, நூற்றி இருபது ஆடுகளுக்கு இரண்டு. முன்னூறு ஆடுகளுக்கு மூன்று அடுத்த ஒவ்வொரு நூறு ஆடுகளுக்கும் ஒன்று கூடுதலாக |
| 7. சுரங்க உற்பத்தி | எவ்வளவு இருந்தாலும் | உற்பத்தியின் மதிப்பில 20 சதவீதம் |
| 8. ஒட்டகங்கள் | ஐந்து எண்ணிக்கை | 1-24 வரை இருந்தால் ஒவ்வொரு 5 ஒட்டகங்களுக்கும் ஒரு வெள்ளாடு அல்லது செம்மறியாடு<br>25க்கு மேல் இருந்தால் ஒட்டகம் ஒன்று. இரண்டு என்று கணக்கிற்கு ஏற்றவாறு கொடுக்க வேண்டும். மேலும் அதிகமுள்ள ஒவ்வொரு 50 ஒட்டகங்களுக்கும் 3 வயது பெண் ஒட்டகம் ஒன்று சேர்த்துக் கொடுக்க வேண்டும். |

ஜகாத் தொகையை வறியோருக்கு வழங்க வேண்டும் என இசுலாம் சமயம் கூறுவதன் மூலம் பகுத்துண்ணும் பழக்கம் மனிதனின் மனத்தில் மேலோங்கி காணப்படுகிறது. மேலும் செல்வம் ஒரே இடத்தில் குவிவது களையப்பட்டு சரியான சமத்துவம் நிலைநாட்டப்படுகிறது. இத்தகைய சமநிலை உருவாவதற்கு இசுலாம் சமயம் முக்கியப் பங்கு வகிக்கிறது.

ஜகாத் பணம் யாருக்கெல்லாம் எவ்வளவு கொடுக்க வேண்டும் என்று சமயம் வரையறுக்கிறது. இவ்வரையறைக்கு உட்படுத்தி தனது சிறுகதையில ஜகாத் தன்மையை வெளிப்படுத்துகின்றார்.

> "சக்காத் பணம் யாருக்கெல்லாம் கொடுக்க வேண்டுமென்ற பட்டியல் தயார் செய்து வைத்திருந்து.... ஒரு ரூபாய் கொடுக்க வேண்டியவர்களுக்கு ஒரு ரூபாய் நோட்டுகள் தனியாகவும், இரண்டு ரூபாய் கொடுக்க வேண்டியவர்களுக்கு இரண்டு ரூபாய் நோட்டுகள் தனியாகவும் தந்து, சதுரமாக வீடு வீடாகக் கொண்டு கொடுக்கச் சொன்னார்கள்"[30]. (ப.467)

படைப்பாளர் இசுலாமிய சமயத்தைச் சார்ந்தவர் ஆதலால் அவருக்கு சமயப் பொறை இல்லாவிடினும் இச்சமயத்தின் தாக்கத்தை சிறுகதைகளில் பதிவு செய்தள்ளார். இசுலாமிய சமயம் வகுத்த அறக்கருத்துக்களைத் தனது சிறுகதையில் ஆங்காங்கே சுட்டிக் காட்டியுள்ளார்.

இசுலாம் சமயத்தில் ஜகாத் என்று கூறுவதைப் போன்று வறியவர்களுக்குக் கொடுப்பதை இலக்கியங்களில் ஈகை என்ற பொருளில் வழங்கப்படுகிறது. சங்க காலத்தில் ஈகை எனும் அறம் உயர்வாக மதிக்கப்பட்டது. இதனைத் தொல்காப்பியர்,

> "ஈ எனக் கிளவி இழிந்தோன் கூற்றே"[31] (தொல்.சொல். 928)

என்கிறார். ஈ என்ற சொல்லானது தாழ்ந்தோன் உயர்ந்தவர்களிடம் இரக்கும் தன்மை என்பதைத் தொல்காப்பிய நூலின் மூலம் அறியலாம். இந்த உலகத்தில் நன்மையே கிடைப்பதாக இருந்தாலும் பிறரிடம் இரப்பது தீயது ஆகும். மேல் உலகம் என ஒன்று இல்லை என்று எண்ணினாலும் பிறருக்கு உதவுவது நல்லது என்பதை வள்ளவர் வாய்மொழி மூலம் உணரலாம்.

> "நல்ஆறு எனினும் கொளல்தீது மேலுலகம்
> இல்எனினும் ஈதலே நன்று"[32] (குறள். 222)

நால்வாழ்க்கைக்கு ஒளிகாட்டும் கருத்துக்களாக ஈகை பற்றி வள்ளுவர் கூறியுள்ளார். ஈகை மூலம் ஒருவருக்கொருவர் மனதில் நேசம் எனும் விதை ஊன்றப்பட்டு சமூகம் என்னும் ஆலமரத்தின் நிழலைப் போல் கருணையையும் பாசத்தையும் பரிமாறிக் கொள்வார்கள் என்பதை அறிய முடிகிறது.

### 4.4.3 இசுலாமிய ஒழுக்கவியல்

மனித வாழ்வின் ஒவ்வொரு நிலையிலும் கடைப்பிடித்துப் பேண வேண்டியவை ஒழுக்கவியல் என்று அழைக்கப்படுகின்றது. இஃது சமூகக் கூட்டத்தின் பண்பாய் அமைதலால் சமூகவியல் என்றாகிறது. இசுலாம் எடுத்துரைக்கும் ஒழுக்கவியல் என்பது மானுட வாழ்வியல் தத்துவங்களையும் மனித வாழ்விற்கேற்ற அறக்கோட்பாடுகளையும் தம்மகத்தே கொண்டமைந்துள்ளது. இவ்விரண்டையும் இறையச்சம், இறை உவப்பு என்ற இருநிலைகளுக்குட்படுத்தி மனித ஒழுக்கவியலை முறைமைப்படுத்துகின்றன. திருக்குர்ஆன் உவப்பு என்பது மனித எண்ணங்களை, செயல்பாடுகளை நன்மையின் பக்கம் நாடும்படி தூண்டுகிறது. அதே நேரத்தில் மறுமை வாழ்வு குறித்த இறையச்சம் என்னும் கருத்தாக்கம் மனிதனைத் தீமைகளிலிருந்து விலகிச் செல்வதற்கான வழிகாட்டும் நெறிமுறையாக அமைந்துள்ளது, திருமறையில் இடம்பெறும் இறைஉவப்பு, இறையச்சம் தொடர்பான கருத்துகளை அடிப்படையாகக் கொண்டு ஒழுக்கவியல் செய்திகளைப் பின்வரும் தலைப்புகளில் விளக்கலாம்.

1. வாழ்வியல் ஒழுக்கம்
2. கூடா ஒழுக்கம்

#### 4.4.3.1 வாழ்வியல் ஒழுக்கம்

இசுலாமிய வாழ்க்கை அமைப்பின் அடிப்படைகளை அறிவார்ந்த நிலையில் தெளிவாக்கி; அதன் ஒழுக்க ஆதாரங்களை எடுத்துரைத்து அதற்காக உள்ளம் உணரும் வகையில் அறிவு சார்ந்த அடிப்படைகள் அனைத்தும் தந்து அந்த அடிப்படைகளை நிலைநிறுத்தி உறுதிப்படுத்துவதே திருக்குர்ஆனின் நோக்கமும் பணியும் ஆகும்.

இசுலாமிய வாழ்க்கை முறையைச் செயல்படுத்துவதற்காக வாழ்வின் ஒவ்வொரு அம்சம் குறித்தும் மிக விரிவான சட்டத்திட்டங்களையும்,

விதிமுறைகளையும் வகுத்துத் தருகின்றது என்பதோடு மட்டுமல்லாமல் வாழ்க்கையின் ஒவ்வொரு துறை குறித்தும் அதற்குள்ள எல்லைகளையும், வரம்புகளையும் நிர்ணயித்து இறைவனின் விருப்பத்திற்கு இசைவாக அத்துறைகளை எவ்வாறு அமைக்க வேண்டும் என்று அறிவிக்கக் கூடியதாகவும் இருக்கின்றது. மனிதன் எப்படியும் வாழலாம் என்பது ஒழுக்க வாழ்வாகாது. உலக இயற்கை நியதிகளான பூ மணக்க வேண்டும். பழம் இனிக்க வேண்டும். நெருப்பு சுட்டெரிக்க வேண்டும். இப்படி ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு பண்பு உண்டு. இயல்பு உண்டு. அவ்வாறு மனிதன் வாழும் வாழ்க்கைக்கு ஒரு வரையறை உண்டு. ஒரு நெறி உண்டு. அத்தகைய நெறி அறம் எனப்படும். இவ்வறம் சிறக்க ஒழுக்கத்தை வரையறை செய்துள்ளது இசுலாமிய வேதம். அவை.

1. கடமைகள் நிறைவேற்றுதல்
2. இல்வாழ்க்கை
3. அன்பு கொள்ளுதல்
4. மனித நேயம்

### 4.4.3.1.1 கடமைகள் நிறைவேற்றுதல்

இசுலாமிய மக்கள் அனைவரும் இறைவன் வகுத்துத் தந்த கடமைகளைப் பின்பற்றி வாழ வேண்டும் என வலியுறுத்தப்படுகிறது. அவை கலிமா, தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் என்பனவாகும். இக்கடமைகளை நிறைவேற்றுவதன் மூலம் மனிதனின் அகமும், புறமும் தூய்மையடைகிறது. தொழுகை என்பது இசுலாத்தின் இரண்டாவது தூண் என்று கூறப்படுகிறது. இது நாள்தோறும் செய்ய வேண்டிய ஐந்துநேரத் தொழுகையைக் குறிக்கிறது. இறைவனை நினைவுகூர்வதற்காகத் தொழுகிறோம். இது இறைவனுடன் மனிதனை நெருக்கம் கொள்ளச் செய்கிறது எனறு இசுலாமிய வேதநூல் கூறுகிறது. இதனை,

> “என்னை நினைவுக்கூர்வதற்காக தொழுகையை நிலைநாட்டுங்கள்”[33].
>
> (திருக்குர்ஆன் 20:14)

என இறைவன் மீதான மனிதன் நம்பிக்கைக்கும் இசுலாத்தின் மீதான நம்பிக்கைக்கும் தொழுகைச் செயல்முறை அத்தாட்சி. இத்தகைய தொழுகையானது ஆண்களையும், பெண்களையும் இறைவனுக்கு

நெருக்கமாக்குகின்றது. மேலும் மனிதர்களைத் தூய்மையற்ற, வெட்கக்கேடான விலக்கப்பட்ட செயல்களிலிருந்து விலக்கி வைக்கிறது. இது தீய எண்ணங்களையும், தீய ஆசைகளையும் விலக்குவதுடன் ஒழுக்கத்தையும், மனவுறுதியையும் மேம்படுத்துகிறது. உண்மையான சமத்துவத்துக்கும் திடமான ஒற்றுமைக்கும் உலகளாவிய சகோதரத்துவத்துக்கும் தொழுகை ஒரு சாட்சியாயிருக்கிறது. பொறுமை, துணிவு, தன்னம்பிக்கை போன்றவற்றிற்கு அடிப்படையாக இருக்கிறது. இதுவே ஒழுக்கத்தின் தன்மையாகும்.

தோப்பில் முகமது மீரான் இத்தொழுகையை அடிப்படையாகக் கொண்டு தலைப்பெருநாள், தஜ்ஜால் மேல் விழுந்த மலை, இறக்கை இழந்த பறவைகள், ஒரு செருப்பின் கதை, இன்று நான் நாளை நீ! தங்கராசு, 45வது வார்டு வேட்பாளர், சன்னதியில் போன்ற சிறுகதைகளைப் படைத்துள்ளார்.

இசுலாத்தின் அடிப்படைக் கடமைகளுள் ஒன்றான தொழுகையையும் அதனுடைய நேர அமைவையும் கதைப்போக்குடன் வெளிப்படுத்துகின்றார். ‘தஜ்ஜால் மேல் விழுந்த மலை’ என்ற சிறுகதையில் சுக்கா் லெப்பை என்ற பாத்திரம் தொழுகைக்கான பாங்கு கொடுக்கும் பணியினையும் இவரின் பொறுமையையும், நேரந்தவறாமையையும் பற்றி விவரித்துள்ளார்.

படைப்பாளர் மாலைத்தொழுகை, இரவுத்தொழுகை, நண்பகல் தொழுகை என்று ஐங்காலத் தொழுகைகளையும் தன் சிறுகதைகளின் வாயிலாக வெளிப்படுத்துகின்றார். ஓர் உண்மையான இசுலாமியரின் அடையாளமே ஐங்காலத் தொழுகையை சரிவரத நிறைவேற்றுவதுதான். இதனடிப்படையில் ஆங்காங்கே பல சிறுகதைகளில் அறிவுறுத்திச் செல்கின்றார் ஆசிரியர். இசுலாமியர்கள் வழிபாடு என்ற நிலையில் காலம் தவறாமைக் கடைப்பிடிக்கக் கூடியவர்கள். அந்தந்த நேரத் தொழுகையை எந்தச் சூழலிலும் தள்ளி வைக்காமல் குறிப்பிட்ட நேரத்தில் தொழுகைக்கு முந்திய அழைப்பைக் கொடுத்துச் சரியான நேரத்தில் தொழுகையை நடத்தக் கூடியவர்கள் என்பதை மிக இயல்பாகத் தனது படைப்பில் எடுத்தியம்புகின்றார். ஐந்து நேரத் தொழுகையை,

> “அசருக்கு இன்னும் நேரமிருக்கிறது,........
>
> ..........................சுபுஹுக்கு பாங்கு சொல்ல வரும்போது

அருணாசலப் பிள்ளையின் கடை திறந்திருந்தது. அங்கு ஒரு சாயா குடித்தார். அந்த தெம்பில்தான் லுஹருக்குப் பாங்கு சொல்ல முடிந்தது”[34]. (ப.32)

தஜ்ஜால் மேல் விழுந்த மலை என்ற சிறுகதையின் வழி கூறுவதன் மூலமாக ஆசிரியர் தம் படைப்புகளுக்கு ஒருவகையான இசுலாம் சமூகப் பின்னணியை உருவாக்கித் தந்துள்ளார் என்று கூறவேண்டும்.

இசுலாம் சமூகத்தில் நோன்பு அவர்களுக்கு விதிக்கப்பட்ட ஐந்து கடமைகளுள் மூன்றாவது கடமையாகும். இந்த நோன்பை இசுலாமிய ஆண்டில் ஒன்பதாவது மாதமான ரமலான் மாதத்தில் கடைப்பிடிப்பர். நோன்பு இறைவனின் கட்டளைகளை உண்மையாகப் பின்பற்றுவதற்கும் உதவுகிறது என்று குர்ஆன் கூறுகிறது.

“இறை நம்பிக்கையாளர்களே! உங்களுக்கு முன் இருந்த (நபிமார்களைப் பின்பற்றிய)வர்கள் மீது கடமையாக்கப்பட்டது போல், உங்கள் மீது நோன்பு கடமையாக்கப்பட்டிருக்கிறது. (அதன் மூலம்) நீங்கள் இறையச்சமுள்ளவர்களாய்த் திகழக் கூடும்”[35].

(திருக்குர்ஆன். 2:183)

நோன்பின் முக்கிய நோக்கம் ஆசைகளைக் கட்டுப்படுத்தக் கூடியவராக ஒரு இசுலாமியரை உருவாக்கி அதன் மூலம் நன்னடத்தையும், நற்சிந்தனையும் உடையவராக அவரை மாற்றுவது. பொதுவாக எல்லோரிடம் காணப்படும் கோபம் கூட நோன்பினால் கட்டுக்குள் கொண்டு வரப்படுகிறது. இதனைப் படைப்பாளர் மீரான் விளக்கி, ஒரு குட்டித்தீவின் வரைப்படம், காலண்டர் பாவா போன்ற கதைகளின் வாயிலாக உணர்த்துகின்றார்.

“வெள்ளிக்கிழமை மதியம் தொழுகையை முடித்துவிட்டு வீட்டுக்கு வந்த வாப்பா நோன்பு வைத்திருந்த வாயுடன் இருகையேந்தி துஆ கேட்டது!. அல்லா! என் கபரை விசாலமான பூங்காவாக்கித் தா!”[36] (ப. 466)

தொழுகை, நோன்பு போன்ற கடமைகளை நிறைவேற்றுவதால் மனிதன் மனத்தில் இறையச்சம் உண்டாகிறது என்பதை இக்கருத்தின் மூலம் எடுத்துரைக்கின்றார். நோன்பு இருந்தால் பசி எப்படியிருக்குமென்பதை முழுமையாக உணர்ந்து கொண்டு அப்பசியால் துன்புறுபவருக்கு உதவி செய்யும் நோக்கில் நோன்பு அமைந்துள்ளது. மேலும் சுயக்கட்டுப்பாட்டையும் ஆடம்பரமான வாழ்க்கை வாழக்கூடாதென்பதையும் போதிக்கிறது.

இசுலாத்தின் இறுதியான கடமை 'ஹஜ்' (புனிதப் பயணம்) பயணமாகும். அதனை மேற்கொள்வதற்கு இன்றியமையாதது நல்ல ஒழுக்கமேயாகும். இதனையே வேதநூலும் கூறுகிறது. தொழுகைக்குச் செல்லும் போது ஈமான் கொண்டவர்கள் உள்ளம், உடல் சுத்தமாக வைத்துக் கொள்வது 'தக்வா' எனும் பயபக்தியாகும். அது ஒழுக்கத்தின் தன்மையை கூறுவதாகும். ஹஜ் என்பது தொழுகை, ஜகாத் ஆகியவற்றின் எல்லா போதனைகளையும் தன்னுள் கொண்டுள்ளது.

ஹஜ் செல்லும் ஒருவர் இறைவன் வகுத்துக் கொடுத்துள்ள அற ஒழுக்கங்களைத் தன் வாழ்க்கையில் பேணி நடந்திருக்க வேண்டும். இவ்வாறு ஒழுக்கங்களைக் கடைப்பிடித்தவர் செய்யும் ஹஜ் சிறந்ததாக இறைவனிடத்தில் நெருக்கத்தை ஏற்படுத்தும் என்பதை நபி (ஸல்) அவர்கள் கூறுகின்றார்கள்.

> "ஒருவன் இறை இல்லத்தை தரிசிக்க இங்கு வந்தள்ளார். மேலும், அவர் மானக்கேடான செயல்கள், இச்சகைளைத் தூண்டக்கூடிய பேச்சுக்களிலிருந்தும் விலகி இருக்கிறார். இன்னும் பாவங்கள் தவறுகளில் ஈடுபடாமல் இருக்கின்றார். எனில், தம் தாயின் வயிற்றிலிருந்து பிறக்கும் தூய்மையான குழந்தையைப் போல், அவர்தம் வீட்டுக்குத் திரும்புகிறார்"[37]. (ப.214)

என்று ஹஜ் செய்வதினால் ஏற்படும் நன்மைகள் பற்றி வாழ்க்கைக்கலை என்னும் நூலில் கூறப்பட்டுள்ளது.

ஹஜ் செய்வதற்குப் புறப்படும் போது மனிதன் தான் செய்த தீமைகளுக்கும், தவறுகளுக்கும் மற்றவரிடம் மன்னிப்புக் கேட்டாக வேண்டும். இதன் மூலம் மனிதனுக்கு மனிதன் மன்னிக்கும் குணத்தையும், தான் செய்த தவறுகளை எண்ணி

வருந்தும் தன்மையையும் உண்டாக்குகிறது. இதனை ‘முன்னோர்களின் இரண்டாவது நல்லடக்கம்” என்ற சிறுகதையில்,

> “துனியாவிலுள்ள (உலகம்) கடமைகளை வெற்றிகரமாக முடித்துவிட்டு மக்காவுக்குப் புனிதப் பயணம் மேற்கொள்பவர்கள் சொந்த பந்தங்கள், கண்டறிந்தவர்கள், அனைவரிடத்திலும் பிழைகள் மீண்டு விடை கேட்பது மக்காப் பயணத்திற்கு முன்புள்ள ஆசாரமானதால் எல்லாரையும் போல் நானும் தாத்தாவும், மச்சானும் எனக்குச் செய்த பிழைகளைப் பொறுத்துக் கொண்டேன்”[38]. (ப. 508)

என இசுலாமியக் கடமைகள் அனைத்தும் மனிதனை நல்வழிப்படுத்தும் நோக்கத்தில் உருவாகியுள்ளது என்பதைத் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதைகளில் வெளிப்படுத்தியுள்ளார்.

### 4.4.3.1.1.2 இல்வாழ்க்கை

இல்வாழ்க்கை என்பது ஒரு ஆணும், பெண்ணும் கருத்தொருமித்து இணைந்து, விட்டுக் கொடுத்து அன்புடன் வாழும் பண்பாகும். இல்லற வாழ்க்கைக்கு அடிப்படையாக அமைவது திருமணமாகும். திருமணத்தின் மூலம்தான் குடும்பம் என்ற அமைப்பானது உருவாகிறது. குடும்ப அமைப்பே ஒரு சமூக அமைப்பிற்கு அடித்தளமாக அமைகின்றது. திருமணம் என்பது இறைவன் மனித இனத்திற்கு அளித்த அருட்கொடை என்று இசுலாம் மார்க்கம் வலியுறுத்துகின்றது.

அன்பை அடிப்படையாகக் கொண்ட இல்லறத்தில் நல்ல சந்ததியினர் உருவாக்கப்படுகின்றனர். இல்லறத்தின் மூலம் சமூகத்தில் குடும்பம் என்ற அமைப்புக்குள் இருக்கும் கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் தன் கற்பையும், மானத்தையும் பாதுகாத்துக் கொள்ளும் ஆடையைப் போல் இருக்க வேண்டும்.

> “அவர்கள் உங்களுக்கு ஆடையாகவும்
> நீங்கள் (ஆண்கள்) அவர்களுக்கு ஆடையாகவும்
> இருக்கின்றீர்கள்”[39]. (திருக்குர் ஆன். 2:187)

என்று இல்லறம் பற்றி திருக்குர்ஆன் கூறுகிறது. இல்லறத்தில் கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழும்போது அந்த இல்லறம் சிறந்த குடும்பமாக விளங்குவதுடன் அவை அமைதி சூழ்ந்த சமூகத்தை உருவாக்குவதில் முக்கியப் பங்கு வகிக்கின்றது என்பதைப் படைப்பாளர் 'விளக்கு' என்ற சிறுகதையில் வெளிக்காட்டுகிறார்.

> "அந்தகனான கணவனின் கண்கள் அவன் மனைவி. முடவனின் கால்கள் அவன் இல்லாள். எல்லா அவயங்களும் உள்ளவனுக்கோ அவன் வாழ்வின் சரிபாதி அவள். துன்பத்தை இன்பமயமாக்குபவள் அவள்"[40]. (ப.12)

என்பதன் மூலம் கணவனும், மனைவியும் ஒருவருக்கொருவர் அன்பு கொண்டு இல்லறத்தைச் சிறப்புடன் நடத்துவதும், துன்பங்களை இன்பமாக மாற்றுவதும் பெண் என்று தன் படைப்பின் வழி உணர்த்துகின்றார். இல்வாழ்க்கையில் ஈடுபடும் கணவன் தன் மனைவி மேல் கொள்ளும் அன்பும் பிறருக்குக் கொடுத்துப் பகுத்துண்ணும் அறச்செயலும் இல்வாழ்க்கைக்குப் பண்பும் பயனாக அமையும் என்பதை வள்ளுவர்,

> "அன்பும் அறனும் உடைத்தாயின் இல்வாழ்க்கை
> பண்பும் பயனும் அது"[41]. (குறள். 45)

என்று குறள் மூலம் அறநெறியில் இருந்து வழுவாது வாழ்வது இல்வாழ்கையாகும் என்று எடுத்துரைக்கிறார். மனிதன் சமூக அமைப்பில் தனித்து வாழமுடியாதவன். அவன் மற்றொருவரைச் சார்ந்தே வாழவேண்டும். இது இயற்கை நியதி ஆகும். அந்த அடிப்படையில் மனிதர்கள் வாழும்போது சமுதாயத்தில் ஒற்றுமை உணர்வு மேலோங்கும். அந்த உணர்வினை அடிப்படையாகக் கொண்டு ஒழுக்கங்களையும், சிறந்த பண்புகளையும் எடுத்துரைக்கும் களமாக இல்லறம் விளங்குகிறது என்பதையும் தனது படைப்பில் ஆங்காங்கே வெளிக்காட்டுகிறார்.

### 4.4.3.1.3 அன்பு கொள்ளுதல்

சமூகத்தின் உயிர் நாடியாகவும், வாழ்க்கையின் உயிர்நாடியாகவும் இருப்பது அன்புதான். ஒரு மனிதனை அறம் செய்வதற்குத் தூண்டுகோலாக அமைவது

அன்புதான். இத்தகைய அன்பானது மனிதனிடத்தில் இயற்றையாக அமையும் உணர்வாகும். அன்பு என்ற சுழற்சி உலகில் இல்லையென்றால் பூமி என்ற பந்து இயங்காமல் இருக்கும். ஒரு மனிதன் தன் குடும்பம் என்னும் குறுகிய வட்டாரத்திற்குள் அன்பைச் செலுத்தாமல், சமூகத்தில் உள்ள மற்ற மனிதர்களிடமும் தன்னைப் போல எண்ணி பிறரிடமும் அன்பு செலுத்த வேண்டும். உலக சமயமான திருக்குர்ஆனில்,

"அளவற்ற அருளாலும் நிகரற்ற அன்புடையோனுமாகிய அல்லாஹ்" என முதல் திருவசனமே அன்பைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளது. ஒரு மனிதன் தன்னைப் போல் பிறரை என்னும் போது அங்கு அன்பு என்பது வானம்போல் விரிந்து அவை சமூகத்திற்குள் செல்லும்போது மனிதனின் மனத்தையும் நற்பண்புகளையும் அறிய முடிகிறது. அன்பின் விளக்காக விளங்கும் திருக்குர்ஆனில்,

"அல்லாஹ் மிக்க கிருபை உடையவன் மிக்க
அன்புடையவனாகவும் இருக்கிறான்"[42].

(திருக்குர்ஆன். 11:90)

என்று வேதவசனம் கூறுவதுபோல் நாம் பிறரிடம் அன்பு செலுத்தினால் இறைவனாகிய அல்லாஹ் நம்மீது அன்பு செலுத்துவான் என்பதை அறிய முடிகிறது. அன்பு என்பது எல்லா உயிர்களுக்குமிடையே காணப்படும் சிறந்த பண்பாகும். மனிதனின் வாழ்க்கை சிறப்பாக அமைய வேண்டுமென்றால் பிறரிடம் அன்பு காட்ட வேண்டும் என்பதை 'ஒரு தெருவின் சுயசரித்திரத்திலிருந்து, கடல், அன்புக்கு முதுமை இல்லை, பிறப்பின் விசித்திரம், சன்னதியில், இன்று நான். நாளை நீ! போன்ற சிறுகதைகளின் மூலமாகக் கூறுகின்றார்.

இல்வாழ்க்கை இனிமையாக அமைய வேண்டுமானால் நன்மக்கள் பெற்று அவற்றுடன் அன்புடையவனாகவும் திகழ்தல் வேண்டுமென்பதை

"என்ன அற்புதம்!

இந்தாப்பா, உனக்கு ஹாஜத் (ஆசை) நிறைவேறிச்சா?

முந்தானையால், அழுது அதைத்த முகத்தை துடைத்துவிட்டால்

கழுத்தில் கொட்டை தொங்கவிட்டு கொட்டி நடந்தபோது

உம்மா சிரித்தாள்”[43]. (ப.426)

என்று தாய் தன் மகனிடம் கொண்டுள்ள அன்பைக் காட்டுகின்றார். இல்லற நெறியில் ஒழுகுவோர்தான் அன்பு செலுத்துகின்றவர்களுக்கு ஏதேனும் துன்பம் நேரிடக் கண்டு அவரது துன்பத்தைப் பகிர்ந்து கொள்வர். அவர்களின் உள்ளத்தில் கொண்டுள்ள அன்பையும் ‘பிறப்பின் விசித்திரம’ என்ற சிறுகதையின் வாயிலாக உணர்த்துகின்றார்.

அன்பு என்பது ஒரு மனிதன் மற்றொரு மனிதனிடத்தில் காட்டுவது மட்டுமல்ல. மற்ற உயிரினங்களிடத்தில் காட்டுவதும் அன்புதான் என்பதை,

“இரத்தம் வெட்டப்பட் இடத்திலிருந்து ஒழுகியது. நின்று நின்று மெதுவாக நகர்ந்தது. நகர்ந்த இடமெல்லாம் இரத்தம் உறைந்தது.................................................. தெருக் குழாயில் தண்ணீர் எடுத்துக் கொண்டு நின்ற மைம்பாத்து மூக்கில் விரல வைத்தாள். பாவம் வாயில்லா பிராணி.
‘கழுதே, உனக்கு வலிக்குதா? மைம்பாத்து கேட்டாள். கனகவல்லி அவளை உற்றப் பார்த்து.......................... அதன் கண்களில் நீர் வடிந்தது”[44]. (ப.178)

என்ற வரிகள் உணர்த்துகின்றன. துன்பத்தில் ஆறுதல் கூறும்போது அவர்களின் துன்பம் குறைந்து விடுகிறது என்பதை ‘இன்று நான் நாளை நீ! என்ற சிறுகதையில் கனகவல்லி என்ற கழுதையின் மீது அன்பு கொண்டு பரிவு காட்டும் மைபாத்து என்னும் பாத்திரத்தின் வழி எடுத்துக்காட்டுகிறார். இதைப் போன்று ‘ஒரு தெருவின் சுயசரித்திரத்திலிருந்து’ என்ற சிறுகதையில் ஜைனப்பா என்ற கோழியின் மீது கொண்ட அன்பையும், கோழி இறந்தவுடன் அதனைக் கட்டியணைத்து முத்தமிட்டு அழுவதையும் படைப்பின் வாயிலாக உணர்த்துகின்றார்.

இசுலாம் சமயத்தைப் போன்று மற்ற சமயங்களும் எல்லா உயிர்களிடத்திலும் அன்பு கொள்ள வேண்டும் என்று வலியுறுத்துகிறது. அறம் செய்வதற்கு அன்பு

துணையாக உள்ளது என்பது அறிந்தவர் கூறும் கூற்றாகும். ஆனால் தீமையை ஒழிப்பதற்கும் அன்பே துணையாக உள்ளது என்பதை வள்ளுவர்,

"அறத்திற்கே அன்புசார் பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை"[45]. (குறள். 76)

என்ற குறள் மூலம் அன்பு பற்றி அறிய முடிகிறது.

### 4.4.3.1.4 மனிதநேயம்

மனிதரை மனிதர் மதித்து, தன்னைப் போல் பிறரும் இன்புற்று வாழ தன்னலம் துறந்து தொண்டாற்றுவது மனிதநேயமாகும். மனித மாண்பின் வளர்ச்சிக்கும், மலர்ச்சிக்கும் மனித நேயம் அடிப்படையாகும். மனித மாண்பின் சிகரம் அருள் என்றால் அதன் அடித்தளம் அன்பு எனலாம். மனித அன்பின் மகத்துவத்தைக் காட்டும் மனிதநேயக் கோட்பாடுகள் மனித வாழ்வின் மாண்புகளையும் அவை சிறப்பதற்குத் துணையாக உள்ள அன்பு, நாணம், ஒப்புரவு, கண்ணோட்டம் என்ற சான்றாண்மைப் பண்புகளையும், சுட்டி அவற்றிக்குத் தடையானவற்றையும் தகர்த்து சமநிலைச் சமுதாய அமைப்பைப் படைப்பதற்குத் தேவையான வழிமுறைகளையும் கொண்டு விளங்குகின்றன. எனவே மனித மாண்பின் அடித்தளம் மனிதநேயம் எனலாம்.

"அன்பு, நட்பு, கனிவு, கருணை, பக்தி, காதல், வீரம் போன்ற பண்புகள் மனிதனுக்குப் பெருமை சேர்ப்பவை. இப்பண்பு நலன்களையே மனித நேயம் என்கிறார்"[46] சீனி. திருநாவுக்கரசு.

மக்களிடம் நம்பிக்கை ஊட்டுவதற்கும் எதிர்காலச் சிந்தனையை உருவாக்குவதற்கும், நிகழ்காலச் சமுதாயம் அச்சமின்றி வாழ்வதற்கும், வருங்காலச் சமுதாய நன்முறையில் அமைவதற்கும் மனிதநேயம் அவசியமானதாகும். தோப்பில் முகமது மீரான் சிறுகதைகளில் மனிதநேயம் குறித்த சிந்தனையை 'நேற்று வந்த வழி', 'கருந்தேளின் கொடுக்குகள்' 'அனந்தசயனம் காலனி', 'சன்னதியில்', 'மயானங்கள்', 'ஒரு பஸ் பயணத்தின்போது' முதலிய சிறுகதைகளில் காணமுடிகிறது.

'நேற்று வந்த வழி' என்ற சிறுகதையில் சிறுவயதில் பெற்றோரையும் ஊரையும் விட்டுப் பிரிந்து சென்ற முஸ்தபா அறுபத்தெட்டு வருடங்களுக்குப் பின் வரும்போது அவரின் பசியைப் போக்கி உதவி செய்யும் மனிதநேயம் கொண்ட மனிதர்களைத் தன் கதையின் வழி குறிப்பிடுகிறார்.

> "சொந்தக்காரங்களெல்லாம் இந்த ஊரில் உண்டு. எனக்கு
> யாரென்று ஞாபகத்தில் இல்லே.
> ஒரு வாழை இலைத் துண்டில் கொஞ்சம் உதிர்ந்த இடியாப்பத்தைக்
> கொண்டு வந்து கொடுத்தார். இடியாப்பமும் இரண்டு
> கிளாஸ் தண்ணீரும் உணவுக்குழாயில் இறங்கியபோது
> கொஞ்சம் தெம்பு உண்டாயிற்று"[47]. (ப.87)

மேற்குறித்த சிறுகதையில் முஸ்தபா என்ற பாத்திரத்தின் பசியைப் போக்கிய ஹாஜரா ஹோட்டல் முதலாளியை மனிதநேய உணர்வுமிக்கவராய் படைக்கப்பட்டிருப்பதைக் காணமுடிகிறது.

"அனைத்து உயிர்களிடத்தும் அன்பும், இரக்கமும், கருணையும் கொண்டு சுயநலமற்ற பொதுநலச் சிந்தனையோடு பிறர் நலம் நாடும் பேருள்ளச் சிந்தனையை மனிதநேயம்"[48] என்கிறார் சித்ரா.

"பூமியில் உள்ளோர் மீது கருணை காட்டுங்கள். வானத்தில் உள்ளவன் உங்கள் மீது கருணை காட்டுவான்". மேலும் மனிதர்களுக்குக் கருணை காட்டாதவர் மீது அல்லாஹ் கருணை காட்டமாட்டான் என்று நபி (ஸல்) அவர்கள் மனிதநேயத்தின் அடிப்படையான கருணைப் பற்றி கூறுகின்றார்"[49].

'ஒரு பஸ் பயணத்தின் போது' என்ற சிறுகதையில் டாக்டரைக் காண பேருந்தில் பயணம் செய்யும் ஒருவர் சில்லரை இல்லையென்ற காரணத்தில் பாதி வழியில் நடத்துநரால் இறக்கவிடப்பட்ட ஒருவருக்கு உதவி செய்யும் மனப்பான்மையை,

> "வயலுக்குத் தண்ணி பாய்ச்சப் போனவன். ஒம்மொ இருப்பு
> கண்டப்போ சகிக்கல்ல அதுதான் ஒம்மெ ஏத்தீட்டு வந்தேன் தாயமாட

நேரமில்லை. நான் போறேன்...... அவர் உடம்பிலிருந்து முகர்ந்த வாடை! அதுதான் மனிதவாடை!"[50]. (ப.405)

அரசாங்கத்தின் அலட்சியப் போக்கையும், பேருந்து நடத்துனரின் மனிதாபிமானமற்ற செயலையும், மனிதநேயம் என்பது மறித்துப் போகவில்லை. அது ஒருசில மனங்களில் துளிர்விட்டு வளர்வதையும் தன் பாத்திரத்தின் வாயிலாகத் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகின்றார்.

இசுலாமியரின் இதயத்தில் கருணை விசாலமாக இருக்க வேண்டும். அதைத் தனது குடும்பம், மனைவி, மக்கள், உறவினர்கள் என்ற வட்டத்துக்குள் சுருக்கிக் கொள்ளாமல் சமூகத்தின் அனைத்து மனிதர்களுக்கும் கருணையை விசாலப்படுதத வேண்டும் என்று இறைநம்பிக்கையின் நிபந்தனைகளில் ஒன்றாக நபி கூறினார்கள். மேலும் "கருணை என்பது நீங்கள் உங்கள் தோழரிடம் மட்டும் கருணையுடன் நடந்து கொள்வதல்ல. எனினும் அது மக்களிடம் கருணை காட்டுவதாகும். எல்லோருக்கும் பொதுவானது கருணையாகும்"[51] என்று நபி கூறுவதாக முன்மாதிரி முஸ்லீம் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

### 4.4.3.2 கூடா ஒழுக்கம்

சமுதாய வழிகாட்டியாகத் திகழ்பவர்கள் நல்வாழ்வுக்குப் பொருந்தாமல் ஒழுகும் ஒழுக்கமே கூடா ஒழுக்கமாகும். இசுலாம் சமயத்தில் ஒழுக்கமானது அறவாழ்வின் சிறப்பம்சமாகக் கருதப்படுகிறது. மனிதர்கள் அனைவரும் புனிதர்கள் அல்ல என்பதை ஏற்றுக் கொள்ளும் இசுலாம் அவர்கள் பலஹீனமாவர்கள் என்பதையும் சுட்டிக் காட்டுகிறது.

"மனிதனை பலஹீனமாகவே சிருஷ்டிக்கப்பட்டுள்ளான்"[52].

(திருக்குர்ஆன். 4-28)

பலஹீனத்தால் மனிதனர்கள் அறநெறியில் இருந்து பிறழ்ந்து தவறு செய்கின்றார்கள். மனிதன் தன் சுயநலம் கருதி மேற்கொள்ளும் செயல்கள் மனித இயல்புக்கும் இறை உவப்பிற்கும் பொருந்தாத செயல்களாகும். மனித உரிமைகளுக்குப் புறம்பாக ஒருவர் மேற்கொள்ளும் தவறுகள் இசுலாமிய அறவாழ்வு முறைக்குப் புறம்பானவை. இவ்வாறு மனிதன் சமயம் வகுத்த ஒழுக்கங்களிலிருந்து தவறுவதைக் கூடா

ஒழுக்கம் என்று கூறப்படுகிறது. இவ்வொழுக்கத்தை இசுலாம் வன்மையாகக் கண்டிக்கிறது. இதனை,

> "மானக் கேடான செயல்களின் அருகே கூட செல்லாதீர்கள்.
> அவை வெளிப்படையானவையாயினும் மறைவானவையாயினும்
> சரியே"[53]. (திருக்குர் ஆன். 6.151)

இவ்வரிகள் 'கூடாஒழுக்கம் கேடாக' முடியும் என்று கூறி கூடாஒழுக்கத்தைக் கண்டிக்கிறது.

### 4.4.3.2.1 பிறனில் விழையாமை

மனத்தில் காம எண்ணத்தினைக் கொண்டு பிறர் மனைவியை நோக்குதல் பாவச் செயலாகும். கற்பு என்பது இல்லறத்தில் உள்ள ஆணுக்கும், பெண்ணுக்கும் பொதுவானதாகும் அறநெறிப்படி இல்வாழ்க்கை வாழ்பவன் பிறன் மனைவியின் மீது காமப்பார்வை செலுத்தாமல் வாழ்வது பேராண்மை ஆகும். இதனை இசுலாம் சமயமானது மனிதர்கள் பலஹீனமானவர்கள் என்பதானலேயே ஓர் ஆண் அல்லது ஒரு பெண் எதிரே சந்திக்க வேண்டுமானால் இருவரும் சிரம் தாழ்த்திக் கொள்ள வேண்டும் என்கிறது.

> "விபச்சாரிக்கும் விபச்சாரனுக்கும் நூறு கசையடி கொடுங்கள்"[54]
> (திருக்குர் ஆன். 24-2)

என்பது ஒழுக்கம் தவறி நடக்கும் ஆணுக்கும், பெண்ணுக்கும் நபிகள் நாயகம் கால கட்டத்தில் இத்தகைய தண்டனைமுறை பின்பற்றப்பட்டது. மேலும்,

> "நீங்கள் விபச்சாரத்தின் அருகில் கூட நெருங்காதீர்கள்
> திண்ணமாக அது மானங்கெட்ட செயலாகவும் மிகத்தீய
> வழியாகவும் இருக்கிறது"[55]. (திருக்குர் ஆன். 17:32)

என்று இறைவேதத்தில் பிறனில் விழையாமை பற்றிக் கூறுகிறது.

மனைவி என்பவள் கணவனுக்கு மட்டுமே உரிமையுடைவள். அவளை மற்றொரு ஆடவன் காம எண்ணத்தால் நோக்குவது பிறனில் விழைதலாகும். இதனைப் படைப்பாளர் தனது சிறுகதையின் வாயிலாக எடுத்துரைக்கின்றார்.

> “எங்களுக்குத் தருவதற்குச் சற்று முன்புதான் அதே அறையில் தங்கியிருந்தவர்கள் அதைக் காலி செய்திருக்க வேண்டும். கூந்தலிலிருந்து உதிர்ந்து தரையில் கிடந்த பூக்கள் அப்பவும் உலரவில்லை. குளியலறையில் விட்டு வெளியே வரும் இடத்தில் ஈரம் காயவில்லை. எங்களுக்கு முன் அவர்கள் எங்களைப் போன்று வந்துவிட்டுப் பொழுது சாயும் முன் வீடு அடைய அறையைக் காலி செய்திருக்க வேண்டும். ஓர் இரவை இங்கு இவளுடன் செலவு செய்துவிட்டு, விடியும் முன்னரே அறையை வெறுமையாக்கி விட்டுப் பஸ்ஸை ஓடிப்பிடிக்க வேண்டும் என்ற எண்ணம் எனக்கு”[56].
>
> (ப.338)

ஒருவன் தன் மனைவியை விட்டுப் பிறன் மனைவியை நாடும்போது ஏற்படும் கேடானது சமூகத்திற்குள் மோசமான இழிச்செயலாகும். இப்பிறனில் விழையாமையைக் கூடா ஒழுக்கமாக இசுலாம் சமயம் கூறுவதை ‘குட்டி ஆடு’ என்ற சிறகதையின் மூலமாக வெளிப்படுத்துகின்றார்.

பிறன் மனை நோக்குவதனால் ஏற்படும் நன்மை, தீமைப் பற்றி தண்டபாணி தேசிகர் “பிறனில்லாளை விரும்பியடைதல் ஒழுக்கக்கேடு பிறர் மனைவியை விரும்புவார் அறம். பொருள் இவற்றையிடிப்பார். அவர்களே பேதை: அவர்களே இறந்தவர்களே. அவர்களே பழிகாரர்கள்; பிறர் மனைவியை ஏறெடுத்துப் பார்க்காதவர்கள் வீரர்கள்: ஒழுக்கமுடையவர்கள்; தருமவான்கள்; அவர்களே உலகில் எல்லா நல்ல காரியங்களுக்கும் தலைமை தாங்க உரியவர்கள்”[57] என்று பிறனில் விழையாமையின் சிறப்பு கூறப்படுகிறது. மேலும், “பிறர் மனம் புகாத அளவுக்குப் பெண் காத்துக் கொள்ளுதலே கற்பின் பேரெல்லை”[58] என்று கருத்துத் தோன்றியது என்ற கூற்றானது பெண்ணும் பிறர் மனம் புகாதாவறு தன்னைக் காத்தல் வேண்டும் என்கிறது. இல்வாழ்வான் ஒழுக்கத்துடன் வாழ்தல் வேண்டும். தன் மனைவி கற்போடு திகழ வேண்டுமென எண்ணுபவள் பிறன் மனைவியையும் நோக்குதல் கூடாதென சமயங்களும் அற இலக்கியங்களும் வலியுறுத்துகின்றன. இக்கருத்தை அடிப்படையாகக் கொண்டு தோப்பில் முகமது மீரான் சிறுகதையைப் படைத்துள்ளார்.

#### 4.4.3.2.2 வட்டி

இசுலாத்தில் வட்டி வாங்குதல் மிகப் பெரிய குற்றமாகக் கருதப்படுகிறது. இசுலாம் மார்க்கம் ஒவ்வொரு நெறியையும் வரிசைப்படுத்தும்போது பொருள் நெறியில் ஒருவர் நேர்மையான வழியில் பொருளை ஈட்டுவதையே விரும்புகின்றது. தொழிலில் பொருள் ஈட்டும்போது கடன் வாங்கலாம். கொடுக்கலாம். ஆனால் வட்டி கூடாது. இதனை,

“வட்டி அடியொடு தடைவிதிக்கப்பட்டது”[59] (திருக்குர்ஆன் 2.275)

இறைவேதத்தில் தடைவிதிக்கப்பட்ட ஒன்று வட்டி ஆகும். இறைவன் தன்னுடைய வேதத்தில் வட்டி வாங்குபவர்களைத் தவிர வேறு யாருடனும் நேரடியாகப் போர்ப் பிரகடனம் செய்யவில்லை. வட்டி எவ்வளவு பெரிய கொடிய குற்றம் என்பதற்கு இதுவே போதுமான சான்றாகும்.

இறைவன் கூறுகிறான், “விசுவாசம் கொண்டாரோ அல்லாஹ்வை நீங்கள் பயந்து கொள்ளுங்கள். மேலும் நீங்கள் உண்மையாக விசுவாசம் கொண்டோராக இருப்பின் வட்டியில் (எடுத்தது போக) எஞ்சியிருப்பதை (எடுக்காமல்) விட்டுவிடுங்கள். ஆகவே (கட்டளையிடப்பட்டவாறு) நீங்கள் செய்யாவிடின் அல்லாஹ்விடமும் அவனுடைய தூதரிடமும் போரிடுவதாகப் பிரகடனம் செய்துவிடுங்கள்”[60]. திருக்குர்ஆன் (21. 278-279) வட்டியின் விபரீதங்களை அறிந்து கொண்டே அதன் திர்ஹத்தை (பொருள்) உண்பது முப்பத்தாறு தடவை விபச்சாரம் செய்வதை விடமிகக் கடுமையான குற்றமாகும் என்று நபி (ஸல்) அவர்கள் வட்டியின் இழிவான நிலையைப் பற்றி கூறுகிறார்கள்.

வட்டியின் காரணமாகப் பொருளாதாரம் குறிப்பிட்ட சிலரிடம் மட்டுமே சுற்றிக் கொண்டிருக்கின்றது. பலர் வறுமையில் சுழன்று உயிரையும் போக்கிக் கொள்ளும் அவலம் ஏற்படுகிறது. இதனைத் தாக்கமாகப் பெற்றமைந்த பல சிறுகதைகளை தோப்பில் முகமது மீரான் படைத்துள்ளார்.

> “என் மகளுக்குத் தலைப்பிள்ளைப் பிரசவம் பார்க்கத்தான் பக்கத்து ஊட்டுக்காரன் எண்ணு உன்கிட்ட மூவாயிரம் கடன் வாங்கினேன். பணம் திருப்பித் தந்தப்பம்தான் நீ பத்துவட்டி போட்டு கணக்குப்

> பெருக்கிச் சொன்ன. உனக்குத்தான் பத்து வட்டி மத்தவங்களுக்கெல்லாம் 12 வட்டி"[61]... (ப .383)

வட்டியின் கொடுமையை மீராம்மா என்ற பாத்திரத்தின் மூலமாக உணர்த்துகின்றார். வட்டி மிகப் பெரிய குற்றமாக இருந்தாலும் அதிலிருந்து விடுபட அதற்குரிய பாவமன்னிப்பு வேண்டுவதன் மூலம் இறைவன் மன்னிக்கிறான். இதனைத் திருக்குர்ஆனில்,

"நீங்கள் (தவ்பாச் செய்து) மீண்டுவிட்டால் உங்கள் செல்வங்களின் அசல் தொகை உங்களுக்கு உண்டு. நீங்கள் அதிகமாக வாங்கிக் கடன்பட்டோருக்கு அநீதி செய்யாதீர்கள். (அவ்வாறே) நீங்களும் மூலத் தொகையைப் பெற்றுக் கொள்வதிலிருந்து அநீதி செய்யப்பட மாட்டீர்கள்"[62] என்கிறார். (திருக்குர்ஆன். 2:279)

இறைவனிடம் தான் செய்த தவறை எண்ணி வருந்தி பாவமன்னிப்பு கேட்பது என்பது அவனின் நல்லொழுக்கத்திற்கான முதற்படியாகும். இக்கருத்தை,

> "இன்றளவு செய்த எல்லாப் பாவங்களுக்கும் மன்னிப்புக் கோரி முதலில் குற்ற மீட்சி பெறுவது. வெற்றி வாய்ப்புக்குத் தேவை என்ற முடிவுக்கு வந்தேன்"[63]. (ப.378)

ஒருவன் மனம் உருகி இறைவனிடம் பாவமன்னிப்புக் கோருவதின் மூலம் நன்மையின் பக்கம் செல்கிறான் என்பதை '45-வது வார்டு வேட்பாளர்' எனும் சிறுகதையின் வழி வெளிப்படுத்துகின்றார்.

#### 4.4.3.2.3 பொய்கூறல்

தாம் கூறும் கூற்றிலிருந்து தவறியொழுகுதல் அல்லது மறைத்துப் பேசுதல் பொய் எனப்படுகிறது. பொய் பேசுபவர், பகை, அச்சம், பழி, பாவம் என்ற தீய செயல்களுக்கு உறுதுணையாக இருப்பார். பொய் மனித இனத்தல் மிகச் சாதாரணமாகச் செய்யப்படும் தீமை. பொய் சொல்வது தவறு என்று எல்லா மதங்களும் அறிவுரை வழங்கிய போதும் குழந்தைகள் முதல் இறப்பின் விளிம்பில் இருக்கும் வயோதிகள் வரை பொய் பேசுகிறார்கள். பொய் என்பது மனிதனைத் தீயசெயல்கள் செய்யத் தூண்டுகிறது.

“நீங்கள் உண்மையைக் கடைப்பிடியுங்கள். ஏனெனில் உண்மையானது நன்மையின் பக்கம் இட்டுச் செல்கிறது. நன்மையோ சுவனத்தின் பால் இட்டுச் செல்லக் கூடியதாகிறது. மேலும் உங்களுக்குப் பொய்யை எச்சரிக்கிறேன். ஏனெனில் பொய்யானது பாவத்தின் பக்கம் இட்டுச் செல்கிறது. பாவமோ நரகத்தின் பக்கம் இட்டுச் செல்லக்கூடியதாயிருக்கிறது என்பது நபி மொழி கூற்றாகும்.

தன் சிறுவயது ஆசையை நிறைவேற்றுவதற்காகத் தந்தையிடமும், தாயிடமும் பொய் சொல்லும் பாங்கினை “ஒரு குட்டித்தீவின் வரைபடம்” எனும் சிறுகதையில் தன் விளக்க வெளிப்பாடாக வெளிப்படுத்துகிறார்.

> “இரண்டு நாள் விடுமுறைக்குப் பிறகு பள்ளிக்கூடம் செல்ல புதிய சிவப்புக் கல்சாண் தூக்கி மாட்டும் போது உம்மா கண்டுவிட்டாள். மூக்கில் விரல் வைத்துக் கொண்டு கேட்டார்”. இது ஏதுடா? குட்டியப்பா வாண்டித் தந்தது”[64]. (ப.469)

இசுலாமிய சட்டப்படி தொடையைக் காட்டி நடக்கக் கூடாது இது (ஹராம்) இசுலாத்தில் தடைசெய்யப்பட்டது. ஆனால் ஆசையின் காரணமாக தந்தை சக்காத் கொடுத்த பணத்தைப் பிறருக்குக் கொடுக்காமல் மறைந்து அதில் கல்சான் வாங்கியது மட்டுமல்லாமல் பொய்யுரைக்கும் சிறுவனின் மனஉணர்வையும் புலப்படுத்துகின்றார்.

மூன்று நபர்கள் சுவர்க்கத்திற்குள் நுழைய தகுதியற்றவர்கள்.

- இடுப்பில் அணியும் வேஷ்டி, கால்சட்டை முதலியவற்றைப் பெருமை என்ற அடிப்படையில் கரண்டை மொழிக்கும் கீழ் பூமியில் இழுபடும் வகையில் அணிந்து கொண்டிருப்பவர்.
- தாம் கொடுத்த தானத்தைப் பிறரிடம் சொல்லிக் காட்டுபவர்.
- பொய் சத்தியம் செய்து தமது வியாபாரப் பொருள்களை விநியோகிப்பவர் என்று நபி கூறுகிறார்கள். பொய் சில நேரங்களில் நன்மையைத் தருமானால் அப்பொய்யான சொற்களும் வாய்மை என்று கருதப்படுகிறது. இதனை,

"பொய்ம்மையும் வாய்மை இடத்து, புரைதீர்ந்த
நன்மை பயக்கும் எனின்"[65] (குறள். 292)

நன்மை தருமானால் பொய்யான சொற்களும் வாய்மை என்று வள்ளுவர் 'வாய்மை' என்னும் அதிகாரத்தில் கூறியுள்ளார். இக்கருத்தைப் போன்று இசுலாம் சமயத்திலும் மூன்று நிலைகளில் பொய் அனுமதிக்கப்படுகிறது என்று வேத வரிகளும் தூதர் மொழிகளும் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது. 1. போரின்போது 2. மக்களிடையே நல்லிணக்கத்தை ஏற்படுத்தும் வேளைகளில் 3. ஒருவரை ஒருவர் திருப்தியுறச் செய்யும் நோக்கில் கணவன் மனைவிக்கிடையில் நடைபெறும் உரையாடல்களில்[66] பொய் கூறுவது அனுமதிக்கப்பட்டுள்ளது.

### 4.4.3.2.4 பழித்தூற்றுதல்

உலகம் என்ற கட்டுக்குள் வாழும் மனிதன் தன் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்வதற்கு மொழி என்பது அடிப்படைக் கருவியாக உள்ளது. அத்தகைய மொழியே பிறரது மனத்தைப் புண்படாதவாறு தன் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்வதற்குக் காரணமாக அமைகின்றது. அப்படிப் பகிர்ந்து கொள்ளும் போது பிறரைப் பற்றி இகழாமையும், இழிந்த சொற்களால் ஏசாமையும் வேண்டும் அதுதான் சொல்லொழுக்கம். யாரிடம் பேசினாலும் எந்நிலையில் பேசினாலும் பணிவுடைய இன்சொல்லால் பேச வேண்டும். இதுதான் நன்மனிதன் என்று காட்டும் நாகரிக அடையாளமாகும். இவ்வொழுக்கத்திலிருந்து தவறும் போது தீய எண்ணங்கள் மனதில் குடியேறி விடுகின்றன.

ஒருவர் மற்றொருவர் மீது பழித்தூற்றுவதைத் தவிர்த்துக் கொள்ள வேண்டும் என்று இசுலாம் வலியுறுத்துகிறது. மற்றொருவரைப் பழிப்பவர் சபிக்கப்பட்டவர்கள் என்பது நபி மொழிக் கூற்றாகும்.

'நியாயமற்ற, அவதூறுகளையும் வரம்பு மீறிய குற்றச்சாட்டுக்களையும் அருவருப்பான வார்த்தைகளையும் பிறர் மீது வீசி எறிபவன் மறுமை நாளில் எண்ணற்ற நன்மைகளைச் சுமந்து வந்தும், அவனது தீய செயல்கள் அனைத்தும் நன்மைகளையும் சூறையாடிவிடும். தன்னை நரகிலிருந்து காக்கும். எவ்வித சாதனமுமின்றி சபிக்கப்பட்டவனாக நரகில் வீசப்படுவான்" என்பதை நபி (ஸல்) அவர்கள் தெளிவுபடுத்தினார்கள்[67].

இசுலாம் சமூகத்தில் பெண் என்பவள் வீட்டிற்றுகுள்ளே இருக்க வேண்டும். மீறி வெளியே வரும்போது பழிசொற்களுக்கு ஆளாக நேரிடுகிறது என்பதை

> "பத்து வயசான குட்டியெ துலுக்கச்சியோ வெளியே விட மாட்டாங்காள. இந்தப் பெண்ணைப் போய் வேலைக்கு அனுப்பியிருநக்கியாளுவோ. இவளெ வச்சுக் காப்பாத்த கதியில்லையா? இன்னொருத்தி முணுமுணுத்தாள்"[68] (ப.20)

வயது வந்த பெண் வெளியே வருவது தவறு அதையும் மீறி வேலைக்குச் செல்வது பெரும் குற்றம் என்று பார்க்கும் சமூகத்தில் வறுமையின் காரணமாக வேலைக்குச் செல்லும் ஆபிதா மீது மற்ற பெண்கள் பழித்துப் பேசுவதை 'தலைப்பெருநாள்' என்னும் சிறுகதையில் படைப்பாளர் பதிவு செய்துள்ளார். பெண்கள் மீது பழிசுமத்துவதைப் பற்றி இறைவேதத்தில்,

> "எவர்கள் முமினான ஒழுக்கமுள்ள பேதை பெண்கள் மீது அவதூறு செய்கிறார்களோ அவர்கள் நிச்சயமாக இம்மையிலும் மறுமையிலும் சபிக்கப்பட்டவர்கள்"[69]. (திருக்குர்ஆன். 24:23)

பெண்கள் மீது அவதூறு பேசுபவர்களைச் சபிக்கப்பட்டவர்கள் என்று கூறப்பட்டுள்ளது.

கணவனை இழந்த நிலையில் வாழும் பெண் தன் குழந்தையின் பசியைப் போக்குவதற்காக வெளியே வரும்போது மற்ற பெண்களால் அவதூறு சொற்களுக்கு ஆளாகும் நிலையை,

"அவன் மவுத்தாகி ஆறுமாசம்தானே ஆச்சு. அதுக்குள்ள பெட்டியைத் தூக்கிட்டு இறங்கிட்டியே. வெட்கம்தான் இல்லையா?"[70] (ப.103) என்று பெண்ணின் மனநிலையை அறியாமல் பழித்தூற்றுவதை 'இறக்கை இழந்த பறவைகள்' எனும் சிறுகதையின் மூலம் வெளிப்படுத்தியுள்ளார். மேலும் 'பவர்க்காரி', 'மொட்டைக்கடிதம்', 'குட்டி ஆடு' போன்ற சிறுகதைகளின் மூலமாகக் கூடா ஒழுக்கமான பழித்தூற்றுவதை எடுத்துக் கூறுவதின் மூலம் இசுலாமிய அறத்தைப் பதிவு செய்துள்ளார்.

### 4.4.3.2.5 பேராசை

ஒருவன் தன்னுடைய நிலையை மறந்து பகட்டு வாழ்க்கைக்கு ஆசைப்பட்டு தகுதிக்கு மீறி ஆசைப்படுவது பேராசையாகும். இப்பேராசையால் துன்பம் தான் விளையும் என்பது அற இலக்கியம் மற்றும் இறைவேதத்தின் கூற்றாகும். புத்தரும் ஆசையே துன்பத்திற்குக் காரணம் ஆசையை நீக்கினால் துன்பமின்றி வாழலாம் என்கிறார்.

மனிதனுக்கு வயது ஆகஆக அவனிடத்தில் இரு விஷயங்கள் வளர்ச்சியடைந்து வருகிறான். அவை 1. "பொருளின் மீது பேராசை 2. வயதின் மீது பேராசை என்று நபி கூறுகிறார்கள். இருப்பதை வைத்துக் கொண்டு திருப்தி கொள்ள வேண்டும். அதுவே என்றும் அழியாத செல்வமாகும். பேராசை கொள்வதினால் ஒருவன் மெய் மறக்கச் செய்யும் என்பதை,

> "பிறரை விடக் கூடுதலாக உலக வசதிகளைப் பெற வேண்டும் என்னும் எண்ணம் உங்களை மெய் மறதியில் ஆழ்த்தி வைத்திருக்கின்றது. நீங்கள் மண்ணறைகளைச் சென்றடையும் வரையில்"[71]. (திருக்குர்ஆன். 102:1, 2)

என்று பேராசையினால் ஏற்படும் மெய், மயக்கத்தை ஏற்படுத்தும் என்பதைத் திருக்குர்ஆன் கூறுகிறது இதனை மையப்படுத்தி 'பொன்னரை ஞாண்', '45-வது வார்டு வேட்பாளர்' போன்ற சிறுகதைகளைப் படைத்துள்ளார்.

> "வாள விளாகத்திலே என் மாமாக்க மவளுக்குக் கல்யாணம். நீ எனக்கொரு சகாயம் செய்யணும். உனக்க ஜெயக்கொடி மாலையையும், கொத்துக் காப்பையும், பொன்னரைஞாணையும் எனக்கு இரவல் தரணும்"[72]. (ப. 72)

தனது நிலயை அறியாமல் பகட்டு வாழ்க்கைக்கு ஆசைப்பட்டு பிறரிடம் இரவல் வாங்கி நகைகளைப் போட்டுக் கொள்ளும் பெண்ணின் பேராசையை அயிசாக்கண்ணு என்றும் பாத்திரத்தின் வழி வெளிப்படுத்துகின்றார். மேலும் பேராசையினால் ஏற்படும் துன்பத்தை,

"அவ இருப்புல கிடந்த அரைஞாணம் எங்க போச்சு?
ஒரு பெண் நடுக்கத்துடன் கேட்டாள். அப்துஸ்ஸாமின்
வாப்பா நெட்டினாள்.... எளியவனான
நான் எந்தக் காலத்தில் இந்தக் கடனத் தீர்ப்பேன்
இப்படி ஒரு பெண்டாட்டி எனக்குத் தந்தாயே அல்லா எல்லாம் என்
சாபக்கேடு"[73]. (ப.76)

'பொன்னரை ஞாண்' என்ற சிறுகதையின் மூலம் எடுத்துக்காட்டியுள்ளார். பெண்ணின் பேராசையால் விளைந்த துன்பத்தைத் எண்ணி மனம் வருந்தும் ஆணின் உணர்வையும் சுட்டிக் காட்டுகின்றார்.

### 4.4.3.2.6 முதுமையில் பெற்றோரைத் தனித்துவிடுதல்

உறவு என்பது அன்பின் வெளிப்பாடு. பண்பின் செயல்பாடு நல்ல உறவுமுறைகளும் நல்ல உணர்வு முறைகளும் ஆறறிவு உருவத்தை மனிதனாக்கும். மனித வாழ்க்கையில் உறவுகள் காலங்களையெல்லாம் கடந்து நிற்கின்றன. அன்பு நிறைந்த ஒழுங்கான குடும்ப உறவுகள் பண்பான வெளி உறவுகள் என்ற நிலையில் காலங்காலமாக மக்கள் வாழ்ந்து வந்துள்ளனர். இத்தகைய உறவுகள் என்பது கணவன் - மனைவி, தாய், தந்தை, மகன் போன்ற நிலைகளில் உள்ளன.

ஒவ்வொரு காலக்கட்டத்திலும் ஒரு உறவை மையமிட்டே வாழ்கின்ற நிலையில் தன்னைப் பெற்று வளர்த்த பெற்றோர்கள் முதுமை அடைந்தவுடன் அவர்களைச் சுமையாக கருதிப் பிள்ளைகள் தனியே விட்டுவிட்டுச் செல்கின்றனர். இவ்வாறு தாய் தந்தையைத் தனித்து விடுவது பெரிய பாவம் என்று இசுலாம் கூறுகிறது. இத்தவறைச் செய்பவர்களை வன்மையாகக் கண்டிக்கிறது.

'தாய் தந்தையரிடம் மிக கண்ணியமான
முறையில் நடந்து கொள்ளுங்கள்
பெற்றோரில் ஒருவரோ இருவருமோ முதுமையை அடைந்துவிட்ட
நிலையில் உம்மிடம் இருந்தால் அவர்களை 'சீ' என்று கூடக் கூறாதீர். மேலும் அவர்களைக் கடிந்து பேசாதீர். மாறாக அவர்களிடம்

> கண்ணியமாகப் பேசீவராக! மேலும் பணிவுடனும் கருணையுடனும் அவர்களிடம் நடந்து கொள்வீராக"[74]. (திருக்குர்ஆன். 17:23)

மேற்குறித்த வரிகளைப் பெற்றோரைப் போற்றுவதுப் பற்றி இறைவன் திருக்குர்ஆன் மூலம் கூறுகிறான். இவ்வொழுக்கத்திலிருந்து தவறுபவன் நரகத்தின் பக்கம் செல்வான் என்றும் இவர்களை இறைவன் நேசிப்பதில்லை என்று இசுலாம் கூறுகிறது

முதுமை என்பது வாழ்வில் எல்லா நிலைகளையும் கடந்த வாழ்வின் இறுதிநிலையாகும். இந்த சூழலில் வாழும் மனிதனுக்கு அன்பும், அரவணைப்பும் தேவைப்படுகின்றன. ஆனால் இன்றைய காலக்கட்டத்தில் மனைவி, மக்கள் என்ற ஒரு குறுகிய வட்டத்திற்குள் தன்னை ஆட்படுத்திக் கொண்டு முதியவர்களை சுமையாகக் கருதி தனியே விட்டுவிடுகின்ற அவலத்தைச் சன்னதியில், தங்க வயல், பேரன், பண்டமாற்று போன்ற சிறுகதைகளில் படம் பிடித்துக் காட்டுகிறார்.

"செல்வம் நிறைந்த காலத்தில் உடன் இருந்த மகன்கள் நால்வரும் தந்தைக்கு முதுமைப் பருவம் அடைந்ததும் யாரும் கவனிக்காமல் தெருவில் விட்டுச் செல்வத்தை 'சன்னதியில்' என்று கதையின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

> "பள்ளிவாசல் சுற்றுச் சுவருக்குள் ஏறிச் செல்லும் நுழைவாசல் ஓரத்தில் தன்னைக் குப்பையைப் போல் கொட்டும்போது கொட்டியவன் சொன்னதை மறக்கவில்லை. இஞ்செ கிடந்து செத்தொளியும்"[75].
>
> (ப. 291)

தாய், தந்தை உறவுகளை இழந்தும், அறுத்துக் கொண்டும் தனிமனிதர்களாக வாழவிரும்பும் இன்றைய தலைமுறையின் மனோபாவங்களை,

> "டிரைவர் காரை, ஊர் பள்ளிவாசல் முன் நிப்பாட்டினான். ஏன் இங்கே நிப்பாட்டினாய்? வீடுக்குப் போட்டும். உங்க மகன், இந்தப் பள்ளி வாசலில் தான் இறக்கிவிடச் சொன்னார்' எதுக்குப்பா? உங்க வீட்டை எங்க முதலாளிக்கு உங்க மகன் விற்றுப் போட்டது தெரியாதா?[76]
>
> (ப.592)

மனைவியை இழந்த நிலையில் தன் மகனின் ஆசையை நிறைவேற்றும் நோக்கில் மறுமணம் புரியாமல் தன் மகனுக்காக வாழ்ந்த தந்தையை முதுமை நிலையில் மகன் தனக்குப் பாரமாகக் கருதி விட்டுச் சென்றதையும் இளமை என்பது என்றும் நிலைக்கக் கூடியது அல்ல. அது மாற்றத்தைப் பெறக்கூடியது என்ற கருத்தையும் மையப்படுத்தி தன் சிறுகதையைப் படைத்துள்ளார்.

மனிதன், சமயங்களும், அற இலக்கியங்களும் ஏற்படுத்திய ஒழுக்க நிலைகளிலிருந்து தவறுவதைக் கூடா ஒழுக்கமாகக் கொள்ளப்படுகின்றது. ‘இக்கூடா ஒழுக்கம் கேடாய் முடியும்’ என்று அனைத்துச் சமயங்களும் எடுத்துரைக்கின்றன. இக்கருத்தை மையமிட்டுத் தோப்பில் முகமது மீரான் தன் சிறுகதைகளைப் படைத்துள்ளார்.

## தொகுப்புரை

அறம் என்ற தன்மை சங்க காலம் முதல் இன்றைய காலம் வரை உலக நடைமுறை மாறாத ஒன்றாக அமைந்துள்ளது. அறம் என்னும் சொல் பிறந்ததும் அறத்தின் பொருளும் வரையறை செய்யப்பட்டுள்ளது. மனிதன் தனக்கென வரையறுத்துக் கொண்ட ஒழுக்கநெறியே அறம் ஆகும். ஒழுக்கத்தைக் கூறும் அறமானது வரலாற்றுடன் தொடர்புடையது ஆகும்.

சமுதாய அறம் என்பது மேம்பாட்டை உருவாக்குவதாகும். சமுதாயத்தில் மக்களால் கடைப்பிடிக்கப்பட்டு மேற்கொள்வதாகும். இத்தகைய தனிமனித அறத்தை, அகப்பொருளிலும் சமுதாய அறத்தைப் புறப் பொருளிலும் வரையறுத்துக் கூறப்பட்டுள்ளது.

இசுலாம் மார்க்கம் உலக மக்கள் அனைவரும் பின்பற்றும் வகையில் அமைந்துள்ளது. உலகில் வாழும் மக்கள் அனைவரும் சமயத்தினை அடிப்படையாகக் கொண்டு வாழ்கின்றனர். சமயத்தின் மூலம் அறச்செயல் கடைப்பிடிக்கப்பட்டு வந்துள்ளது. அறச்செயல் என்பது ஒருவன் தனக்கு விரும்புவதைப் பிறருக்கும் தேவை என நினைக்க வேண்டும் என்பதை இறைவேதம் கூறியுள்ளது. இசுலாம் மனிதர்களை மூன்று பிரிவினர்களாகப் பிரித்துள்ளது. ஒருவரின் செயல்களுக்கு ஏற்ப பிரதிபலன் உண்டாகும் என இசுலாம் அறவாழ்வு அடிப்படையில் கூறியுள்ளது

இசுலாமிய அறவாழ்வின் சிறப்புத் தன்மைகளான ஒருவன் தன் அண்டை வீட்டாருடன் நடந்து கொள்ளும் தன்மையினையும், தன்மைப்போல் பிறரையும் எண்ணும் மனப்பாங்கையும், விருந்தோம்பல் பண்புகளையும், ஏழை எளியவர்களுக்கு கொடுத்து உதவும் கடமைகளில் ஒன்றான ஜக்காத் சிறப்புகளையும் தனது படைப்பின் வழி அறிவுறுத்திச் செல்கின்றார்.

இசுலாம் சமயத்தின் ஒழுக்கமானது அறவாழ்வின் சிறப்பம்சமாகக் கருதப்படுகிறது. மனிதர்கள் அனைவரும் புனிதர்கள் அல்ல என்பதைக் கூறும் இசுலாம் அவர்கள் பலகீனமானவர்கள் என்றும்; இவர்கள் இறைவன் வகுத்துத் தந்த ஒழுக்கநெறியை மீறும்பொழுது ஏற்படும் விளைவுகள் எத்தகைய துன்பத்தை ஏற்படுத்தும் என்றும் தோப்பில் முகமது மீரான் தனது படைப்பில் வெளிப்படுத்துகின்றார்.

கூடா ஒழுக்கம் கேடாய் முடியும் என்பதைத் திருக்குர்ஆனின் ஆதாரங்களுடன் ஒத்தக் கருத்தை தனது படைப்பின் வழி மெய்ப்பித்துக் காட்டுகின்றார். மேலும் இசுலாம் சமயத்தின் சாராம்சம் தோப்பில் முகமது மீரான் சிறுகதைகளில் வெளிப்பட்டு இருப்பதைக் காணமுடிகிறது.

**சான்றெணன் விளக்கம்**

1. தண்டபாணி தேசிகர், ச. **திருக்குறள் - அறத்துப்பால் தண்டபாணி விருத்தியுரை,** ப.33.
2. செந்தமிழ் சொற்பிறப்பியல் பேரகர முதலி, ப.523.
3. க.த. திருநாவுக்கரசு, **திருக்குறள் நீதி இலக்கியம்,** ப.23.
4. சாமிநாதய்யர், உ.வே., **மணிமேகலை காதை,** 25. பா. 228-31.
5. மேலது.,
6. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி – 2, பக்.45-46.
7. அறவியல் ஓர் அறிமுகம், ப.2.
8. மு. வரதராசனார், **திருக்குறள் தெளிவுரை,** குறள். 294.
9. இரா. சாரங்கபாணி, **சங்க இலக்கியத்தில் அறவியல் நோக்கு,** ப.83.
10. சு.ந. சொக்கலிங்கம், **காப்பியச் சிந்தனைகள்,** ப.113.
11. உ.வே. சாமிநாதய்யர், **புறநானூறு, 34.** பா.4-5.

12. நச்சினார்க்கினியர், (உ.ஆ) **கலித்தொகை, 34,** பா.4-5
13. சோ.ச. கந்தசாமி, (ப.ஆ) **இந்தியத் தத்துவக் களஞ்சியம்,** ப. 194.
14. அஷ்ஷைக் முஹம்மது அலி அல்ஹாஷிமி முன்மாதிரி முஸ்லீம், ப. 139.
15. மேலது., ப.114
16. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** பக்.170-171
17. மவ்லவி எம்.எம். அப்துல் காதிர் உமர், **திருக்குர்ஆன் மூலம் - தமிழ்உரை, நபிமொழி விளக்கவுரை,** திருக்குர்ஆன். 4:36
18. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.395.
19. மேலது., ப.30.
20. மேலது., ப.279.
21. அஷ்ஷைக் முஹம்மது அலி அல் ஹாஷிமி, **முன்மாதிரி முஸ்லீம்,** ப.160.
22. மு. வரதராசனார், **திருக்குறள் தெளிவுரை,** குறள். 81.
23. ந. சுப்புரெட்டியார், **தமிழ் இலக்கியங்களில் அறம் நீதி, முறைமை,** ப.89.
24. மவ்லவி, எம்.எம். அப்துல் காதிர் உமரீ. **திருக்குர்ஆன் மூலம் - தமிழ்உரை, நபிமொழி விளக்கவுரை,** திருக்குர்ஆன். 2:177
25. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** பக்.193-194.
26. அஷ்ஷைக் முஹம்மது அலி அல் ஹாஷிமி, **முன்மாதிரி முஸ்லீம்,** ப.269.
27. மேலது., ப.270.
28. மவ்லவி, எம்.எம். அப்துல் காதிர் உமரீ. **திருக்குர்ஆன் மூலம் - தமிழ்உரை, நபிமொழி விளக்கவுரை,** திருக்குர்ஆன். 94.1
29. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 463.
30. மேலது., ப.467.
31. முனைவர். ச.வே. சுப்பிரமணியன், **தொல்காப்பியம் தெளிவுரை,** ப.344.
32. மு. வரதராசனார், **திருக்குறள் தெளிவுரை,** குறள். 222.
33. மவ்லவி, எம்.எம். அப்துல் காதிர் உமரீ. **திருக்குர்ஆன் மூலம் - தமிழ்உரை, நபிமொழி விளக்கவுரை,** திருக்குர்ஆன். 20.14
34. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 32.
35. மவ்லவி, எம்.எம். அப்துல் காதிர் உமரீ. **திருக்குர்ஆன் மூலம் - தமிழ்உரை, நபிமொழி விளக்கவுரை,** திருக்குர்ஆன். 2.183
36. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 466.
37. மௌலான முஹம்மத் யூசுப் இஸ்லாஹி, **வாழ்க்கைக் கலை,** ப.214.

38. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 508.
39. கே.வி.எஸ். ஹபீப் முஹம்மத், **வேதவரிகளும் தூதர் மொழிகளும்,** ப.148.
40. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 12.
41. மு. வரதராசனார், **திருக்குறள் தெளிவுரை,** குறள். 45
42. மவ்லவி, எம்.எம். அப்துல் காதிர் உமரீ. **திருக்குர்ஆன் மூலம் - தமிழ்உரை, நபிமொழி விளக்கவுரை,** திருக்குர்ஆன். 11.903
43. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 426.
44. மேலது., ப.178.
45. மு. வரதராசனார், **திருக்குறள் தெளிவுரை,** குறள். 76
46. மு. வரதராசனார், **மனித மாண்புகள்**, ப. 23.
47. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப. 88
48. மு.வ. மனித மாண்புகள், ப. 38.
49. அஷ்ஷைக் முஹம்மது அலி அல் ஹாஷிமி, **முன்மாதிரி முஸ்லீம்,** ப.171.
50. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.405
51. அஷ்ஷைக் முஹம்மது அலி அல் ஹாஷிமி, **முன்மாதிரி முஸ்லீம்,** ப.171.
52. அப்துல் ரவு∴ப், **திருக்குர்ஆன்,** 4-28.
53. மேலது., **திருக்குர்ஆன்,** 6-151.
54. மேலது., **திருக்குர்ஆன்,** 24-2.
55. மேலது., **திருக்குர்ஆன்,** 17-32
56. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.338
57. ச. தண்டபாணி தேசிகர், **திருக்குறள் அழகும் அமைப்பும்,** ப.5.
58. ஆ. வேலுப்பிள்ளை, **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்,** ப.5.
59. அப்துல் ரவு∴ப், **திருக்குர்ஆன்,** 2-275.
60. மேலது., **திருக்குர்ஆன்,** 2-278-279.
61. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.383
62. அப்துல் ரவு∴ப், **திருக்குர்ஆன்,** 2-279
63. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.378
64. மேலது., **ப.649.**
65. மு. வரதராசனார், **திருக்குறள் தெளிவுரை,** குறள். 292
66. கே.வி.எஸ். ஹபீப் முஹம்மத், **வேதவரிகளும் தூதர் மொழிகளும்,** ப.131.
67. அஷ்ஷைக் முஹம்மது அலி அல் ஹாஷிமி, **முன்மாதிரி முஸ்லீம்,** ப.187.

68. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.20

69. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** 24-23.

70. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.103

71. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** 102:1,2

72. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.73

73. மேலது., ப.76.

74. அப்துல் ரவு.ஃப், **திருக்குர்ஆன்,** 173:23.

75. தோப்பில் முகமது மீரான், **வேர்களின் பேச்சு,** ப.291.

76. மேலது., ப.592.

## முடிவுரை

பூமியில் மனித இருப்பானது மொழியின் வழியே இலக்கியங்களால் புனையப்பட்டுள்ளது. எல்லா நிலைகளிலும் வெளிப்படுத்துவதற்கான கதைகள் காத்துக் கிடக்கின்றன. கடந்த காலம் என்ற வரலாறு, முழுக்கவே புனைவுகளால் நிரம்பி வழிகிறது. எல்லோருக்குள்ளும் ஏதாவது ஒரு கதை பொதிந்துள்ளது. தமிழ் மரபில் திண்ணைகள் அழிந்துவிட்டன. திண்ணைச் சுவரில் சாய்ந்து ஓய்வாகக் கதை சொன்ன பெரியவர்கள் காற்றில் கரைந்து போய்விட்டனர். உலக வங்கியுடன் சகலமும் இணைக்கப்படும் வாழ்க்கைப் பரப்பில், எல்லாம் நுகர்வு பொருளாகவும், வணிகச் சிந்தனைக்கானதாகவும் மாற்றப்படும் சூழலில் கதை மொழியும் புதிய வடிவெடுத்துக் கொண்டிருக்கிறது.

பரந்து விரிந்த பூமியெங்கும் பெரும் ஆவலுடன் துள்ளிக்குதிக்கும் மனத்துடன் தோப்பில் முகமது மீரான் வாசகரையும் அழைத்துச் செல்கிறார். அவருக்கு எல்லாவற்றையும் பற்றிய அறிவு உண்டு. அதே வேளையில் எல்லாவற்றையும் அப்படியே கற்றுக் கொள்ளும் மனநிலையும் இருக்கின்றது. கதை என்பது மொழியின் வழியே கட்டமைக்கப்பட்ட ஏடு என்ற இயந்திரத்தனமாக கண்ணோட்டத்தினை ஒதுக்கிவிட்டு மொழியின் வழியாக நல்லது, கெட்டதுமான உலகினை இன்பமுடன் எடுத்துச் செல்கிறார் தோப்பில் முகமது மீரான்.

படைப்பிலக்கியவாதிகள் சமூகத்தில் தான் கண்ட விசயங்களையும், தனது அனுபவங்களையும் கற்பனையும் கலந்து சிறந்த படைப்பைக் கதைக் கருவாகக் கொண்டு உருவாக்குகின்றனர். இவர் சமுதாயத்தை நுணுக்கமாகப் பிரதிபலிப்பபேதாடு சமுதாய மாற்றங்களுக்கான வழிமுறைகளையும் சிந்தித்து அதனைத் தமது படைப்பில் வெளிப்படுத்துகின்றார்.

கடந்த நூற்றாண்டில் மனிதன் செய்த பெரும் நாசங்களில் முதன்மையானது இயற்கையை விட்டு விலகியதுதான். இயற்கைக்குத் தன்னை அதிபராக நினைத்துக் கொண்டு பூமியில் வாழும் எல்லா உயிரினங்களையும் மனிதன் அழித்துக் கொண்டிருக்கிறான். இயற்கையின் அங்கமாகத் தன்னைப் பார்க்கும் கருத்திலிருந்து விலகியதனால் இன்று அவன் எதிர்கொள்ளும் துன்பங்கள் ஏராளம். இந்நிலையில் இயற்கைக்கும் மனிதனுக்குமான நட்பு இன்னும் தொடர்கிறது என்று நம்பிக்கையுடன்

ஒரு மாமரமும் கொஞ்சம் பறவைகளும் சிறுகதையில் சொல்லுகிறார் தோப்பில் முகமது மீரான்.

படைப்பாளரின் கதையுலகு இருபிரிவுகளாக வேறுபடுகின்றது. வானம் பார்த்த சிற்றூர் மக்களின் பிரச்சினைகளும், வயிற்றுப் பிழைப்புக்காக நகரத்துக்குக் குடியேறிய பின்னரும் ‘மண்’ குறித்து ஏங்கும் மனிதர்களும் என்பதாகும். தோப்பில் முகமது மீரானின் கதைமாந்தர்கள் பெரும்பாலும் அடித்தளத்தில் உழன்று கொண்டிருக்கும் மக்கள். வறட்சி, வறுமை, தண்ணீர்ப் பற்றாக்குறை காரணமாகச் சிற்றூர் வாழ்க்கை நொடித்துப் போய்விட்டது. அங்கு இன்றும் மனிதர்கள் வாழ்வதற்கான சூழல் அருகி வருகிறது. கைவிடப்பட்ட நாயக்கர் காலத்துச் சத்திரம் போல இவர்களின் வாழ்க்கை சிதிலமடைந்துவிட்டது. எல்லா மாவட்டங்களிலும் தனது இருப்பினைத் தக்க வைத்துக் கொள்வதற்காக மனிதர்கள் படும் துயரம் சொல்லி மாள முடியாதவை. இத்தகைய நெருக்கடியான சூழலில் ஒத்த உயிர்மீது அன்பு செலுத்தும் மனிதர்களில் வியப்புக்குரியவரான தோப்பில் முகமது மீரானுடைய கதைகள் உள்ளன.

நம்பிக்கை முழுமையான நிலைமை அடையும்போது அதன்மீது ஒரு முழுமைத் தன்மை மிகுந்து பற்று ஏற்படும். அந்த அடிப்படையில் அமைவதுதான் சமய நம்பிக்கையாகும். இசுலாம் என்பது சில நம்பிக்கையை அடியொற்றி அமைந்ததாகும். குறிப்பாக இறைநம்பிக்கை, மறுமை, நாளைய நம்பிக்கை போன்ற நம்பிக்கைகளைப் பின்பற்றி அமைந்தது. இறைவன் ஒருவனே என்ற எண்ணம் மேலோங்கி அதை ஏற்கும் சூழலில் மற்ற நம்பிக்கைகள் தானாகவே அமைந்துவிடும். இறைவனை நம்புகின்ற நிலையில் மறுமை நாளைப் பற்றிய அச்சம் ஏற்படும். இதனால் வழிபாட்டில் ஒரு கவனம் ஏற்படும். இதன் வழி வாழ்க்கையும் சிறக்கும். முகமது மீரான் அவர்களும் இந்தத் தளத்திலேயே தனது சிறுகதைகளை மிகச் சிறப்பாக அமைத்துள்ளார். இவரது சிறுகதைகள் முழுமையும் சமய நம்பிக்கைகளை அடியொற்றி அமைத்துள்ளன.

மனிதனிடம் பிறப்பு முதல் இறப்பு வரை பல்வேறான நம்பிக்கைகள் காணப்படுகின்றன. இந்த நம்பிக்கைகளைப் பின்பற்றுவதால் தங்கள் வாழ்க்கை வளமும், நலமும் பெறும் என மக்கள் நம்புகின்றனர். இயற்கையின் வழிபாட்டு முறைகளும் தோன்றின. ஒரு சமூக அமைப்பின் மரபினைக் கண்டு கொள்வதற்கு

அச்சமூகத்தின் நம்பிக்கைகள்தான் துணைபுரிகின்றன. இந்த நம்பிக்கைகள் சமூகத்தின் தேவை கருதியும், குறிக்கோளினை மையப்படுத்தியும் வளர்ந்து வருகின்றன. மனிதன் பிறப்பு முதல் இறப்பு வரை அவன் கொண்டிருக்கும் நம்பிக்கைகள் அவனை இயக்குகின்றன எனக் கூறும் அளவிற்கு நம்பிக்கைகள் மனித வாழ்வில் பெரும் பங்கு வகிக்கின்றன.

இறப்பிற்குப் பின் நிகழும் சடங்குகள் இறந்தவரின் நினைவுகளைப் போற்றும் வகையில் அமைந்திருக்கின்றன. இறப்பு என்பது உயரியல் ரீதியாக எல்லோருக்கும் நிகழ்கிறது. அ∴தே மனித இனத்துள் நிகழும் போது பல சடங்கார்ந்த நிகழ்வுகளை முன் வைக்கிறது என்பதைத் தோப்பில் முகமது மீரான் தனது படைப்பில் புலப்படுத்துகின்றார். தர்ஹா வழிபாட்டையும் அதன் நம்பிக்கைகளையும் தமது சிறுகதைகளில் சுட்டிச் செல்கின்றார்.

படைப்பாளன் இயற்கையை, சமூகத்தை மட்டுமே பேசாமல் பெண்களின் நிலையினையும் எடுத்துச் செல்ல வேண்டும். அவனே சிறந்த படைப்பாளன் என்ற அங்கீகாரத்தைப் பெறுகின்றான். அந்த வரையறைக்குள் தோப்பில முகமது மீரானின் எழுத்தும் அடக்கமாகின்றது. சமையலறை என்ற குறுகிய வட்டத்திற்குள் தொடங்கி வேலைத்தளங்கள் தொட்டுப் பெண் அடக்கப்படுகின்றாள். அடக்கப்பட்டு வருகின்றாள். இவை தோப்பில் முகமது மீரானின் சிறுகதையினுள் பொதிந்துள்ளதைக் காணமுடிகிறது. பெண்ணை மரபு வழியாக மென்மைக் குணம் நிறைந்தவள் என்ற கட்டுக்குள் கட்டி வைத்துவிடுகின்றனர். கணவனும் அவனைச் சார்ந்த குடும்ப உறவுகளும் பெண்ணை வரிசைப்படுத்திக் கொடுமைப்படுத்தி வருவதையும் படைப்பாளர் மீரானின் கதைகள் பேசுகின்றன.

சமூகத்தில் மனித இனத்தின் தோற்றத்திற்கும், அதன் பல்வேறு வளர்ச்சிக்கும், செயல்பாடுகளுக்கும் பெண்கள் அடிப்படைக் காரணங்களாக அமைகின்றனர். பிறப்பு முதல் இறப்பு வரை அவர்களின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். பெண்களின் பங்களிப்பு சமூகத்தில் இன்றியமையாதவை என்ற போதிலும், பெண்களின் நிலை என்பது ஆணாதிக்கச் சமூகத்தில் அடக்கி ஆளப்படும் அவலம் மேலோங்கி நிற்கிறது. அடக்கப்படும் பெண் சமூகம் வரதட்சணை, முதிர்கன்னிகள், திருமண உறவில் ஏற்படும் பூசல்கள், விதவை நிலை, பலதார மணம் போன்ற பல்வேறு நிலைகளில் அவலத்தை

அனுபவிக்கின்றனா். இக்கொடுமைகளுக்கு ஆளாகும் பெண்களின் மன உணா்வுகளையும், படைப்பாளா் படம் பிடித்துக் காட்டியுள்ளாா்.

ஆணாதிக்கப் போக்கையும், பெண்ணின் அவலத்தையும் தன் படைப்புகளில் படைத்திருந்தாலும், பெண் சாா்ந்த முற்போக்கான கருத்துக்களையும் பதிவு செய்துள்ளாா். ஆணாதிக்கத்தை உடைத்தெறிவதற்கும், பணிக்குச் செல்வதற்கும் சமயம் ஒரு தடையல்ல என்று முன்மொழிந்த எழுத்தாளா்களில் குறிப்பிடத்தக்கவராகத் திகழ்பவா் தோப்பில் முகமது மீரான்.

மனிதன் என்பவன் சமயம் என்னும் கூட்டுக்குள் தன்னை அடைகாத்துக் கொள்ளும்போது சமயம் கூறும் நெறிமுறைகளைப் பின்பற்றி சமூகத்தில் தன்னைத் தானே அடையாளப்படுத்திக் கொள்ள முயல்கின்றான். நீதி இலக்கியங்களின் வழியாகவும், இறைவேதங்கள் மூலமாகவும் காணப்படும் அறநெறிகள் மனிதனது வாழ்க்கையை நெறிப்படுத்துவதால் அவற்றின் வழி தன்னைத்தானே அறிந்து கொண்டு சமூகத்தின் வழி பிறரது துன்பங்களைத் தன் துன்பங்களைப் போல் பாவித்து அவற்றை நீக்க முயல்கிறான்.

உலகில் எத்தகைய துன்பங்கள் நோ்ந்தாலும் நெறி பிறழாமல் வாழ வேண்டும் என இசுலாமிய அறநெறிக் கோட்பாடுகளில் கூறப்பட்டுள்ளது. இசுலாமிய அறவாழ்வின் சிறப்புத் தன்மைகளான ஒருவன் தன் அண்டை வீட்டாருடன் நடந்து கொள்ளும் தன்மையினையும், தன்னைப்போல் பிறரையும் எண்ணும் மனப்பாங்கையும், விருந்தோம்பல் பண்புகளையும், ஏழை எளியவா்களுக்குக் கொடுத்து உதவும் இசுலாமிய கடமைகளில் ஒன்றான ஜக்காத் சிறப்புகளையும் படைப்பாளா் தனது சிறுகதைகளின் மூலம் உணா்த்துகின்றாா்.

இசுலாம் சமயத்தில் ஒழுக்கம் அறவாழ்வின் சிறப்பம்சமாகக் கருதப்படுகிறது. மனிதா்கள் அனைவரும் புனிதா்கள் அல்ல என்பதைக் கூறும் இசுலாம் அவா்கள் பலகீனமானவா்கள் என்பதையும் வேதத்தின் வழி விளக்கியுள்ளது. இசுலாம் சமயம் கூறும் அறக்கருத்துக்கள் உலகில் உள்ள ஒவ்வொருவருக்கும் ஏற்றதாக; இன்றையக் காலகட்டத்திற்கு மட்டுமில்லாமல் எக்காலத்திற்கும் ஏற்றதாக அமைந்துள்ளதைத் தோப்பில் முகமது மீரான் தனது சிறுகதைகளில் எடுத்துக் கூறுகின்றனா்.

ஒருவரின் படைப்பானது தெளிவான, திடமான சிந்தனைப் படைப்பாக வெளிவரும் போது சமுதாயச் சொத்தாகிவிடுகிறது. சமுதாயத்தில் வேரூன்றிக் கிடக்கும் சிக்கல்களை விடுவித்து, மனித மனங்களைச் செம்மைப்படுத்தும் பணியை இலக்கியம் செய்து வருகிறது. படைப்பாளன் குறிப்பாகச் சுட்டிக்காட்டிச் சொல்வதும் சமுதாயத்தில் ஆணிவேராய் நிலைத்து நிற்பதுமான வறுமையைப் படைப்பாளரின் படைப்பிலிருந்து ஆய்வானது எடுத்துச் சொல்கின்றது. சமூகத்தில் பொருளாதாரத்தில் ஏற்றத்தாழ்வுகள் இருந்து வருவதைப் படைப்பாளர் சுட்டிக் காட்டியுள்ளார். மக்களை ஆக்கிரமித்துக் கொண்டிருக்கும் நம்பிக்கை, மக்கள் பெருக்கத்தால் ஏற்பட்ட இயற்கைச் சீரழிவு, மனித நேயமற்ற செயல்கள், வாழ்வியல் ஒழுக்கம், கூடா ஒழுக்கம் போன்றவை படைப்பாளரின் எழுத்துக்களில் இடம் பெற்றிருப்பதை இவ்வாய்வு சான்றுகளுடன் தெளிவுபடுத்துகிறது.

படைப்பாளர் மீரான் மனித வாழ்வின் மேன்மைகளையும், அபத்தங்களையும் இயல்பான மனநிலையில் கதைகளாக்கியுள்ளார். வாசகரை விளித்துச் சொல்லுவது மொழியின் வழியே எளிமையாகக் கட்டமைக்கப்பட்டுள்ளது. கதையாடல், வாசிப்பில் மனதுக்கு நெருக்கமானதாக உள்ளது. ஏழ்மையினையும், அவலத்தினையும் சொல்லிக் கண்களிலிருந்து கண்ணீர் வரவழைப்பது தோப்பில் முகமது மீரான் படைப்புகளின் நோக்கமல்ல. மாறாகக் கண்களிலிருந்து நெருப்புப் பொறியை உண்டாக்கித் தனியுடைமையைப் பொசுக்கிப் பொதுவுடைமையைப் பூக்கச் செய்து, புதிய சமுதாயம் படைப்பதுான். வாழ்வின் துன்பங்களும், அவலங்களும் மனிதனை இடைவிடாமல் தொடர்ந்து நெருக்கடிக்குள்ளாக்கிவிடும் வேளையில் பெருமிதத்துடன் மனித இருப்பினை முதன்மைப்படுத்தியுள்ளதை இவ்வாய்வானது பதிவு செய்துள்ளது. ‘சொல்லப்பட்ட கதைகளின் வழியாக உருவாகிக் கொண்டிருக்கும் தோப்பில் முகமது மீரானின் ‘கதைசொல்லி’ பிம்பம் மரபு வழிப்பட்டது. பழமைவழி தோய்ந்த புதுமையானது அவரது கதைகளுக்குள் பயணிக்கையில் அவருடன் கதையாடுவதற்கான களம் விரிந்து கொண்டே போகிறது. அதுவே மீரான் கதைகளின் தனித்துவம் என்பதை ஆய்வானது விளக்கியுள்ளது.

**மேலாய்வுக் களங்கள்**

இவ்வாய்வினைத் தொடர்ந்து மேலும் கீழ்க்கண்ட தலைப்புகளில் மேலாய்வினைத் தொடரலாம்.

- தோப்பில் முகமது மீரான் படைப்புகளில் சமுதாயம்
- பெண்ணிய நோக்கில் தோப்பில் முகமது மீரான்
- மீரான் படைப்புகளில் பன்முகப் பார்வை

# துணை நூற்பட்டியல்

## முதன்மைச் சான்றுகள்


1. தோப்பில் முகமது மீரான் - **வேர்களின் பேச்சு** அடையாளம் வெளியீடு 1205, கருப்பூர்ச் சாலை முதற்பதிப்பு 2009. புத்தாநந்தம் - 621310


## துணைமைச் சான்றுகள்


1. அப்துல் ரவு.ஃ.ப் - **திருக்குர்ஆன்** இஸ்லாமிய நிறுவனம் சென்னை – 2002.

2. அப்துல் காதிர் உமரீ எம்.எம் - **திருக்குர்ஆன் மூலம் தமிழ்உரை – நபிமொழி விளக்கவுரை** ஜீரே பப்ளிகேஷன்ஸ் மதுரை – 20 முதற்பதிப்பு - 2011.

3. அப்துஸ் ஸமத், எச். (மொ.ஆ) - **இஸ்லாமிய ஷரியத்தில் பெண்களின் நிலை** ஃபுர்காண் பப்ளிகேஷன்ஸ் ட்ரஸ்ட் சென்னை – 600 094. முதற்பதிப்பு – 2004

4. அஷ்ஷைக் முஹம்மது அலி அல்ஹாஷிமி-- தமிழில் - ஹீஸைன் கனி பாகவி, கா **முன்மாதிரி முஸ்லீம்** தாருஸ் ஹீதா வெளியீடு 6/42 சடையப்பா தெரு, சென்னை – 01 முதற்பதிப்பு - 2003.

5. இந்திரா பார்த்தசாரதி. நா - **1973-ஆம் நூற்றாண்டில் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு** தீபம் வெளியீடு சென்னை.

6. இளங்கோவன் - **சிலப்பதிகாரம்** பாரி நிலையம் சென்னை முதற்பதிப்பு – 1988

7. இராஜாஜி - **சிகரங்களை நோக்கி**
த.நு.எ.ச. மாநாட்டின் கொள்கை அறிக்கை தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர் சங்கம்,
முதற்பதிப்பு - 1996.

8. இராஜம் கிருஷ்ணன் - **காலந்தோறும் பெண்**
தாகம் பதிப்பகம்
சென்னை,
முதற்பதிப்பு – 1989.

9. ___________________, - **கரிப்பு மணிகள்**
பாரி புத்தகப் பண்ணை
சென்னை
முதற்பதிப்பு – 1982.

10. இராமலிங்கம், ம. - **நாவல் இலக்கியம்**
தமிழ் புத்தகலாயம்
சென்னை
முதற்பதிப்பு – 1974.

11. இவாஞ்சிலினா கிரேஸ்.ஜே - **மாறிவரும் மங்கையர் உலகம்**
தமிழ்த்துறை வெளியீடு
போக் பெருமாட்டிக் கல்லூரி
மதுரை – 1986.

12. கலியாணசுந்தரணார் திரு.வி. - **பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத்துணை**
சாரதா பதிப்பகம்,
திருவல்லிக்கேணி,
சென்னை – 05.

13. கந்தசாமி.சோ.நா (ப.ஆ) - **இந்தியத் தத்துவக் களஞ்சியம்**
பாகம் ஒன்று
மெய்யப்பன் பதிப்பகம்,
சிதம்பரம்
மறுபதிப்பு - 2003.

14. குலாம் சர்வர்
ஸாதிக் அணிஸ் (மொ.பொ.ஆ) - **இஸ்லாம் நம்பிக்கைகளும் ரோதனைகளும்**
இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்,
138, பெரம்பூர் நெடுஞ்சாலை,
சென்னை – 600 012.
முதற்பதிப்பு – 2011.

15. கேசவன். கோ - **ராஜநாராயணின் கலையாக்கம் ராஜநாரணியம்**
அன்னம் புத்தக நிலையம்,
மதுரை.
முதற்பதிப்பு – 1988.

16. __________________, - **தமிழ்ச் சிறுகதைகளில் உருவம்**
அன்னம் புத்தக நிலையம்,
மதுரை –
முதற்பதிப்பு – 1978.

17. கைலாசபதி,க. - **சமூகவியலும் இலக்கியமும்**
நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்.
சென்னை,
முதற்பதிப்பு – 1988.

18. ஹபீப் முஹம்மது கே.வி.எஸ். - **வேதவரிகளும் தூதர் மொழிகளும்**
இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்
138 பெரம்பூர் நெடுஞ்சாலை,
சென்னை.
முதற்பதிப்பு - 1998.

19. __________________, - **வரதட்சிணை எனும் அவமானம்**
இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்
138, பெரம்பூர் நெடுஞ்சாலை,
சென்னை.

20. ஹனீபா, இ.எஸ்.ஹஜ்ஜா - **இஸ்லாத்தில் பெண்ணின் நிலை**
மாஹின் பிரிண்டர்ஸ்,
29, அப்பு மேஸ்திரி தெரு,
சென்னை – 01.
முதற்பதிப்பு – 2003.

21. சாமிநாதய்யர், உ.வே. - **புறநானூறு மூலமும் பழைய உரையும்**
உ.வே.சாமிநாதய்யர் நூல்நிலையம்,
திருவான்மியூர்,
சென்னை
முதற் பதிப்பு – 1971.

22. ____________________, - **மணிமேகலை மூலமும் அரும்பத உரையும்**
உ.வே.சாமிநாதய்யர் நூல்நிலையம்,
திருவான்மியூர்,
பெசன்ட் நகர்
சென்னை
முதற் பதிப்பு – 1981.

23. சாரதம்பாள், செ. - **இலக்கியமும் உளப்பகுப்பாய்வும் கொள்கைகளும், பயில்முறைகளும்**
ஹரிஹரன் பதிப்பகம்
மதுரை,
முதற்பதிப்பு – 2004.

24. சிதம்பர சுப்பிரமணியன். ச. - **தமிழ்நாவல்களில் பெண் கதை மாந்தர்கள்,**
பாரிநிலையம்
குமரன் பப்ளிஷர்ஸ்
சென்னை,
முதற்பு பதிப்பு – 1992.

25. சிவக்கண்ணன் - **மு.வ. நாவல்களில் சமூகச் சிக்கல்கள்,**
மதுரா பதிப்பகம், மதுரை
முதற்பதிப்பு – 2003.

26. சிவத்தம்பி, கா., - **தமிழில் சிறுகதையின் தோற்றமும் வளர்ச்சியும்**
தமிழ்ப் புத்தகாலயம்
சென்னை
முதற் பதிப்பு – 1978.

27. சுப்பிரமணியன், சு.வே., - **தொல்காப்பியம் தெளிவுரை**
மணிவாசகர் பதிப்பகம்
31 சிங்கர் தெரு
பாரிமுனை
சென்னை – 08
முதற்பதிப்பு - 1995.

28. சுப்புரெட்டியார், ந., - **தமிழ் இலக்கியங்களில் அறம் நீதி முறைமை**
ஐந்திணைப் பதிப்பகம்,
279, பாரதி சாலை,
திருவல்லிக்கேணி,
சென்னை – 05
இரண்டாம் பதிப்பு – 1988.

29. சொக்கலிங்கம், சு.ந., - **குறள் கூறும் வாழ்க்கை நெறி**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்.
154, டி.டி.கே.சாலை
சென்னை – 18
முதற்பதிப்பு – 1938.

30. ___________________, **காப்பியச் சிந்தனைகள்**
செல்வம் பப்ளிஷர்,
மதுரை - 2.

31. ஸ.ஃபிய்யூர் ரஹ்மான் முபாரக்பூரி, உமர் ஷரீ.ஃப் இப்னு அப்துஸ் ஸலாம் (மொ.பொ.ஆ) - **அர்ரஹீக் அல்மக்தூம்,**
தாருல் ஹுதா வெளியீடு
சென்னை - 1.
முதற்பதிப்பு – 1979.

32. தட்சணாமூர்த்தி, அ.இ., - **தமிழர் நாகரிகம் பண்பாடு**
ஐந்திணைப் பதிப்பகம்,
சென்னை
முதற்பதிப்பு – 1994.

33. தண்டபாணி தேசிகர். ச. - **திருக்குறள் அழகும் அமைப்பும்**
கழக வெளியீடு
சென்னை.

34. ___________________, - **திருக்குறள் அறத்துப்பால்,**
தண்டபாணி விருத்தியுரை,
கழக வெளியீடு
சென்னை.
முதற்பதிப்பு – 1956.

35. தமிழண்ணல் - **புதிய நோக்கில் இலக்கிய வரலாறு**
மீனாட்சி புத்தக நிலையம்,
இரண்டாம் பதிப்பு - 2006.

36. திருநாவுக்கரசு, க.த. - **திருக்குறள் நீதி இலக்கியம்**
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை
முதற்பதிப்பு – 1971.

37. நச்சினார்க்கினியர் (உ.ஆ) - **கலித்தொகை**
கழக வெளியீடு
சென்னை
முதற்பதிப்பு – 2007.

38. நாஞ்சில் ஆனந்தன் - **சங்க இலக்கியத்தில் மனித உரிமைகள்**
கண்மணி பதிப்பகம்,
திருச்சி
முதற்பதிப்பு – 1999.

39. பாரதிதாசன் - **பாரதிதாசன் கவிதைகள்**
மாணிக்கவாசகர் பதிப்பகம்
சென்னை
மறுபதிப்பு – 1992.

40. பிரேமா. இர. - **பெண்ணியம் அணுகுமுறைகள்**
தமிழ்ப் புத்தகலாயம்
15, மாசிலாமணி தெரு,
தியாகராய நகர்
சென்னை
முதற்பதிப்பு – 1998

41. புலியூர்க் கேசிகன், (உ.ஆ) - **திருக்குற்றால குறவஞ்சி**
பாரி நிலையம்,
சென்னை

42. மணவாளன் அ.அ - **இருபதாம் நூற்றாண்டின் இலக்கிய கோட்பாடுகள்,**
உலக தமிழராய்ச்சி நிறுவனம்
தரமணி,
சென்னை
முதற்பதிப்பு – 1995.

43. மறைமலை சி.இ. - **இலக்கியமும் சமூகவியலும்**
மணிவாசகர் பதிப்பகம்
சென்னை
முதற்பதிப்பு – 1977.

44. மவ்லவி அப்துல்லாஹ் மன்பா - **ஜனாஸா தொழுகை – சட்டங்கள்**
சாஜிதா புக் சென்டர்
248, தமிழ்ச் செட்டித் தெரு
சென்னை – 01.
முதற்பதிப்பு – 2008.

45. மார்க்ஸ் - **மார்க்சிய இலக்கியக் கொள்கை**
ராதா பதிப்பகம்
புதுக்கோட்டை
முதற்பதிப்பு – 1988.

46. மீனாட்சி முருகரத்தினம் - **மேலை இலக்கியத் திறனாய்வு அறிமுகம்**
கூட்டுறவு அச்சகம்
மதுரை
முதற்பதிப்பு – 1987

47. முத்துச் சிதம்பரம், ச., - **பெண்ணியம் தோற்றமும் வளர்ச்சியும்**
தமிழ்ப்புத்தகாலயம்
சென்னை
இரண்டாம் பதிப்பு – 1999.

48. மைதிலி . இ. - **பெண்ணியமும், தமிழும்**
மைதிலி பதிப்பகம்
சென்னை – 40.

49. மேத்தா.மு. - **கண்ணீர்ப் பூக்கள்,**
கவிதா பப்ளிகேஷன்ஸ்
சென்னை.

50. மௌலானா முஹம்மத் யூசுப் இஸ்லாஹி - மௌவி.அப்துல் காதிர் உமரி (மொ.பொ.ஆ) **வாழ்க்கைக் கலை**
இஸ்லாமிய நிறுவனம் ட்ரஸ்ட்
138, பெரம்பூர் நெடுஞ்சாலை
சென்னை – 12.
முதற்பதிப்பு – 2003.

51. ராஜநாராயணன் இ. - **கி.ராஜநாராயணன் பதில்கள்**
அன்னம் பதிப்பகம்
சிவகங்கை
முதற்பதிப்பு – 1994.

52. வரதராசனார். மு. - **திருக்குறள் தெளிவுரை**
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.
154 டி.டி.கே.சாலை,
சென்னை – 18.
முதற்பதிப்பு – 1959.

53. வேலுப்பிள்ளை., ஆ - **தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும்**
தமிழ்த்துறை
இலங்கை பல்கலைக்கழகம்
பேராதனை
இலங்கை
முதற்பதிப்பு – 1969

54. விஜயலெட்சுமி ராஜாராம் - **வட்டார இலக்கியமும் கி.ராஜநாராயணனும்**
அகரம் பதிப்பகம்
சிவகங்கை
முதற்பதிப்பு – 1995.

**அகராதிகளும் கலைக்களஞ்சியங்களும்**

- கழகத் தமிழ் அகராதி
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
சென்னை
முதற்பதிப்பு – 1971.

- வாழ்வியல் களஞ்சியம்
தொகுதி 2,3
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்.

**ஆய்வேடுகள்**

1. செ.சையது அலி - **தோப்பில் முகமது மீரான் கதைகளில் சமூக மதிப்பீடு**
இளநிறைஞர் பட்ட ஆய்வேடு
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

2. வனிதா - **சுஜாதாவின் சிறு கதைகளில் வாழ்வியல் விழுமியங்கள்**
முனைவர் பட்ட ஆய்வேடு,
தேசியக் கல்லூரி,
திருச்சிராப்பள்ளி – 2012.


**ஆங்கில நூல்கள்**


1. Hari Prished Shastri - **The Ramayana of Valmiki**
Vol-1
London
First Edition – 1951.

2. Indira - **States of Woman in Ancient India**
Motilal Banarsidas
Banaras.
First Edition – 1955.

3. Tamil Varghese - **Her Gold and her bady**
Vikas Publishing House P.Ltd.
Delhi.
First Edition – 1980.

4. Kings A.G. - **The Ramayana of Tulsidas**
rendered into English Verse
Vol-1.
- Childhood and Youth marriage of Siva and Parvathi
Hindustan Times Press
New Delhi.

5. Singh.K. - **The Tabaoat Akbar of Khawajai**
Nizamuddin A.R. Media (Tr.) D. Be
The Royal Asiatic Society
of Bengal, Akbar Badshah Calcutta
First Edition – 1936.


**ஆங்கில இதழ்**


1. Ambikha Bhattacharya - Moulding man’s attituide
for Woman’s progress in India
Social Welfar
Vol – XXIII
Feb – 1977.


KANNIYAKUMARI
District Map
N
KERALA
Tirunelveli
Muthukuzhivayal
Kodayar Lake
Pechipara
Kulasegaram
Thiruvattar
www.mapsofindia.com
Kuzhitturai
Kollancode
NH-47
Azhakiapandipuram
Bhudhappandi
Padmanabhapuram
Takkalai
Thengapattanam
Udayagiri
Thovalai
NH-7
Eraniel
Kolachel
NAGERCOIL
Suchindram
Rajackamangamthurai
Vattakkottai
Agastiswaram
Kanniyakumari
Indian Ocean
LEGEND
State Boundary
District Boundary
National Highway
Major Road
Railway
District Headquarter
Major Town
Other Town
Rivers
Map not to Scale
Copyright © 2007 Compare Infobase Limited

## ஆய்வுக்குரிய இசுலாமிய மக்கள் தொடர்பான அரபு கலைச் சொற்கள்

| | | |
|---|---|---|
| 1 | அசர் | மாலை நேரத்தொழுகை |
| 2 | அத்தர் | வாசனைத்திரவியம் |
| 3 | அமல் | நன்மை |
| 4 | அர்சு | சிம்மாசனம் |
| 5 | அவுலியா | இறைநேசர் |
| 6 | அல்குர்ஆன் | வேத நூல் |
| 7 | அல் ஈமானுல் மு.ஃ.பஸ்ஸல் | விரிவான நம்பிக்கை |
| 8 | ஆகிரா | மறுஉலகம் |
| 9 | இமாம் | தொழ வைப்பவர் |
| 10 | இபுலிஸ் | சாத்தான் |
| 11 | இன்ஸானானா | மனிதன் |
| 12 | இஷா | இரவு நேரத் தொழுகை |
| 13 | இஸ்ராயில் | உயிரைக் கைப்பற்றும் வானவர் |
| 14 | ஈமான் | இறை நம்பிக்கை |
| 15 | உஸ்தாது | ஆசிரியர் |
| 16 | எத்தீம் | அநாதை |
| 17 | ஜக்காத் | கொடை |
| 18 | ஜமாஅத் | ஊர் |
| 19 | ஜம்ஜம் | மக்காவிலுள்ள புனிதக்கிணறு |
| 20 | ஜின் | ஆவி |

| 21 | ஒலு | தொழுகைக்கு முன்பு முகம், கை, கால் கழுவுதல் |
|---|---|---|
| 22 | ஹதியா | அன்பளிப்பு |
| 23 | ஹயாத்து | ஜீவன் |
| 24 | ஹராம் | தீமை |
| 25 | ஹவ்லு | நீர்த்தடாகம் |
| 26 | ஹஸ்பி ரப்பி ஜல்லால்லாஹ் | என்னுடைய இறைவன் எனக்கு போதுமானவன் கம்பீரமானவன் |
| 27 | ஹஜ்ஜிப் பெருநாள் | பக்ரீத் |
| 28 | ஹஜ் | புனிதப் பயணம் |
| 29 | ஹீரிகள் | சொர்க்கப் கன்னிகள் |
| 30 | கித்தாப் | நூல் |
| 31 | கிப்லா | மேற்குதிசை |
| 32 | கியாமத்து | உலக முடிவு நாள் |
| 33 | குத்புல்லாஹ் | இறைவனின் வேதம் |
| 34 | சக்கராத் | உயிர் பிரியும் நேரம் |
| 35 | சந்தூக் | சடலத்தை எடுத்துச் செல்லும் பெட்டி |
| 36 | ஸதக்கா | தானம் |
| 37 | ஸிபத்துக்கள் | தன்மைகள் |
| 38 | சுப்ஹ் | அதிகாலை நேரம் |
| 39 | சுவனம் | சொர்க்கம் |
| 40 | சைத்தான் | தீமைச் செய்தவன், கட்டளைக்கு கட்டுப்படாதவன் |
| 41 | தர்ஹா | வழிபாட்டுத் தளங்கள் |

| 42 | தவாப் | புண்ணியம் |
|---|---|---|
| 43 | தவ்ஹீத் | ஓர் இறைக் கொள்கை |
| 44 | தலாக் | விவாகரத்து |
| 45 | தஸ்பீஹீமணி | ஜெபமாலை |
| 46 | திக்று | ஜெபம் |
| 47 | தில்மீதுகள் | மாணவர்கள் |
| 48 | துன்யா | உலகம் |
| 49 | துஆ | வேண்டுதல் |
| 50 | தொழுகை | இறைவனை வணங்குதல் |
| 51 | தௌபா | மன்னிப்பு |
| 52 | நஜீசு | அசுத்தம் |
| 53 | நிக்காஹ் | திருமணம் |
| 54 | நிய்யத் | எண்ணம் |
| 55 | பத்வா | தீர்ப்பு |
| 56 | பயான் | சொற்பொழிவு |
| 57 | பரக்கத் | லாபம் |
| 58 | பராஅத் | புதுக்கணக்கு |
| 59 | பாங்கு | தொழுகைக்கு அழைப்பு விடும் ஒலி |
| 60 | பித்ரு | பெருநாளுக்கு முதல் நாள் கொடுக்கும் தர்மம் |
| 61 | புர்தா | அரபுப்பாடல் |
| 62 | பைத்து | பாடல் |

| 63 | பைத்துல்மால் பணம் | பொதுப்பணம் |
|---|---|---|
| 64 | மக்ரிப் | கருக்கல் நேரம் |
| 65 | மத்ஹ் | பெருமை |
| 66 | மலாயிக்கா | வானவர்கள் |
| 67 | மிஸ்வாக் | பல்துலக்கல் |
| 68 | மிஸ்கீன் | ஏழை |
| 69 | முஸீபத்து | சனியன் |
| 70 | யாசின் | குர்ஆன் அத்தியாயம் |
| 71 | யாமுஹ்யுத்தீன் | என்னைப் படைத்த இறைவனே |
| 72 | ரப்பு | இறைவன் |
| 73 | ரபிஉல் அவ்வல் | அரபி மாதம் பத்தாவது ஆண்டு |
| 74 | ராஹாத் | சுகம் |
| 75 | ருஹ் | உயிர் |
| 76 | லஅனத் | சாபம் |
| 77 | லுஹர் | நண்பகல் தொழுகை |
| 78 | வசியத் | இறுதி ஆசை |

## வட்டார வழக்குச் சொற்கள்

| 1 | அசல் | அறிவு |
|---|---|---|
| 2 | அக்காணி | பதநீர் |
| 3 | அரை அணா | ஆறுகாசு |
| 4 | அறுதலி | விதவை |
| 5 | அஸ்மா | மந்திரம் |
| 6 | ஆத்தியம் | முதலில் |
| 7 | ஈடு | முறை |
| 8 | உப்பாக்க | பாட்டன் |
| 9 | உமலில் | மீன்போடும் ஓலைக் கூடை |
| 10 | உம்மா | அம்மா |
| 11 | உரளும் | ஒருவகைப் பலகாரம் |
| 12 | ஒசாத்தி | மருத்துவச்சி |
| 13 | ஒசாயை | நாவிதன் |
| 14 | ஓசுவாசு | சுத்தம் |
| 15 | ஓதுவலை | மதரசா |
| 16 | ஓர்மயில்லை | நினைவில்லை |
| 17 | ஓர்மையுண்டாக்கும் | நினைவிருக்கிறது |
| 18 | ஒரு உறை | நூறு |
| 19 | ஓஜீபனக் | உணவு |
| 20 | கசர்த்து | உடற்பயிற்சி |

| 21 | கஸவ | ஜரிகை |
|---|---|---|
| 22 | கண்ணும்மா | பாட்டி |
| 23 | கதம்ப | தேங்காய் நார் |
| 24 | கத்தச்சோறு | இறந்தவர்களுக்கு செய்யும் சடங்குகளில் பரிமாறப்படும் உணவு |
| 25 | கப்பித்தான் | மாலுமி |
| 26 | கரைச்சல் | அழுகை |
| 27 | கழிச்சல்ல | வீணாணாப்போன |
| 28 | கள்ளஹிமாறே | கழுதை |
| 29 | களியோடக்கா | ஒருவகைப் பலகாரம் |
| 30 | காக்கா | அண்ணன் |
| 31 | காட்ச | அன்பளிப்பு |
| 32 | கிண்டி | சமைத்து |
| 33 | கிறாக்குட்டிகளே | தப்பாகப் பிறந்தவன் |
| 34 | கினா | கனவு |
| 35 | குச்சங்காளி | தென்னங்குறும்பை |
| 36 | குட்டிம்மா | சின்னம்மா |
| 37 | குதறத்தான | அற்புதம் |
| 38 | குப்பாயம் | சட்டை |
| 39 | குருத்தம் | ஒழுக்கம் |
| 40 | குருசு | சிலுவை |
| 41 | கைமணி | கையாள் |

| | | |
|---|---|---|
| 42 | கைமடக்கு | பீஸ் |
| 43 | கொள்பீஸ் | கடற்கரை |
| 44 | கோட்டடைப்புக்கு | பள்ளி விடுமுறைக்கு |
| 45 | சக்கரம் | திருவதாங்கூரில் நடைமுறையிலிருந்த நாணயம் |
| 46 | சக்கோலி | அரிசி மாவில் இறால் போட்டு சமைத்த சிற்றுண்டி |
| 47 | சபராளி | பயணி |
| 48 | சபூறாளி | பொறுமைசாலி |
| 49 | சம்மந்தம் | திருமணம் |
| 50 | சலாமத் | மீட்சி |
| 51 | சாரத் | லுங்கி |
| 52 | சுக்கூர் | மண்டியிடல் |
| 53 | சுலைமானி | பால் இல்லாத சாயா |
| 54 | சூண்டை | தூண்டில் |
| 55 | சூர்லே | புயல் |
| 56 | சொஞ்சாடி | மீதி |
| 57 | செம்புச் சருவம் | பாத்திரம் |
| 58 | தொறை | கடற்கரை |
| 59 | தேத்தண்ணீர் | தேநீர் |
| 60 | தோய | தோசை |
| 61 | தோர்த்தும் | துண்டு |
| 62 | நஸ்நாணிக் | கிறிஸ்துவர்கள் |

| 63 | நிக்கா | நன்மை |
|---|---|---|
| 64 | நெத்தொலி | மீன் |
| 65 | பஹ்றெ | கடல் |
| 66 | பகுதாது | பாக்தாத் |
| 67 | பழுத்திலை | முற்றியவெற்றிலை |
| 68 | பறவா | திட்டுதல் |
| 69 | பஷ்காரம் | நாகரிகம் |
| 70 | புதியோண்ணின் | புதுப்பெண் |
| 71 | பெத்தம்மா | முப்பாட்டி |
| 72 | போரிசை | நன்மை |
| 73 | மக்கா | மகன் |
| 74 | மரிச்சுப்போச்சு | இறந்துபோன |
| 75 | மறவண் அறை | மணவறை |
| 76 | மாலு | வலைத்துண்டு |
| 77 | மிஸ்கின் | யாசகன் |
| 78 | முட்டைதாளி | ஒருவகைப் பாசிச்செடி |
| 79 | முத்தும்மா | பெரியம்மா |
| 80 | முத்தவல்லி | ஊர்த்தலைவர் |
| 81 | மும்மூனின் | முஹம்மது நூஹ் |
| 82 | முளிச்சல் | சாபம் |
| 83 | முன்ஷி | மலையாள ஆசிரியர் |

| 84 | மைலாஞ்சி | மருதாணி |
|---|---|---|
| 85 | ராத்தா | அக்கா |
| 86 | வக்பு | இனாம் |
| 87 | வர்க்கத் | மோசமான |
| 88 | வள்ளம் | படகு |
| 89 | வஸ்து | தோப்பு |
| 90 | வாப்பா | அப்பா (அத்தா) |
| 91 | வாப்பும்மா | பாட்டி |
| 92 | வாளி | ஒருவகை சிப்பி |
| 93 | வியாத்தும்மா | பீவி பாத்திமா |
| 94 | வெண்ணிக்கையான | தூய்மையான |
| 95 | வெளயிலெ | தோப்பில் |
| 96 | வெள்ளவட்டுகள் | மாத்திரைகள் |
| 97 | வேளாச்சு | வியாழக்கிழமை |

## கதைகள் வெளியான காலவரிசைப் பட்டியல் (1968-2009)

| வ. எண் | கதையின் பெயர் | வெளிவந்த இதழ் | ஆண்டு |
|---|---|---|---|
| 1 | நரகம் பூமியில் | பிறைமாத இதழ் | 1968 |
| 2 | விளக்கு | ” | 1968 |
| 3 | தலைப்பெருநாள் | ” | |
| 4 | தஜ்ஜால் மேல் விழுந்த மலை | ” | |
| 5 | கத்தச்சோறு | ” | |
| 6 | ‘பவர்’க்காரி | மணிவிளக்கு மாத இதழ் | |
| 7 | கடல் | பிறைமாத இதழ் | |
| 8 | அன்புக்கு முதுமை இல்லை | ” | |
| 9 | பொன்னரை ஞாண் | ” | |
| 10 | துறைமுகம் | ” | |
| 11 | நேற்று வந்த வழி | ” | |
| 12 | கறவை தீர்ந்த மாடு | மதி-நா இதழ் | ஜுலை 1980 |
| 13 | இறக்கை இழந்த பறவைகள் | ” | ஆகஸ்டு 1980 |
| 14 | ஒரு செருப்பின் கதை | ” | ஆகஸ்டு 1981 |
| 15 | மொட்டைக் கடிதம் | ” | அக்டோபர் 1981 |
| 16 | ஆதத்தின் மகன் மைதீன் பிள்ளை | ” | டிசம்பர் 1982 |
| 17 | ஒரு சூரியன் எரிகிறது | ” | ஏப்ரல் 1983 |
| 18 | ஒரு மவ்லவியின் மரணம் | ” | செப்டம்பர் 1983 |
| 19 | ஒரு தெருவின் சுயசரித்திரத்திலிருந்து | ” | மே 1985 |
| 20 | ஓர் இரங்கல் பா | மலர்மதி – மாத இதழ் | |

| | | | |
|---|---|---|---|
| 21 | இதை எப்படி நிறுத்துவது? | | |
| 22 | சூரியனைப் பிரசவிக்கும் பாறை | | |
| 23 | கருந்தேளின் கொடுக்குகள் | | |
| 24 | இன்று நான், நாளை நீ! | மலர்மதி – மாத இதழ் | |
| 25 | கொலுசு அணிந்த பாதங்கள் | நண்பர் வட்டம் மாத இதழ் | |
| 26 | ஓர் உஸ்தாதின் அகமியம் | முஸ்லீம் முரசு மாத இதழ் | |
| 27 | ‘நெட்டோகாலி’ என்ற நூறுல்ஹஸன் | நண்பர் வட்டம் மாத இதழ் | |
| 28 | சுருட்டுப்பா | மலர்மதி – மாத இதழ் | |
| 29 | குரு | சுபமங்களா இதழ் | |
| 30 | வாரிசு | இந்தியாடுடே இதழ் | |
| 31 | யாத்திரை | இந்தியாடுடே இதழ் | டிசம்பர் 1993 |
| 32 | ஓமவல்லி | இதயம் பேசுகிறது | அக்டோபர் 1993 |
| 33 | தங்கராசு | புதிய பார்வை | |
| 34 | அனந்தசயனம் காலனி | இந்தியா டுடே இலக்கிய ஆண்டுமலர் | 1994 |
| 35 | வட்டக் கண்ணாடி | புதிய பார்வை | ஜுன் 1994 |
| 36 | வேட்டமங்கலம் யானை | அமுதசுரபி | நவம்பர் 1994 |
| 37 | தவம் | பாவு. இஸ்லாமியப் பண்பாட்டுத் தொகை நூல் | 1994 |
| 38 | உம்மாவின் ருஹ் | இந்தியா டுடே | செப்டம்பர் 1995 |
| 39 | காலத்தின் ஆவர்த்தனம் | புதியபார்வை | ஜுன் 1995 |
| 40 | சன்னதியில் | செம்மலர் | 1995 |
| 41 | சாயமுகங்கள் | கல்வி வார இதழ் | அக்டோபர் 1995 |
| 42 | கேள்வியின் விளிம்பில் | அமுதசுரபி தீபாவளி மலர் | 1996 |
| 43 | குட்டி ஆடு | கல்கி வார இதழ் | 1996 |

| 44 | உள்வானம் | இந்தியா டுடே இலக்கிய ஆண்டுமலர் | 1996 |
|---|---|---|---|
| 45 | கடிகாரம் | முஸ்லீம் அரசு | மார்ச் 1997 |
| 46 | பேரன் | இந்தியா டுடே | அக்டோபர் 1997 |
| 47 | சூட்சம இடைவெளி | ஓம்சக்தி | 1997 |
| 48 | 45-வது வார்டு வேட்பாளர் | கல்கி தீபாவளி மலர் | 1997 |
| 49 | மாயனங்கள் | தமிழ்முரசு, இலக்கிய மலர் | 1997 |
| 50 | ஒரு பஸ் பயணத்தின் போது | சங்கொலி, பொங்கல் மலர் | 1998 |
| 51 | குட்டன் பிள்ளை சார் | கணையழி | அக்டோபர் 1998 |
| 52 | பிறப்பின் விசித்திரம் | சிந்தனைச் சுரம் | 1998 |
| 53 | வானவர்கள் செல்லுமிடங்கள் | முஸ்லீம் முரசு, பொன்விழா மலர் | 1999 |
| 54 | ஏணி | யுகம் மாறும் | 1999 |
| 55 | பச்சை நிறக்கார் | ஆரண்யம் இதழ் | 2000 |
| 56 | முன்னோர்களின் இரண்டாவது நல்லடக்கம் | இந்தியா டுடே இலக்கிய மலர் | 2000 |
| 57 | தலைக்குளம் | கல்கி, தீபாவளி மலர் | நவம்பர் 2001 |
| 58 | மாளிகை வீடு | குமுதம் | 2001 |
| 59 | களியோடக்கா | தினமணி, ஈகைப் பெருநாள் மலர் | 2001 |
| 60 | புதையல் | ஓம்சக்தி தீபாவளி மலர் | 2002 |
| 61 | ஒரு குட்டித்தீவின் வரைபடம் | ஓம்சக்தி தீபாவளி மலர் | டிசம்பர் 2002 |
| 62 | காலண்டர் பாவா | தினத்தந்தி | - |

| | | | |
|---|---|---|---|
| 63 | நிற்காத கால் | - | 2003 |
| 64 | அஸ்தமனம் | ஓம்சக்தி தீபாவளி மலர் | நவம்பர் 2003 |
| 65 | பண்டமாற்று | | |
| 66 | அடையாளங்கள் | | |
| 67 | மிஸ்டர் மார்ட்டின் | | |
| 68 | ஒரு மாமரமும் கொஞ்சம் பறவைகளும் | | |
| 69 | இரைகள் | | |
| 70 | நாராயண முதலித்தெரு 52ஆம் நம்பர் வீடு | | |
| 71 | அப்துல்லா இப்னு அபூபக்கர் | | |
| 72 | தங்கவயல் | | |
| 73 | ஒரு சவ ஊர்தியின் நகர்வலம் | | |
| 74 | 1100ஆம் ஆண்டு மகர மாசம் 18ஆம் தேதி வில் பத்திரம் | | |
| 75 | தலையில் துண்டு கட்டிய பெண் | | |

3. சிறுகதை, புதினம் என இலக்கியத்தின் பல வடிவங்களையும் எழுத்தாளுகின்ற நீங்கள் எந்த வடிவத்தினைச் சிறந்த கருத்தாக்கக் கருவியாக உணர்கின்றீர்கள்.

ஒரு படைப்பாளனுக்குப் படைப்பு தன் வசப்பட வேண்டும். சிறுகதை என்பது குறுகிய தன்மையுடையதாக இருந்தாலும், என் கருத்தை முழுமையாக எடுத்துக் கூறுவதற்குப் புதினம் எனக்குப் பிடித்த வடிவமாகும்.

4.அதிகார வர்க்கத்தின் அடக்கு முறைகளை அம்பலப்படுத்தியதன் காரணம் என்ன?

வாழ்வுக்கும் எழுத்துக்கும் இடையிலே – என்னைப் பொறுத்தவரைக்கும் நெருக்கம் உண்டு. எங்க ஊருலே எதைப் பார்த்தேனோ அதை அப்படியே நான் எழுதினேன். என்னுடைய வாழ்க்கையிலே நான் அனுபவிச்ச விசயங்களையும் எழுதினேன். எழுத்திலே இருந்து என் வாழ்க்கை அந்நியப்பட்டதல்ல. நான் பார்த்த அதிகார வர்க்கத்தின் ஆதிக்கத்தால் ஏற்படும் பின்விளைவுகளுக்கும் சமுதாய அவலத்திற்கும் குரல் கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் தான்.

5. பாத்தே, மம்முதே – வழக்கமாக உங்கள் படைப்புக்களில் இடம்பெறும் இவர்கள் நீங்கள் பார்த்த மனிதர்களா? இல்லை படைப்பு மாந்தர்களா?

நான் எந்த கதாபாத்திரத்தையும் உருவாக்கவேயில்லை. எல்லாமே எங்க கிராமத்திலே வாழ்ந்த கதாபாத்திரங்கள். இப்ப சில கதைகள் வந்து.... நான் வாழக்கூடிய திருநெல்வேலி சுற்றுவட்டாரத்திலோ்ந்து கதாபாத்திரங்களைக் கற்பனையில் உருவாக்கவே முடியாது. கற்பனையிலே உருவாகிற கதாபாத்திரம் நிலையாக நின்றதே கிடையாது. வாழ்ந்த, வாழ்ந்துகொண்டிருக்கும் கதாபாத்திரங்களே மெருகூட்டும்.

6. சில கதைகளில் சமூகக் கட்டுப்பாடுகளை உடைத்தெறியும் பாங்கினைக் கூறுகிறீர்கள். இதற்கு ஏதாவது அடிப்படைக் காரணம் உண்டா?

சமூகக் கட்டுப்பாடுகளை உடைத்தெறிவதற்கு அச்சமுதாயத்தின் ஒட்டுமொத்த வறுமை தான் காரணமாக அமைகிறது.

7. வட்டார வழக்கு உபயோகப்படுத்தி எழுதிய மிக முக்கியமான எழுத்தாளில் நீங்களும் ஒருவர். இது வாசகர்கள் மத்தியில் சிக்கலை உருவாக்காதா?

பெரிய சிக்கலை இது உருவாக்கும்னு எனக்கு தோணலே. வாசகன் என்பவன் சிறந்த கலைஞன். அவனுக்கு எந்த வட்ார வழக்குமே சிக்கலைக் கொடுக்கவே கொடுக்காது. வட்டார வழக்கு என்ற எழுத்து முறையை நான் கையாண்டதில்லே... எனக்குத் தெரிஞ்ச மொழி, எங்கள் மக்கள் பேசுற மொழியை எழுதனும்னு நான் எழுதினேன். எனக்குத் தமிழ்ப் பின்னணி தெரியவே தெரியாது. நான் மலையாளப் பின்னணி. வட்டார வழக்குன்னா என்னாண்டே எனக்குத் தெரியாது. எங்க ஊருல பேசுனபடியே நான் எழுதினேன். எழுதி, புத்தகமாயி ரெண்டு மூணு ஆண்டுகளுக்குப் பிறகுதான் வட்டார மொழிண்டு எல்லோரும் சொன்ன பிறகுதான் அப்படியொன்னு உண்டுன்னே எனக்குத் தெரியும். வட்டாரமொழியே எழுதனும்னு திட்டமிட்டு நான் எழுதினதே அல்ல. அந்த பகுப்பு முறையை நான் விரும்பவுமில்லே.

8. சமூகப் பிரச்சனையை எதார்த்தமாகக் கூறும் நீங்கள் தீர்வு சொல்ல ஏன் முன் வரவில்லை?

என் கதைகள் அனைத்தும் நிகழ்ச்சியின் தொகுப்பு. முடிவு வாசகர்கள் வசம் விட்டுவிட்டேன்.

9. உங்களுடைய கதைகளின் வழியாக உங்களுடைய கதாபாத்திரங்கள் வழியாக வாசகர்களின் மனத்தில் எதை விதைக்க நினைக்கிறீர்கள்?

சமூகத்திலேர்ந்து எந்த விதமான அனுபவங்களைப் பெற்றேனோ அதே அனுபவத்தை வாசகர்களுக்குக் கொடுத்து அவர்களும் அந்த அனுபவத்தைப் பெறச் செய்கிறேன். அதே நோக்கம் தான் என்னுடைய கதைகள் வழியாக நான் செய்றது. கதைகள் வழியாக எந்த தர்ம உபதேசங்களும் செய்ய நான் வரலே. என்னுடைய கதையை வாசித்து சமூகம் முன்னேறும்னு எதிர்பார்ப்பும் எனக்கு இல்லே.

10. ஒரு படைப்பாளனை உருவாக்குவது அனுபவங்களா? புத்தகங்களா?

புத்தக அறிவை விட வாசிச்சி கிடைக்கிற அறிவை விட, அனுபவிச்சி கிடைக்கிற அறிவுதான் கலைக்குப் பொருந்தும். ஒரு நல்ல படைப்பாளிக்கு அவனுடைய அனுபவங்கள் தான் முக்கியம். உலகத்தின் மிகுந்த மிகச்சிறந்த படைப்பை எடுத்துக்கிட்டாலும் படைப்பாளி அவனுடைய அனுபவத்தைத்தான் எழுதியிருப்பான். படைப்பாளி என்பவன் அவனுடைய அனுபவத்திலேர்ந்து எழுதக் கூடியவர். எழுத்தாளன் என்பவன் வாசிச்சி எழுதக் கூடியவன்.

11. தங்களின் படைப்புகளில் எதனை முதன்மையாகப் படைத்திருப்பதாகக் கருதுகிறீர்கதள்?

நான் பார்த்த மக்களின் வாழ்க்கை நிலை, வறுமை, மனிதநேயமற்ற சூழல், கல்வியின் இன்றையப் போக்கு, போன்றவற்றை முதன்மையாகக் கொண்டு சிறுகதைகள் படைக்கப்பட்டுள்ளன.

12. தர்ஹா நம்பிக்கைப் பற்றி கூறுகிறீர்களே அனுபவமா? அறிந்து கொண்டதா?

படைப்பாளன் என்ற நோக்கில் அறிந்து கொண்டதுதான்.

13. தங்களது படைப்புகளில் பெண்களை ஆண்களுக்கு நிகரான உழைப்பாளிகளாகக் காட்டுவதன் நோக்கம்?

பெண்களால் எதையும் செய்ய முடியும் என்ற எண்ணத்தினால் தான் படைப்பாளனுக்கு ஆண், பெண் என்ற பாகுபாடு கிடையாது. இருவரும் சமமானவர்கள்.

14. இன்றைய உலகமயமாக்கச் சூழல் படைப்பாளனை பாதிக்கிறதா?

ரொம்ப பாதிச்சிருக்கு. கலைத்துறையை மட்டுமல்ல நம்ம நாட்டுலே உள்ள எல்லா துறைகளையும்..... இயற்கையே அழிஞ்சி போயிருக்கு. நாம் இன்றைக்குக் காணக்கூடிய வயல் நாளைக்கு இருக்காது. இங்கே காணக்கூடிய குன்று, நதி நாளைக்கு இருக்காது. எங்கே போறதுண்டு தெரியாம உலகத்துல வாழ்ந்துகிட்டிருக்கோம். உலகமயமாக்கத்தாலே நம்ம கலாச்சாரம் அழிஞ்சி போயிடுச்சு. நம்ம மொழி அழிஞ்சது. பண்பாடு அழிஞ்சது. எல்லாமே அழிஞ்சுது. இனியொரு காலகட்டத்திலே நம்ம நாடே அடிமைப்படும் ஒரு சூழல் ஏற்படும். உலகமயமாக்கம் வந்து எழுத்துலகத்துக்கு மிகப்பெரிய சவாலா இருக்கு நிச்சயமா ஒவ்வொரு படைப்பாளியும் உலகமயமாக்கத்துக்கு எதிராத்தான் எழுதனும்.

15. உங்களைத் தாக்கிய சமுதாயப் பிரச்சினைகள் படைப்புகளில் எத்துணை விழுக்காடு பதிவாக்கி உள்ளீர்கள்?

முழுமையாக பதிவாகி உள்ளது.

வாழ்வுக்கும் எழுத்துக்கும் இடையிலே என்னைப் பொறுத்தவரைக்கும் நெருக்கம் உண்டு. என்னுடைய சிறுகதைகள் அனைத்தும் நான் பார்த்த நிகழ்வுகள். கற்பனை அல்ல.

16. இணையதளங்களையும், வலைப்பதிவுகளையும் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? இலக்கியத்திற்கு அவற்றால் ஏதாவது பங்களிப்புத் தரமுடியும் என எண்ணுகிறீர்களா?

இலக்கிய வளர்ச்சிக்கு ஒரு உறுதுணையாக இன்றைய இணையதளங்கள் உள்ளது. மக்கள் உலக இலக்கியங்களைப் படித்துக் கொள்வதற்கான எளிய முறை.

## நேர்காணல்

1.தோப்பில் முகமது மீரான் என்கிற எழுத்தாளன் உருவானது எப்படி?

எங்க ஊரு தேங்காய்ப்பட்டினம் கடற்கரை. பண்டொரு துறைமுகமாக இருந்த பகுதி. அரபி கலாச்சாரம். அந்நியநாட்டு கலாச்சாரம், பல கலாச்சாரங்கள் ஒன்றிணைந்த பகுதிதான் தேங்காய்ப்பட்டினம். பலதரப்பட்ட மக்கள் அங்க வாழுறாங்க. பலமொழிகள் பேசுற மக்களும் வாழுறாங்க. வித்தியாசமான வாழ்க்கை முறை அவங்களுக்கு. அந்த வித்தியாசமான வாழ்க்கை முறை வரப்போ. . . . . தனக்குத் தெரியாமலேயே எங்க காலத்தில் ஒரு கலைஞன் உருவாயிடுவான். நான் படைப்புலகிற்கு வந்ததுக்கு ரெண்டு காரணம். ஒன்று... ஏதோ என் மூதாதையரோட இரத்தம் எங்கிட்டே இருக்கு. இன்னொரு விஷயம் என்னன்னா இந்த ஊருலே உள்ள மக்களுடைய வாழ்க்கை, பலதரப்பட்ட ஜனங்கள் . . . . அவர்களுடைய வாழ்க்கை. . . இந்த வாழ்க்கையை நான் உள்வாங்கினேன். இரண்டாவது, என் தகப்பனார் பெரிய ஒரு கதைசொல்லி, எல்லா தினமும் இரவிலே எங்களுக்குக் கதை சொல்லித் தருவார். என் தகப்பனார் எப்படிக் கதை சொன்னாரோ அப்படியே நான் எழுதினேன். மொழி தெரியாததுனாலே அவர் சொன்னாரு. மொழி தெரிஞ்சதுனாலெ நான் மொழிவாயிலாகச் சொன்னேன். இதுதான் வேறுபாடு.

2.படைப்பு என்பது தன்னுணர்வு வெளிப்பாடு அதற்கு அறஞ்சொல்ல வேண்டும் என்கிற கட்டுப்பாடு இருக்கிறதா?

படைப்புக்குக் கட்டுப்பாடு கிடையாது. அறம் சொல்லுதல் என்பது படைப்பாளியின் மனநிலையை ஒத்து அமைகிறது.